# கிறிஸ்துவின்

# ஞான ஒளி

பிரம்மை

அரு. அருமை நாதன்.

பெரம்பூர் பாரி கலைமன்றம்

சோமசுந்தர விநாயகர் கோவில், 2-வது தெரு,

பெரம்பூர், சென்னை-11.

பாரி கலை மன்ற வெளியீடு — 2

முதற் பதிப்பு: 1969



விலை ரூபாய் 3.00.

அச்சிட்டோர்,

அனுராதா அச்சகம்
146, திருவொற்றியூர் நெடுஞ்சாலை சென்னை-21.

## பொருளடக்கம்

OM

Amicus Curiae Service
B K VENUGOPAL
PLEADER

97, T. V. K. NAGAR,
MADRAS-11.

## *INNER LIGHT*

What we see with our own eyes are all artificial light-But there is an another light which called NATURAL LIGHT It in the wards we can name it as INNER LIGHT Such kind of Inner Light-Wordings will take place in all Saint's Sayings If, anybody follow such kind of sayings, sure they will attain JEEVAN MUKTHI All roads leads to Rome-In the very same way all Sage-Sayings are lead to Salvation, If, one can be able to go through the inner meanings of it My beloved friend Aru Arumainathan has written a book which is called CHRISTHUVIN GNANA OLI. in Tamil and it was placed before me for perusal After Careful study, I come across certain observation Hindu saint's verses are given here and there. I was deeply convinced with the Saint Thayumanavar Padal As a former editor of YOGASANA ALAYA VIJAYAM, Tamil Philosophical-Monthly I would like to comment that if, anybody go through the inner meaning of the poem, Sure they will reslize the way of Salvation.

TO ATTAIN SALAVATION I HOPE, THIS BOOK CHRISTHUVIN GNANA OLI-WRITTEN BY MY beloved friend ARU - ARUMAINATHAN - will guide more

My humble Prayer is this : This book SHOULD CIRCULATE NOT ONLY IN TAMIL NADU but also in the whole world.

*(B. K. Vanugopal)*

# அணிந்துரை

வித்துவான் ம. பொ. புண்ணியகோட்டி
(தொ. து. வே. உயர்நிலைப்பள்ளி சென்னை-1)

உழுவலன்பர், என் ஆருயிர் நண்பர் திரு அரு. அருமை நாதன் அவர்களின் அரிய படைப்பாகிய "கிறிஸ்துவின் ஞான ஒளி" என்னும் நூலைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. இது அவரது முயற்சியின் இரண்டாவது படைப்பாக வெளி வருகிறது. நூலைப் படிக்கும் காலத்து, அதனுள் கூறப்பெறும் செய்திகளனைத்தும் கிறித்துவச் சமுதாயத்தைச் சார்ந்தோர் மட்டுமன்றி, ஏனைய சமயங்களைச் சார்ந்தோரும் ஏற்றுப் போற்றத்தக்கதோர் கருத்துக் கருவூலமாய்த் திகழ்வதை யுணர்ந்தேன். இந்நூலைப் படிக்கும்போது ஆசிரியரின் உள்ளத்தினின்று எழும் உணர்ச்சிப் பெருக்கும் பீறிட்டெழும் கருத்துக்களின் எழுச்சியும் அவரது எழுதுகோலைவிட விரைவுடையன என்பதை யுணர்ந்தேன்.

இந்நூலை உருவாக்கு முடிக்க அவர் மேற்கொண்ட முயற்சியும் ஊக்கமும் அயரா உழைப்பும் அளவிடற்கரியன என்பதை, நூலைக் கற்போர் அறியக்கூடும். நூல் உருப்பெறுவதற்கு ஆதாரமாக நூலாசிரியர், ஏறக்குறைய நூற்றைம்பது நூல்களைப் படித்துணர்ந்ததாகக் கூறினார். ஆயினும், நூலில் பொதிந்துள்ள கருத்துக் கருவூலங்களை நோக்கும்போது, அவர் கூறியதனினும் மேற்பட்ட நூல்களை அவர் ஆராய்ந்திருத்தலும் வேண்டுமென்றே நாம் எண்ண இடமேற்படுகிறது.

ஆசிரியர், தாம் கூற எடுத்துக்கொண்ட பொருளைச் சாதாரண பாமரர் முதலாக மேம்பட்ட கற்றறிவுடையோரும் விரும்பிப் படிக்கு மளவுக்கு எளிய சொற்களால் பொருளை விளங்கக் கூறி, சுருங்கிய மொழிகளால் தெளிவுற உரைத்துச் செல்லும் நெறி ஆசிரியருக்கே யுரிய தனிச்சிறப்பாக அமைந்துள்ளது.

உதாரணமாக இறைவனை நினையாதவர், அவனது திருவடிகளை வணங்கிச் சேராதவர், பன்னூலுங் கற்றவரே யாயினும் நன்னெறிக்கண் செல்லாதவர் என்று கூறுவதோடு இறைவனை வணங்காதவர் வெந்நரகையே அடைவர் என்று இடித்துரைக்கும் முறை மிகச் சிறப்பாக அமைந்துளது. இதனை விளக்கும் பொருட்டு ஆசிரியர் சிறுகதை யொன்றுங் கூறி நகைச்சுவை தோன்ற உரைத்துள்ளார். இறைப்பற்று மாந்தர்க்கு மிகமிக அவசியம் என வற்புறுத்தி இயம்புவதற்கு அவர் காட்டிய மேற்கோள் மிகப்பலவாம்.

இனி, இறைஉண்மையைப்பற்றி எடுத்துக் கூறுங்கால் உலகில் வழங்கப்பெறும் சமயங்கள் பலவாக இருப்பினும், அவையாவும் குறிப்பிடும் இறைவன் ஒருவனே என்பதைப் பல சான்றோரின் வாக்குகளாலேயே ஒப்புக்காட்டித் தாம் சார்ந்துள்ள சமயத்தின் கோட்பாடும் அதுவே என்பதையும் எடுத்துக் கூறுகின்றார் அவ்வண்ணம் சமயக் குரவர்களும் பிறரும் மக்களுக்கு நற்கருத்துகளை எடுத்துக் கூறுந்து, மக்களிடையே சமய வேறுபாடுகளைத் தோற்றுவித்துச் சமயப் பூசலை எழுப்பிவரும் அவர்தம் சிறுமைக்காகப் பெரிதும் மனம் வருந்துகிறார்.

உருவ வழிபாட்டை எடுத்துக் கூறுமிடத்து, இறைவனை ஒரு கணமேனும் உள்ளன்பு பொருந்தி ஒருமையோடு வணங்க உருவ வழிபாடு மக்களுக்குத் தேவையா? வேண்டாவா என வினா வெழுப்புகிறார். இரு கோட்பாடுகளையும் பல சான்றோர்களின் கருத்துகளோடு மோதவிட்டு இறுதியில் உருவ வழிபாடு ஒன்றே மக்கள் உள்ளத்தில் இறைப்பற்றை நிறுவுதற்கு ஏற்ற சாதனம் எனத் தம் கோட்பாட்டைத் திட்ட வட்டமாகக் கூறுகிறார்.

நூலுள்ளே ஆங்காங்கே ஆசிரியரது அரசியற் கோட்பாடுகள் மிளிர்வதைக் காணலாம். ஆசிரியர் தாம் பெற்ற இலக்கிய அறிவிற்கு மூல காரணமாக இருப்பவர் சிலம்புச் செல்வர், திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் என்பதைக் கூறாமற் கூறிப் போற்றுகின்றார். இது ஆசிரியரது தன்னடக்கத்தைத் தெளிவுபடக் காட்டுகிறது.

இந்நூல் ஆசிரியது இரண்டாவது படைப்பு என்பதை முன்னரே கண்டோம். எனினும், சிறந்த நூல்கள் பல எழுதி வெற்றியின் சிகரத்திலே நிற்கும் பிற நூலாசிரியர்களின் பேராற்றல் போன்றே இவ்வாசிரியரின் ஆற்றலும் இந்நூலில் மிளிர்வதைக் காணலாம். ஆசிரியர் மேலும் இது போன்ற பல சிறந்த நூல்களைப் படைத்துத் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் சிறந்த தொண்டு புரிவராக. இத்தகைய நன் முயற்சி அவர்தம் வாழ்நாள் முழுதும் குன்றுது அவர்பால் மிளிர எல்லாம்வல்ல இறைவன் அவருக்கு நல்லாற்றலும் பேரறிவும் நீண்ட ஆயுளும் அளித்து அருபுரிவாராக.


விததுவான ம. பொ. புண்ணியகோட்டி

1. சுப்பிரமணிய சுவாமி கோவில் வீதி,
வியாசர்பாடி,
சென்னை-12.

## இறை வணக்கம்

"மண்ணதனில் மைந்தனாய்த் தவழ்ந்த போதில்
அன்னையென அன்பதனைச் சொரிந்தீர் அன்று
பண்புநிறை பாலகனாய்ப் பயின்ற நாளில்
ஆன்றபேர் அறிவு பெற ஏற்றந்தந்தீர்
மண்மேலே முதியவனாய் வன்மை குன்றி
வகையறியும் புலனழுங்க அமர்ந்திட் டாலும்
விண்ணவரும் மண்ணவரும் போற்றும் எந்தாய்
எம்பெருமான் எனக்கருள வேண்டு வேனே!"

(அருமை)

# காணிக்கை

மனிதன் இவ்வுலகை விட்டு நீங்கி மறைவதற்கு முன், அவனது வாழ்நாளில் ஏதேனும் ஒரு செயல் புரிதல் வேண்டும். அவ்வாறு செய்யும் அச்செயலும் நன்மைதரும் ஒன்றாக இருத்தல் வேண்டும். நன்மைதரும் அச்செயல் புரிவாராயினும், அஃதும் அன்றே செய்யப்படுதலும் வேண்டும். உலகினில் யார் யாரோ, எதை எதையோ செய்கின்றனர். மாட மாளிகை கூடங் கோபுரம் முதலியன அமைத்துச் செல்வம் பெருகப் பெருவாழ்வு வாழ்ந்து, தம் பிற்காலச் சந்ததியார்க்குச் சேர்த்து வைத்துச் செல்கின்றனர். அவரைப்போல் எளியேன், என்னால் பாராட்டப்பெறும் என் அன்புக்குரியார்க்கு எதனைச் சேர்த்து வைக்கக்கூடும்? ஆயினும் என் சிற்றறிவிற் பிறந்தால் ஆக்கி முடித்த இவ்வெழுத்துச் செல்வத்தை இச்சிறு நூலை, அன்னையைப்போல அன்புகாட்டி என்னை எடுத்து வளர்த்துப் பாராட்டி, ஆளாக்கி விட்டு மறைந்த என் ஆருயிரனைய தமக்கையார் திருமதி செபஸ்தி அம்மையார் அவர்களின் மலரடிகளுக்குக் காணிக்கையாக்குகிறேன்.

—அருளயம்.

# இதய ஒலி

பொதுவாக மனிதனின் வாழ்நாள் நூறாண்டுகள் என்பர். அந்நாளையும் நிச்சயமாக உறுதியாகக் கூறவுங் கூடுமோ? முடியாது. "நேற்றுக் கடைத் தெருவில் பார்த்தேன்; இன்று காலை இரயிலடியில் சந்தித்தேன்; இப்போதுதான் அவர் மாண்டனராம்" என்று பேசும் பேச்சுகள் எண்ணற்றவை.

"குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
—உடம்போ டுயிரிடை நட்பு"

என்றார் திருவள்ளுவரும். முன்னே தனித்து நீங்காத முட்டை இன்று தனித்துக் கிடப்ப, அதனுள் இருந்த பறவை பருவம் வந்ததும் பறந்து சென்ற தன்மையது உடம்போடு உயிர் கொண்ட தொடர்பு என்பது அதன் பொருள். என்ப ... முட்டையிலிருந்து வெளிப்படுவதற்கு முன்னும், கருவும் தானும் ஒன்றுபட்டுப் பிறந்து, பின் பெருந்தம வளரயில முட்டை அதற்கு ஆதாரமாயிருந்தது. குஞ்சு முட்டையிலிருந்து வெளிப்பட்ட பின்னர், முட்டைக்கும் தனக்கும் தொடர்பே யின்றிப் பறக்கும் பருவம் அடைந்ததும் பறந்து சென்றது. ஆகவே பறவைக்கு ஆதாரமாயிருந்த முட்டையின் ஓடு தனித்து விடப்பட்டது. அதுபோல, உயிர் பொருந்தி நிற்பதற்கு உடல் ஆதாரமாய் இருந்தது. பருவம் வந்தபோது தான் பொருந்தி இருப்பதற்கு ஆதாரமாயிருந்த உடலைவிட்டு உயிர் நீங்கிறது. இதுவே மனித வாழ்க்கையின் இயல்புமாகும். ஏன்! உயிர் வாழ்க்கையே இத்தகையதுதான்.

மனிதன் தான் செய்யும் தவறுகளுக்கெல்லாம் யார் யாரையோ காரணமாக்கித்தான் தப்பிவிட முயலகிறான். அந்தக் குற்றச் சாட்டுகள் உண்மையானவை தாமா? குற்றங்களைச் சிற்சில சமயங்களில் கடவுளின்மீதும் குறிப்பாகத் தான் செய்யும் தொழில் மீதும் சுமத்திச் சமயத்திற்கு ஏற்ற வாறு கதை அளக்கிறான். அக்கதைகள் கற்பனைகளா?

அல்லது காட்சிப்படுத்தக் கூடியவைகளா என்பதையும் நாம் சற்று ஆராய்ந்து சிந்தித்தல் வேண்டும்.

இந்த ஐயப்பாடுகள் மனித சமுதாயத்தில், குறிப்பாகக் கிறிஸ்துவச் சமுதாயத்தில் தோன்றியிருக்கிறது. சமயம் என்ற கட்டுப்பாடும் மனித சமுதாயத்திலிருந்து நகர்ந்துபோய் விடுமேயானால், நம்பிக்கை என்ற ஒன்றும் சுக்கு நூறாகத் தகர்ந்து சின்னாபின்னமாகிவிடும். ஆகவே எல்லாச் சமயத்தாரும், குறிப்பாகக் கிறிஸ்துவச் சமயத்தாரும், இப்போது நடந்துவரும் நெறியிலேயே மேலும் நம்பிக்கை வைத்து வழி நடக்க இந்நூல் உறுதுணையாகப் பயன்படுவதாக இருக்குமென்றே எழுதத் துணிந்தேன். இதனால் நானடையும் பயன் மக்கள் நடந்து காட்டும் நல்வழியே யாகும்.

எனது முதற் படைப்பாகிய "ம. பொ. சி. கண்ட பாரதி" என்ற நூலுக்கு நீங்கள் அளித்த ஆதரவு பெரிது. அதனை நான் என்றும் மறக்க முடியாது. அந்நூலை எழுதுவதற்கு முன்னரேயே "செங்கோல்" வார இதழில், தலைவர் ம. பொ. சி. அவர்கள் எழுதிக்கொண்டு வந்த "வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு" என்ற தொடர்க் கட்டுரைகளைப் படித்துக் கொண்டு வந்தேன். அப்போதே, சமயச் சம்பந்தமாகக் குறிப்பாகக் கிறிஸ்துவச் சமயச் சார்பாக, ஒரு நூலை எழுதவேண்டும் என்ற ஆவல் எனது இதயத்தின் ஒரு மூலையில் பின்னிக் கொண்டேயிருந்தது. அந்தச் சமயத்தில் எனக்கு ஓரளவு ஆற்றல் இருந்தாலும், எழுதுவதற்கு அஞ்சினேன். காரணம் நான் யார் என்பதே பலருக்குத் தெரியாத நிலை. அப்படி நான் எழுதினாலும் பயன் அளிக்காது என்பதையும் நான் நன்றாக உணர்ந்தேன். ஆம்; எந்த ஒரு தனி மனிதனின் ஆற்றலையோ அல்லது ஒரு பொருளின் தன்மையையோ மக்கள் அறிந்து கொள்ள வேண்டுமானால் அதற்குத் தேவைப்படுவது விளம்பரமே; இல்லை என்றால் விலை போகாது. என்பது தற்கால உலக இயல்பு. அதைக் கருதியே அமைதி கொண்டிருந்தேன்.

"மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்ட பின்பே எந்தக் காரியத்தையும் செய்ய முடியும். மக்களோடு தொடர்பு

கொள்ள அரசியலிலே ஈடுபட்டால்தான் அது சாத்தியமாகும் என்று கருதிய நான் எனது முதல் படைப்பை என் அரசியல் ஆசான திரு. ம. பொ. சி. அவர்களின் பெயராலேயே, அவர் தமிழகத்திற்கு ஆற்றிய அரும்பணிகளைப் பின்னணியாகக் கொண்டு பாரதியின் பாக்களோடு ஒப்பிட்டு மா.பொ.சி கண்ட பாரதி" என்ற ஒரு விமரிசன நூலாக எழுதி முடித்தேன். தோல்வியைக் காணாத தலைவர் வழியைப் பின்பற்றும் நான், வெற்றியின் முகட்டிலே நின்றேன். தமிழ் மக்கள் தாம் என்னை நிறைவைத்தார்கள். அந்த பலனே ம.பொ.சி கண்ட பாரதி" அகில உலக இரண்டாவது தமிழ் மாநாட்டுக் கம்பக கண்காட்சியில் இடம் பெற்றது. ஆகவே மீண்டும் தமிழ் மக்களின் ஆதரவை நம்பியே இரண்டாவது நூலையும் ஆக்கி முடித்தேன்.

திரு. ம. பொ. சி அவர்கள், தாம் வணங்குகின்ற வள்ளலாரைப் பற்றி எழுதினார்கள். உலக மக்கள் பெரும்பான்மையினரால் வணங்கப்படும் கிறிஸ்து நாதரைப் பற்றியும் எழுதினார்கள். அதைப் பின்பற்றும் நானும் வள்ளலாரின் அருட்பாக்களையும், ஐயா அவர்களின் "வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு" என்ற நூலையும் படித்தேன், மகிழ்ந்தேன். அதே நேரத்தில் நான் வணங்கும் கிறிஸ்துவைப் பற்றியும் எழுத வேண்டும் என்று எண்ணினேன்; எழுதியும் முடித்தேன்.

இந்நூலை நான் எழுதி முடிக்க எடுத்துக் கொண்ட முயற்சியினிடையில் அடைந்த துன்பங்கள் எண்ணிலடங்கா. கிறிஸ்துவைப் பற்றி எழுதிய நூல்களையும் தேடித்தேடி அலைந்தேன். சில நூல்களை எனது சிறிய வருவாயிலிருந்து விலைக்கு வாங்கிப் படித்தேன். பல நூல்களைப் பொருள் கொடுத்து வாங்க முடியாத காலங்களில் கண் கலங்கி நின்றேன். அந்த நேரத்தில் என் கண்ணீரைத் துடைத்து நூற்றுக்கணக்கான நூல்களை எனக்கு இலவசமாக அளித்து உதவி என் கனவை நனவாக்கிய அப்பெருந்தகையாளர்களுக்கு நான் என்ன கைம்மாறு புரியக்கூடும்! குறிப்பாக நான் அணுகிக் கேட்ட போதெல்லாம் மன மகிழ்ச்சியோடு நூல்களை எடுத்து வழங்கிய பெருமக்களான பிரம்பை பரிசுத்த லூர்து மாதா. தேவால

யப் பங்கு குருவாக இருந்த திருமறைத் தந்தை, சுவாமி சுலூஸ் S. B. D அவர்களுக்கும் சுவிசேஷ ஊழியர்களான பிரமபை உயர் திரு. பொ இராஜமணி திரு. ச. ஞானப்பிரகாசம் ஆகியோருக்கும், மற்றும் பல நூல்களைக் கொடுத்துதவிய ஏனைய பெருங்குடி மக்களுக்கும் என் இதயங்கனிந்த வணக்கத்தைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

கிறிஸ்துவைப் பற்றியும் குறிப்பாகச் சமயங்களின் ஆராய்ச்சி விளக்கங்களைப் பற்றியும் எழுதுவதென்பது எத்தகைய சிரமமான செயல் என்பதை நான் நன்கு அறிவேன். அதிலும் கிறிஸ்துவைப் பற்றி எழுதுவதென்பது கடலுக்குள் மூழ்கி முத்தெடுப்பதற்கொப்பான செயல் என்பதையும் மிகத் தெளிவாக உணர்ந்தேன். ஆகையால், கிறிஸ்துவின் பெருமைகளையும், பேரின்ப உபதேசங்களையும் குறித்து விவரித்து எழுத இச் சிறியோனுக்கிய என்னால் இயலாத காரியம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி, என்றாலும், எனக்குள்ள மிகச்சிறிய இலக்கிய ஞானத்தை வைத்துக் கொண்டு, எல்லாம் வல்ல எழில் இறைவன் ஏசுபிரானின் கடைக்கண் கருணையைத் துணையாகக் கொண்டு, துணிந்து இச்சிறிய நூல் எழுதினேன். இதில் எனது வெற்றி எம்மட்டில் என்பதை உங்கள் வசமே விட்டு விடுகிறேன்.

ஏழ்மையைப் பொக்கிஷமாக ஏற்று வாழ்க்கை நடத்தும் நான், இந்நூலை எழுதத் துணிந்து ஏற்றுக் கொண்ட இன்னல்கள் கொஞ்சநஞ்சமல்ல ஆம்; ஏழ்மையின் காரணத்தால் விளையும் கொடுமைகள் எவ்வளவு உளவோ அவ்வளவும் ஏற்று நின்றேன். இரும்பைப் பிடித்துத் தொழில் செய்யும் கரங்களிலே எழுது கோலையும் பிடித்து எழுதினேன் சில நேரங்களில் "நமக்கேன் இந்த வீண் வம்பு" என்று என்மனம் என் முயற்சியைத் தடுக்கும். தளர்ச்சியுற்ற நேரங்களில் "தம்பி நீ ஆயிரம் எழுது. ஆனால் ஆண்டவரைப் பற்றி ஒரு மனத்தோடு ஒன்றே எழுது அது போதும்" என்று பூனாவிலிருந்து கடிதம் வரும் பூனா வாழ் தமிழ் மக்களின் இதயப் பீடங்களிலே அன்பாட்சி புரியும் என் அருமை அண்ணா திரு. அரு. அந்தோணிதாஸ் அவர்களின் அறிவுரை என் சோர்வை அகற்றும் அருமருந்தாக

இருக்கும் அந்த இரத்தப் பாசத்தின் சிகரத்திற்கு என் வணக்கத்தையும் அன்பு முத்தங்களையும் அளிக்கிறேன்.

தமிழ் மக்களாகிய நீங்கள் அளிக்கும் ஆதரவும் அன்புமே நான் காண விரும்பும் செல்வம். "நான் இறக்கும் வரைக்கும் நன்மையே செய்தேன்" என்ற பேச்சு மக்கள் வாயினின்று வெளிப்பட்டால் அது ஒன்றே போதும். எழுதுவேன் எழுதிக் கொண்டேயிருப்பேன். நெஞ்சத்தில் நினைவும் எழுதுகோலில் மையும், வெள்ளைக் காகிதமும், ஆண்டவனின் அருளும் இருக்கின்ற வரைக்கும் எழுதுவேன், அவ்வெழுத்துக்கள் மக்கள் சமுதாயத்திற்குப் பயனபடுவனவாக இருக்கட்டும்.

இந்நூலை எழுதும் ஆற்றல, என் இதயத்தில் குடி கொண்டிருக்கும் அன்புத்தலைவர் திரு ம. பொ. சி. அவர்கள் எனக்கு அளித்த இலக்கியப் பிச்சையாகும். என் தந்தைக்கு அடுத்த படி மதித்து வணங்கப்படும் அம்மா மேதையின் பொற்பாத கமலங்களுக்கு என் தலை சாய்ந்த வணக்கம் என்றென்றும் நிலைப்பதாக

சோதனைக் காலங்களில், அச் சோதனையை எதிர்த்து வெற்றி பெற்றவனே மனிதன். சோதனை தனது முயற்சி யையே பாழாக்கிவிடும் என்பதைக் கண்கூடாக அறிந்த பலரில் நான் முதன்மையானவன் என்று துணிந்து கூறுவேன். இந்நூலை அங்கீகரிக்கப் பட வேண்டுமென்று, மேன்மை தங்கிய சென்னை மேற்றரசர் மறை திரு. அருளப்பர் அவர் களிடம் சொன்னேன். அவர் என்னை அன்போடு அமரச் செய்து ஆர்வத்தோடு நான் எழுதியதைப் புரட்டிப் பார்த்துப் புன் முறுவல் கோட்டி, "இதை ஓர் இந்துப் புலவர் தான் பார்த் திருக்கிறார். இது போதாது; இதை ஒரு கிறிஸ்துவத் தமிழ்ப் புலவர் மேற்பார்வை பார்த்தால்தான் நான் அங்கிகரிப்பேன்" என்று ஆணையிட்டு விட்டார். நான் என்ன செய்வேன்.

கிறிஸ்துவப் புலவர்களைத் தேடி அலைந்தேன் பலரைச் சந்தித்தேன், பிரதியைக் காட்டினேன். பிரித்துப் பார்த்தார் கள். "வேறு நல்ல புலவரிடம் கொடுங்கள்" என்று சொல்லி என்னிடமே கொடுத்துவிட்டார்கள்.

"இரவு பகல் பாராது உழைத்த உழைப்பு வீண் போகுமோ என்ற அச்சம் என்னை இரண்டு மாத காலம் பிணி வாய்ப் படுத்திப் படுக்கையில் தள்ளியது.

உயிர் பெற்றெழுந்தேன். மீண்டும முயற்சி, அதிலும் தோல்வி. அந்த நேரத்தில்,

"உடுக்கை இழந்தவன் கை போல—ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு"

என்ற வள்ளுவன குறளை நன்கு அறிந்த எனது வணக்கத்திற் குரிய நண்பர் செயிண்ட் பவுல உயர்நிலைப் பள்ளித் தமிழா சிரியர், வித்வான கோ. மார்க்க பந்து அவர்கள், பணியாற்றும் பள்ளியில் இருக்கும் கிறிஸ்துவப் போதகர் தமழறிஞர் உயர் திரு ரெவரெண்ட் எஸ். எம. ஆதம் அவர்களிடம் என்னை அறிமுகபபடுத்தி எனது இதய தாகத்தைத் தீர்த்து வைத்தார். அதன பயனாக ரெவரெண்ட் ஆதம் அவர்களும் சகோ, திரு. ஜே. ஜான தனபால அவர்களும இந் நூலைச் சீரிய முறையில் பார்த்து மிகச் சிறந்த நற்சான்று அளித்தனர். அந்தப பெருந் தகையாளர்களுக்கு என் வணக்கங்கள் கோடி, கோடி:

சிதறிக் கிடக்கும் முத்துக்களை ஒன்று சேர்த்து மாலை யாக்குவது போல் வைரக் கற்களுக்குப பட்டைத் தீட்டி ஒளி வீசச் செய்வது போல், இந் நூலைப பிழை பார்த்து அச்சேற்ற உதவி புரிந்ததோடு நில்லாமல, அவ்வப்போது எனக்கு அறிவுரை கூறி ஆக்க வழியில் ஊக்குவித்த அனபின் சிகரம் பண்பின வடிவம், சென்னை தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர்நிலைப பள்ளித தமிழ்ப் பேராசிரியர், வித்து வான் மேன்மை தங்கிய ம. பொ. புண்ணிய கோட்டி அவர் களுக்கு என இரு கரம குவித்துத் தலைசார்ந்த கை கூப்பு.

இந் நூலுக்கு ஆதரவு அளித்துப் படிக்கும் அறிஞர் பெரு மக்களுக்கு என் நன்றி. இந் நூலைப் படிக்கும கிறிஸ்துவர்கள், பொதுவாகத் தமிழன்பர்கள் குற்றங் குறைகள் காணின் அவற் றைக் குறித்து எனக்கு எழுதும் அறிவுரைகளை ஏற்று மறுபதிப் பில் திருத்திக் கொள்வேன் என உறுதி கூறுகிறேன்.

இந் நூலை அச்சிட்டு, எல்லாவகையிலும் எனக்கு உதவி புரிந்து அரும்படைப்பாக உருவாக்கித் தந்த சென்னை வண்ணை யம்பதி அனுராதா அச்சகத்தாருக்கும், வெளியிட்டு உதவி புரிந்த பெரம்பூர் பாரி கலை மன்றத்தாருக்கும், மின் நிலைய மன மகிழ் மன்றத் தாருக்கும் என நன்றியும் வணக்கமும் உரித்தாக

இந் நூல வெளியீட்டு விழாக் குழுவினர் அத்தனை பேருக்கும் எனது நன்றி கலந்த வணக்கம் என்றும் இருக்கும். குறிப்பாக விழா குழுத் தலைவரான உயர்திரு டி. ஆம்ரோஸ, பி. ஏ பி. இ. (சென்னை பேசின் பிரிட்ஜ மின நிலைய சூபரன டெனடிங இஞ்சினீயர் ஜெனரேஷன) அவர்களுக்கு நான என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப பட்டுள்ளேன

வயதாலும், அறிவாலும், அனுபவத்தாலும், செய்யும், தொழிலாலும, எவ்வகையில் எடுத்துக் கொண்டாலும் இமய மலை போனற நிலையிலிருக்கும், கலைஞர். நாடக ஆசிரியர் பண் பாளர், பழகுவதில நண்பர், பாராட்டுவதில ஆசான்; பரிவு காட்டுவதில தந்தை, "உழைப்பும உண்மைக்கு வழியாம, சலியா உழைப்பே நலியா இனபம்" என்ற தத்துவத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கும திரு அகஸ்தியா (பி ஆர். இராம கிருஷ்ணன பி. எஸ். சி) அவர்களுக்கு நான எந்த விதத்திலும் நன்றி சொல்லப் போகிறேன! இந்த நூல வெளி வந்திருக்கிறதென்றால், அது அகஸ்தியா அவர்களின் முயற் சியே காரணம என்று சொன்னால மிகையாகாது. அவரு ருக்கு என உயிருள்ளவரை நன்றி செலுத்த கடமைப் பட்டுள் ளேன இதை விட வேறு என்ன நான சொல்ல முடியும்! இந் நூலின முகப்பை அழகு செய்யும் படக் கட்டையை உரு வாக்கித் தந்த உயர்திரு. இராமச் சந்திரன் அவர்களுக்கு எனது வணக்கமும நன்றியும் உரியதாக

அன்பன

அரு. அருமை நாதன்,

சென்னை, பிரம்பை
12—10—1969

# விந்தை உலகம்

உலகமகிழ்ந் தீடேரப் பரலோக
வாசிகளுக் குவகை யேற
அலகையுளந் திகிலேற வகண்டபரி
பூரணனு ரருள் மெய் வாக்கு
விலகிலதாய் நிறைவெரத் துதியேற
நரவுருவாய் விளங்கி யன்பாற்
சிலுவைமிசை யேறிய மெய்ஞ்ஞான
சூரியனடியைச் சிந்தை செய்வாம்.

(இரக்ஷணிய யாத்திரிகம்)

இயற்கை அன்னையின் எழில் பொங்கும் மடியிலே புரண்டு விளையாடும் நாமனைவரும் ஒருதாய் வயிற்றுதித்த மக்களே. விந்தையுலகம் நமக்குக் காட்டும் வாழ்க்கை என்னும் மலை உச்சியின்மீது இருந்து கொண்டு ஆனந்தக் கூத்தாடுகிறோம். ஆனால், அந்த ஒய் யார வாழ்வு ஒருகணம் நின்று மறைந்து விடும் நீர்க் குமிழிக்கு நிகரானது என்பதை நாம் நம் நினைவுக்குக் கொண்டு வருவதே இல்லை காலச்சக்கரத்தின் சுழலிலே மாறி மாறி வருகின்ற அன்றாட வாழ்க்கையை நிரந்தரமானது என்று எண்ணி, நேர்மையற்ற காரியங்கள், நிம்மதியற்ற முயற்சிகள் காலத்தை வீணாகக்கழிக்கத் தக்க காட்சிக்களியாட்டங்கள் இவைகளில் ஈடுபட்டு, என்ன செய்கிறோம் என்பதையும் அறியாமலேயே அவனி வாழ்விலே ஆழ்ந்திருக்கிறோம்.

"நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை"

என்று நில்லாமையினைப் பற்றி, எடுத்துரைத்தார் வள்ளுவனார். நிலைத்தல் இல்லாப் பொருள்களை நிலைத்து நிற்பன என்று கருதுகின்ற அறிவினைப் பெற்றவராய் வாழ்வது இழிவைத் தருவதாகும் என்பதே இதன் பொருள். இது துறவியர்க்கே

கூறப்பட்டது எனக் கூறிட்டாலும், மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும் சிந்தித்து உணர்வதற்கு உரியதே. ஏன் அத்தகைய வாழ்க்கையைத் துய்த்து மனிதன் தன் வாழ் நாட்களைக் கழிக்கக்கூடாது, எனக் கேட்கலாம். அத்தகைய இன்பவாழ்வு வாழவேண்டாம் என்று யார் சொன்னார்? தாராள மாக வாழலாம். ஆனால், எத்துணைச் சொகுசான வாழ்விலே சுந்தரச் சூழலிலே நாளும் நிம்மதியாக வாழ்ந்தாலும் ஒருநாள் நாம் அனைவரும் இந்த உலகைவிட்டு மறையப் போகிறோம் என்பதை மறந்தே விடுகிறோம் அன்றோ!

வசதி படைத்தவன் மேன்மேலும் வசதிகளைப் பெருக்கிக் கொள்ள ஆசைபபடுகிறான். ஆசைக்கோர் அளவில்லை; இவ் வகிலமெல்லாம் தனிக் குடைக்கீழ் நிறுத்தித் தானொருவனே யாய் இருந்து அரசாண்டாலும, விண்ணுலகும பிறவும் தன் னாளுகையின் கீழ்பபடுத்தவே அவன விருமபுகினறான். ஆனால், எண்சாண் அளவேகொண்ட இவ்வுடமபுக்கு எத்துணைப் பரப்பு நிலம் வேண்டும் என்பதை அவன நினைத்துப் பார்ப்பதே இல்லை மண்ணாளும் வேந்தனும் இறுதியில் ஒருபிடி சாம்ப லாய்த்தான் ஆகின்றான. எனினும, அவனுக்கோ சந்ததியே இல்லை; விண்ணை அளாவும அழகு மாளிகை கட்டி, அதன் உச்சியிலே குளு குளு அறை ஒன்றும் அமைத்துக் கீழே இறங் காமலேயே சிறபபான வாழ்வு நடத்துகிறான். இவ்வளவு சிறப் புக்களோடு வாழ்கின்ற பரிதாபத்திற்குரிய அவனுக்கு மனைவி யும் இறந்து பல ஆண்டுகள் ஆகின்றன. இன்று அவன் ஒரு தனிமரமே!

இப்படி எவ்வளவோ மாறுதல்கள் மனித சமுதாயத்தின் வாழ்க்கைச் சூழலிலே ஏற்படுகின்றன. என்றாலும, மற்றவர் கள் பார்த்துத் தன்னிடம் மதிப்புக்கொள்ளவேண்டும் என்ற எண்ணமே அவன் இதயத்திலே இமயம்போல் ஓங்கி நிற் கிறது. இன்றைய மக்கள் சமுதாயமும் அதைத்தானே விரும்புகிறது!

அறிவுக்கும் அனுபவத்துக்கும் மதிப்புக் கொடுத்த காலம் ஒன்று இருந்தது. எழுத்தறிவே பெறாத கிராமவாசிகளும் 'பஞ்சாயத்து' என்ற ஐவர்க் குழுவைத் தேர்ந்தெடுத்து, அன்

றன்று நிகழ்ந்த சிறிய சச்சரவுகள் முதல் பெரிய விஷயங்கள் வரை, இயற்கை அறிவு பெற்றுள்ள காரணத்தால் அவர்களுக்குள்ளேயே தீர்த்து வந்தார்கள். இன்றளவும் சில கிராமங்களில் அந்த முறை வழக்கத்தில் இருந்துகொண்டுதான் வருகிறது. ஆனால், படாடோபத்திலும் பெருமையிலும் ஆழ்ந்து, மெய்யெல்லாம் பொய்யாகவும், பொய் எல்லாம் மெய்யாகவும் மாறி, நீதிமன்றங்கள் பெருகி, அங்கு வழக்காடும் அறிஞர்களும் மிகவாகப் பெருகிக் காணும் இந் நாளில்—உண்மைகள் கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துகொண்டு வரும் இந் நாளில் சர்வேஸ்வரன் கட்டளைகள் விரைந்து உலகத்தில் நிறைவேறும் நாள் நெருங்கிக்கொண்டிருப்பது நன்ருகத் தெரிகிறது. அந்த நாள் நெருங்குவதற்குள் ஒவ்வொரு தனி மனிதனும், தன் ஆன்ம இளைப்பாறுதலுக்காக எப்பாடு பட்டாகிலும் ஞானவழியைத் தேடிக்கொள்ள வேண்டும். அது மிக மிக அவசர அவசியமாகும்.

ஆன்மாவின் இரட்சிப்பு

ஆன்ம இளைப்பாறுதல் என்பது உடனே கேட்டு வாங்கும் கடைச்சரக்கன்று. அல்லது நினைத்தவுடன் எடுத்துக் கொள்ளும் புகைப்படமுமன்று. அதற்கு உண்மையான உள்ளத்தெளிவும், கருணை மனப்பான்மையும், போதுமென்று அமைதியுற்ற மனமும் அவசியம் தேவை. அத்தகைய தகுதியைப் பெற நம்மை நாமே முதற்கண் சரிபார்த்துக்கொள்ள வேண்டும். அதுவே நாம் மற்றவர்களை மேம்படுத்தவும், மற்றவர்கள் நம்மை மதிக்கவும் சமநிலையில் நிறுத்தும் நெறியுமாகும். சமநிலை ஒருவனுக்கு உண்டாவதற்கு மூலகாரணம் தன்னம்பிக்கையே. தன்னம்பிக்கை இல்லாத ஒருவன் மனிதத் தன்மையிலிருந்தே மாறிவிடுகிறான். அந்தத் தன்னம்பிக்கை இல்லாவிடின் நமக்கு உலகில் எவ்வகை நன்மையும் கிடைப்பது அரிது. தன்னம்பிக்கை இல்லாதவர்களுக்கு அவநம்பிக்கையும், மூடநம்பிக்கையும் தான் பெருகி இருக்குமேயன்றி தெய்வ நம்பிக்கையும் இருப்பதரிது.

வெள்ளம் வருவதற்கு முன்னே அணைபோடுவது தான் அறிவுடைமை. வந்தபின் காப்போம் என்பது அறிவின்மையே

புரண்டோடும் பெரு வெள்ளத்திலே சிக்கி "ஐயோ ஆற்றோடு போகிறேன், ஆதரவுதாரீர்" என்று கூவிக் கதறினாலும், பாசத்தோடு வந்து நேசத்தோடு நம்மைக் கரை சேர்ப்பவர் ஒருவரேனும் இரார். ஏன்! அவர் நிலைமையும் அத்தகையதாயின் அவர்தான் யாது செய்தற்கூடும்?

நிலையற்ற வாழ்வு

உலக இன்பமெல்லாம் நிலையானவையன்று நெருப்பின் மேல் சிதறிய நீர்த்துளிகளாக மறைந்துபோகும். பாறையின் மேல் அடிக்கப்பட்ட கண்ணாடியெனச் சிதறுண்டு போகும். அத்தகைய இன்பங்களை எல்லாம் வாழ்க்கையின் ஆணிவேர்களாகக் கருதி வாழும் நாம், பிறருக்கு என்ன நன்மையைத் தேடித் தந்தோம். என நினைத்துப் பார்த்தல் வேண்டும். ஆண்டவனின் படைப்புக்களாகிய கல்லும் கடலும், விண்ணும்-மண்ணும் நீரும்-நெருப்பும், நானிலத்தில வாழும் எல்லாருக்கும் நன்மையையே அளிக்கின்றன ஆனால், பேறறிவாம பகுத்தறிவைப் பெற்றுள்ள நாம, மண்ணதனில் மனிதராகப பிறந்து யாருக்கு எவ்வகையில் பயன் பட்டோம். மரமாய் வளர்ந்திருந்தாலும் மக்கள் தங்குவதற்கு நிழலாவது கொடுத்திருப்போம். மாடாய்ப் பிறந்திருந்தாலும், மழலைமொழி பேசும குழந்தைச் செல்வங்களுக்குப பாலாவது கொடுத்து மகிழ்ந்திருப்போம் ஆறறிவுபடைத்த மனிதவர்க்கத்தில பிறந்த நாம, நம்மை நாமே காத்துக்கொள்வதிலேயே கவனத்தைச் செலுத்தி, அதன மேலேயே கண்ணும் கருத்துமாயிருந்து காலத்தைக் கழிக்கிறோம் எத்தனை நாட்களுக்கு இந்த இருட்பாதையில் சென்று கொண்டே யிருப்போம்!

மெய், வாய கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளையும் ஆண்டவன் கொடுத்தது எதற்காக. நல்லவற்றை உணர்ந்து, நல்லன பேசி, நல்லன பார்த்து, நல்லன நுகர்ந்து நல்ல மொழிகளைக் கேட்பதற்கே சர்வேஸ்வரன் அவற்றை நமக்குப் படைத்தான். அவற்றை நன்னெறியில் செலுத்துகின்றோமா என்பதைச் சுற்றுச் சிந்திக்க வேண்டுவதும் அவசியமன்றோ!

"முறையோடு வாழ்கிறவன் எவனோ, அவனுக்கு
என்றென்றைக்கும் நிலையானதும், என்றென்றும்

நிரந்தரமானதுமான நித்திய சுதந்திரத்தை அடையலாம். அதை அக்கறையோடு அடைய விரும்புகிறவர்கள் எவரோ அவர்களுக்குப் பரலோகத்தில் அந்த பாக்கியங்கள் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருகின்றன ”

என்று வேதம கூறுகிறது. அவைகளை எலலாம எண்ணிப் பார்க்கிறோமா நாம் ? “பரலோகமாவது சுவர்க்கலோகமாவது அவை எங்கே இருக்கின்றன? மோட்சமாவது நரகமாவது அபபெயர் கொண்ட உலகமும் உண்டோ?” எனறெலலாம் நம்மை நாமே கேட்டு ஆறுதல அடைந்து விடுகிறோம. அவற்றை யெல்லாம மனமாற நாம நம்புவதில்லை. ஏதோ எண்ணி அமைதிகொள்ளுகிறோம். இந்த அரைகுறைச் சிந்தனை எத்தனை நாளைக்கு ?

போதுமெனற மனம

நமது அன்றாடப பிரச்சினைகளில் எத்தனையோ அவசர அவசியக் காரியங்களை வெற்றிகரமாக முடித்துவிடுகிறோம். இலலை; முடித்துவிட்டதாக எண்ணி எக்களிப் படைகிறோம. அதிலும போதுமெனற மனமே இல்லை. “போதுமெனற மனமே பொன்செய் மருந்து” என்று சான்றோர் கூறிச் சென்றனர். ஆனால நாம் எதைப போதுமெனறு நிறுத்தி விடுகிறோம்?

சமீபத்தில ஒரு பெரும் புலவரைப் பார்க்க நேர்ந்தது. நலல தமிழ ஞானம் உடையவர். பண்பாடே உருவாகக் கொண்டவர். எளிய வாழ்க்கை; புலவரும் அவர்தம் மனைவியாரும் ஆக இருவரும் சேர்ந்தே தொழில் மூலம் பணம் சம்பாதிக்கிறார்கள் அமைதியான குடும்பம். அவரை நான் சந்தித்துப பேசிக் கொண்டிருந்தபோது, புலவருடைய வீட்டைப பற்றிய பிரச்சினையை நானே எழுப்பினேன் “பக்கத்திலுள்ளவர்கள். எல்லாரும் தம் வீடுகளை மாடிகளாக மாற்றி அமைத்துவிட்டார்களே! நீங்களும் அப்படிச் செய்தால் என்ன?” என்று கேட்டேன். அப்பெருமகனார் சொன்னபதில் இன்றளவும என நெஞ்சத்தை விட்டு அகலவேயில்லை அவர் சொன்னார்; “நான் மாடமாளிகை கட்ட விரும்பவிலலை. இதோ கட்டி யிருக்கும் வீட்டுடன் இரண்டு அறைகளைக் கட்டி

முடித்துவிட்டு, எங்களுக்குத் துணையாக ஒரு குடும்பத்தைப் பக்கத்தில் வைத்துவிட்டால் அதுவேபோதும். அதோடு 'வீடு' என்ற பிரச்சினை முடிந்து விட்டது'' என்று மிக அமைதியோடு கூறினர். அந்த உத்தமரின் மனத்தை யனரே போதுமென்று அமைதியுற்ற மனம் எனக் கூறலாம்.

வீடுநிறைய அடகு மூலம் அடைத்து வைத்த பொருள்கள்; பெட்டி நிறைய பாசி படிந்த நாணயங்கள்; கழுத்து சுமக்க முடியாத—அளவுக்கு மீறிய தங்க வடம்; செலவு செய்தது போக எஞ்சியுள்ள பணம்; சேமிப்பு நிதியிலே சேர்த்து வைத்த குவியல் வேறு; இவ்வளவும் இருந்துங்கூட மேன்மேலும் பணம் சம்பாதிக்க வேண்டும் என்று எண்ணுகிறார்களே, அவர்களைப் போதுமென்ற மனமபடைததவர் என்று கூற முடியுமா? இவ்வாறு பணத்திலும் ஆடம்பரத்திலும் தம மனத்தைச் செல விட்டுப் போதுமென்ற மன நிறைவுற்றுத் தம் நல்வாழ்விற்காகப் பல தந்திரங்களைக் கையாளும் விந்தை உலகத்தை நம்பி எத்தனை நாட்களுக்கு நாம் ஏமாந்துகொண்டே யிருப்போம்?

''உலகம உங்களைப பகைத்தால்,
அது உங்களைப பகைக்கிறதற்கு
முன்னே என்னைப பகைததென்று அறியுங்கள்.

நீங்கள் உலகத தாராயிருந்தால், உலகம் தன்னுடையதைச் சிநேகித்திருக்கும்; நீங்கள் உலகத் தாராயிராதபடியினாலும், நான உங்களை உலகத்தி லிருந்து தெரிந்துகொண்டபடியினாலும உலகம் உங்களைப பகைக்கிறது'' யோவான் 15 : 18-19.

என்று வேதம் நமக்குக் கூறுகிறது. அதை நெஞ்சத்தில் நிலை நிறுத்தி. செயல படுவோமேயானால, நம் வாழ்வு தூய வாழ் வாகத திகழும 'எனபதில' ஐயமில்லை. மேட்டிமையான வாழ் வெல்லாம மேதினியில நிலைத்து நிற்கும் பெருவாழ்வாக எண்ணி நடபபதானது. கண்ணிருந்தும் குருடர்களாக, காதிருந்தும் செவிடர்களாக, வாயிருந்தும் ஊமையர்களாக இருக்கும் நிலையே நீடித்து இருக்கும் என்பதை நாம் உணர்தல் வேண்டும். ஆகவே விந்தையான இந்த உலகத்தைச்

சொந்த இடமாக எண்ணி இருமாந்திருக்காமல் எல்லாம் வல்ல எம்பிரான் இயேசுவின பொன்னடி உலகமே பேருலகமாக நினைந்து வாழ்வதே பெருவாழ்வாகும்.

இருக்கின்ற இடம்விட்டு இடர வில்லை
இல்லாத பொருள்களையும் சேர்க்கவில்லை
செருக்காக நாம் செய்யும் செயல்கள் யாவும்
சீர்கெட்டுப் போயினவே செழிப்பே இல்லை.
வெறுப்பாகப் பார்க்கின்ற விந்தை யாவும்
வெற்றியிலே வேறூன்றி விட்ட தன்மை
மறுப்பார்கள் யார்உளரே மண்ணின் மேலே
மறந்ததெலாம் உலகறி விந்தை தாமே!"

(அருமை)

# மெய்த் துணை

"ஆதியிலே தேவன வானத்தையும
பூமியையும சிருஷ்டித்தார்" —ஆதி. 1·1

ஆம்; இறைவன் வானத்தையும், பூமியையும் உண்டாக்கிஞர். வானத்திற்கும் பூமிக்கும் இடையிலே தோன்றி வளர்கின்ற-வாழ்கின்ற அனைத்து ஜீவராசிகளும், மரஞ்செடி கொடிகளும் சேர்ந்த ஒரு கூட்டுக் குடும்பமே உலகம் உலகம் ஆண்டவன் படைத்த அந்த நிலையிலேயே இன்றளவும் இருந்துகொண்டு வருகிறது என்ருல் அதை யாரும் மறுக்க முடியாது.

குடியிருக்க நாம் கட்டிக்கொள்ளுவதைப் பொதுவாக வீடு என்கிருேம் அது கூரை வேய்ந்த வீடாகவும இருக்கலாம் அல்லது மிகப்பெரிய கட்டடமாகவும் இருக்கலாம். ஆனால், எத்தன்மையனவாக இருந்தாலும், எல்லாம் வீடுகளே அது போல வானவெளியிலே பல கோள்கள் காணப்படினும் அவை யாவும் தனித்தனி உலகம் என்றே கூறப்படும. அவற்றுள் ஒன்று உலகமும். விந்தைகளைக் காட்டி வியக்கத்தக்க முறையிலே நாகரிக வளர்ச்சிக்குத் தக்கபடி அவ்வுலகம மாற்றப்பட்டு வருகிறது. மாற்றப்பட்ட உலகத்திலே மனிதன் எண்ணுவதெல்லாம் பெருமை; அதனுல ஏற்படுவது பதவி; பதவியால் வருவது செலவம; அச்செலவத்தின துணையால உலகத்தில் மனிதன் மேற்கொள்வது இனபவாழ்க்கை. உல்லாசம் மிக்க உயர் வாழ்க்கை. இவ்வாறுதான மனிதன தன வாழ்க்கை நிலையற்றி எண்ணிக்கொள்கிருன். மேற்சொன்ன துணைகளோடு நித்திய வாழ்வு வாழலாம் என்று நினைக்கிருன. இவை யனைத்தும் நிலையானவை தாமா என நினைத்துப் பார்ப்பதே இல்லை.

"உன் பொருளாலும் உன எல்லா விளைவின் முதற்பயனுலும் கர்த்தரைக் கனம் பண்ணு. அப்பொழுது உன் களஞ்சியங்கள் பூரணமாய நிரம்பும்; உன ஆலைகளில் திராக்ஷை ரசம் புரண்டோடும்"

என்று வேதம் நமக்கு அறிவுரை பகர்கிறது. அப்படி யிருந்தும் நாம், எதை எதையோ யார் யாரையோ துணையாகக் கருதி, கருத்தாக இருக்க வேண்டிய காலத்தை எல்லாம் — கர்த்தரின் தூய ஆசீர்வாதத்தைப் பெறவேண்டிய நேரத்தை எல்லாம் பாலைவனத்தில் ஒளி செய்யும் பால் நிலவைப்போல், நம் வாழ்வை எல்லாம் பாழ்படுத்திக் கொள்ளுகிறோம் அப்படிப் பட்ட நல்ல துணையை நாம் நினைத்துப் பார்க்கிறோமா? நம்மைப் போலச் சாதாரண மனிதனை நம்பி, ஆம்; மோட்டார் ஓட்டியை நம்பி மோட்டாரில் குடும்பத்தோடு பிரயாணம் செய்கிறோம். அது வாழ்க்கையில் மேற்கொள்ளப்படும் பிரயாணம் இன்றைக்கோ நாளைக்கோ இன்னும் சற்று நேரத்திலோ, வீட்டிலோ - வெளியிலோ வேறு நாட்டுத் தேசத்திலோ மீண்டும் திரும்பாத ஒரு பிரயாணத்தைச் செய்தல் கூடும். மண்ணுக்குச் சொந்தமான நாம், உடலைக் கார் ஓட்டியிடம் ஒப்படைக் கிறோம். நம் ஆன்மாவை எந்த வாகன ஓட்டியிடம் ஒப்படைக் கப்போகிறோம் சற்றே நினைத்துப் பார்ப்பது ஒவ்வொரு மனித னின் கடமையன்றோ!

என்றும் அழியாது நிலைத்து நிற்கும் - நித்திய வாழ்வை எய்திநிற்கும் அழியாத ஆன்மாவை ஆண்டவரிடம் ஒப் படைக்க வேண்டாமா? அவரை நம்பி நம் வாழ்நாளின் ஒரு பகுதியையேனும் தியாகம் செய்யவேண்டாமா? ஆண்டவனைப் பற்றி உலக உத்தமர் காந்தி அடிகள் நமக்கு விளக்குவதைக் காண்போம்.

"எப்படியோ ஒருவழியில் கடவுள் நமக்கு உதவி புரிய வருகிறார்; நம்பிக்கையை இழந்துவிட வேண்டா வென்றும் நாம் அழைக்கும் போதெல்லாம் தாம் வரத் தயாரா யிருப்பதாகவும், ஆனால் நம் நிபந்தனைகளின் படி யின்றித் தம் நிபந்தனைகளின்படி வருவதாகவும் அவர் நமக்கு உணர்த்துகிறார். இது நான் கண்ட உண்மை. ஒரு தடவைகூடக் கடைசி நேரத்தில் அவர் என்னைக் கைவிட்டது கிடையாது.

(காந்திய [illegible])

அழகாக அலங்கரித்து அடுக்கடுக்காக வாழைத்தண்டு போன்ற விளக்குகளால் ஒளி வீசிக்கொண்டிருக்கும் திருமணப் பந்தலில், சிறு பிள்ளைகள் பலர் சுழல் ஆட்டம் ஆடிக்கொண்டிருக்கிறார்கள். எல்லாப் பிள்ளைகளும் சுற்றிக்கொண்டே இருக்கிறார்கள். ஒரு குழந்தை மட்டும் பந்தற்காலைப் பிடித்துக் கொண்டு சுற்றிக்கொண்டிருக்கிறது. எல்லாப் பிள்ளைகளும் மயக்கம் வந்து கீழே விழுந்துவிட்டன. அவர்களுக்குக் கைகளிலும், கால்களிலும் தலைகளிலுமகாயங்கள் ஏற்பட்டன ஆனால், பந்தற்காலைப் பிடித்துச் சுற்றிக்கொண்டிருந்த குழந்தைக்கு மாத்திரம் எந்தவித விபத்தும் ஏற்படவில்லை. அந்தக் குழந்தைக்கும் மயக்கம் வந்தது; பந்தற்காலைப் பற்றிச் சுற்றிய காரணத்தால அக் கம்பத்தைப் பற்றிக்கொண்டே உட்கார்ந்து விட்டது. அதுபோல நமது துணையற்ற ஆன்ம வாழ்விற்குப் பந்தற்காலைப்போன்ற பரமனின் துணை வேண்டப்படுவதன்றோ!

> மனுஷனுடைய நாட்கள் புல்லுக்கு ஒப்பாயிருக்கிறது. வெளியின் புஷ்பத்தைப்போல பூக்கிறான்; காற்று அதின்மேல் வீசின உடனே அது இல்லாமற் போயிற்று; அது இருந்த இடமும் இனி அதை அறியாது.
> —சங்கீதம். 103; 15-16.

கடைசி நேரம் •

ஆம்! ஏழடுக்கு மாளிகை; ஏகபோகச் செல்வம்; ஏவலாளர் பலர்; காவலாளர் கணக்கற்றோர்; கண்களைப் பறிக்கும் வாகனங்கள், கட்டழகு பொருந்திய மனைவி அட்டைபோல் ஒட்டிக்கொள்ளும் பிள்ளைகள்; இத்துணைச் சிறப்புகளும் நமக்குண்டு. ஆயினும், நம்மீது நாட்டங்கொள்ளும் நண்பர்களும் சுற்றத்தார் உதவிய அனைவரும், நாம இந்த மண்ணுலகை விட்டு மறையும்போது நம்முடன் வருவார்களா? நம் சுற்றத்தார் நம்மைச் சூழ்ந்து நிற்க, காதல மனைவியும், அன்புக்குரிய மக்களும் என அனைவரும் சூழ்ந்து நிற்க, கண்களை உருட்டி, விழியிரண்டும் மருட்சியடைய மங்கிய பார்வையால் அவர்களைக் காணும்போது, விழிக்கடையிலே வெந்நீர் மல்கக் கிடந்து வெளிவிட்ட காற்றை மீண்டும் நாசிவழியே உள்ளிழுக்கவும் முடியாமல் திக்கித்திணறி, ஏதோ பகர்வதற்கு வாயசைத்தும், சொற்கள் உதிரிகளோடு [illegible]

அருகிருப்போர் செவிகளுக்குப் புலனாகாத நிலையில் சொற்களை விழுங்கி வேதனைப் படுகிறோம்.

பாதுகாப்பின் பொருட்டுச் சேர்த்து வைக்கப்பெற்ற பெருஞ் செல்வம் இரும்புப் பெட்டியிலே கிடக்க, அப்பெட்டியின் திறவு கோல் தலையணையின் கீழ் மறைக்கப்பட்டிருக்க, அதனை யெடுக்க விரும்பியும் எடுக்க முடியாத அந்நுணைச்சோர்வை யுணர்கிறோம். நாம் ஓடியாடித் திரிந்த வாழ்நாட்களில், நமக்கு ஏற்பட்ட நீர் வேட்கையைத் தணித்துக்கொள்வதற்கோ அன்றிப் பெருமைக்காகவோ குளிர்ந்த நீர் முதலாகப் பலவகைப்பட்ட இனிய நறுமணமிக்க பானங்கள் எவ்வளவு பருகிவந்தோமே! இன்று அவ்வகைப் பானங்களில் ஏதேனும் ஒன்று உதவுமா? மரணத் துன்பத்தால் துயருறும் நேரத்திலே, அவ்வகைப் பானங்களில் ஒன்றைப் பருக விரும்பி, பாம்பின் படம்போல நாவை வெளியே நீட்டி, இப்பக்கமும் அப்பக்கமும் புரட்டி அசைத்தாலும் குறிப்பறிந்து விரும்பிய பானத்தை ஊட்டு வார் யார்? அந்தோ! நம் விருப்பத்திற்கு மாறாகச் சிறிது பாலை ஒரு சிறு கரண்டியிலெடுத்து நாவின் நுனியிலே ஊற்ற, அது உள்ளிறங்காமல் வாயின் கடைவழியிலே வழிந்தோட, ஐம்பொறிகளும் தம் புலன்களடங்க, அருகிலுள்ளார் தம் மார்பகம் புடைத்துச் சுற்றியழ, அவ்வவலத்தின் ஒலி நம் செவி களுக்குத்தான் கேட்குமா? அந்நகைய நேரத்தில் நமக்குத் துணையாவார் யார்? அவர் யார் என்பதனை நாம் அறிந்தோமா? அந்நேரத்திலே நமக்குத் துணையாக நிற்பவர் ஒருவர் உளர். அவர் யாவர் என்பதனைக் காந்தி அடிகள் சுட்டிக் காட்டு கின்றார்.

"இந்தப் பரந்த உலகிலே யாதொரு உதவியும் ஆதரவும் இல்லாமல், திக்குத் திசை தெரியாமல் இருள் மண்டிய நேரத்திலும் அவருடைய (கடவு ளுடைய) திருநாமத்தின் சக்தி நமக்குத் தெம்பு கொடுக்கிறது. நமது சந்தேகங்களையும் நிர்க்கதி யான நிலைமையையும் துரத்தி விடுகிறது. (சத்திய சோதனை)

பணம் படைத்தபோது, அழியும் இவ்வுடலுக்கு உறுதுணை [illegible]

திருந்தபோது குளத்தைச் சூழ்ந்து பல்லினப் பறவைகளும் ஆரவாரித்திருக்கும். அக் குளம் நீர் வற்றி வறண்டபோது, அக் குளத்தை நாடி ஒரு காக்கையேனும் செல்வதுண்டா அது போலச், செல்வம் அழிந்து வறுமையால் துயருறுவாராயின், முன்னே வானத்தில் இருந்து ஒளிவீசும் நட்சத்திரங்களைப் போலச் சூழ்ந்திருந்த உற்றார் உறவினராதாம் நெருங்குவாரோ? அது கிடக்க, அன்புடையார் புடைசூழ வீற்றிருந்த வாழ்க்கை கழிந்து அவன் பிணமானால், பிணம் வீட்டில் இருக்கும்வரை உற்றார் உறவினர் என்போர் அப் பிணத்தைச் சூழ்ந்து இருப்பர். உயிரற்ற அவ்வுடலை இடுகாடுகொண்டு செல்லும் போது, அது வெளியே வந்தவுடன் ஈன்றெடுத்த தாய், உடன் பிறந்த சகோதரன், சகோதரி, காதல் சேர் மனைவி, அவரின் இருப்பிடமாம் மகள், மகன் என இவர் அனைவரும் வீதியோடு கழிந்து போவார். பின்னர் ஈமக்கடன் கழிப்பதற்கென்றே இடுகாடுவரை தொடர்வர். மற்ற உறவினரும் மக்களும் பிணக்குழியில் உடலைவைத்து விட்டதோடு ஒருபிடி மண்ணை யும் அவ்வுடலின்மேல் இட்டுவிட்டால் அவர் கடமை முடிந்தது அனைவரும் போய்விடுவார்; அவ்வுடலைப்பற்றி அவர்களுள் யாரேனும் ஒருவர் சிந்திப்பாரா ?

"பெருவயிறு வயிறுவலி படுவன வர இருவிழிகள்
பீளைசாறிட ஈளைமேலிட
வழுவழென வுமிழுமது கொழுகொழென வொழுகிவிழ
வாடியூனெலா நாடிபேதமாய்
மனையவள் மனமவேருய்

மனுதமனு கெனுமனையி லனுதினமு மனையுமொரு
மாதர்சீயென வோலர்சீயென
கனவுதனி விரதமொடு குதிரைவர நெடியசுடு
காடுவாவென வீடுபோவென
வலதழிய விரகழிய வுரைகுழறி விழிசெருகி
வாயுமேலிட வாவிபோகுநாள்
மனிதர்கள் பலபேச
இறுதியிதோ டறுதியென வுறவின்முறை கதறியழ
வேழைமாதரார் மோதிமேல்விழ

வெனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
வீழுலோவென வாயையாவென
விடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு—தவிலறைய
ஈமதேசமே பேய்கள் சூழ்தர
வெறிதனிவிடும் வாழ்வே"

என அருணகிரிநாதர் எவ்வளவு அறிந்து தெளிந்து கூறியிருக்கிறார்! அந்த நேரம் பயங்கரமான நேரமல்லவா! அந்த நேரத்தில கருத்தோடு பலவகையாய்ப பாதுகாத்து வரப் பெற்ற அவ்வுடலுக்கு யார் துணை ?

"பழுமையாய்ப போகாத பணப்பைகளையும், குறையாத பொக்கிஷத்தையும பரலோகத்திலே உங்களுக்குச் சம்பாதித்து வையுங்கள்; அங்கே திருடன அணுகுவதுமில்லை; பூச்சி கெடுப்பதுமில்லை. உங்கள் பொக்கிஷம் எங்கே இருக்கிறதோ அங்கே உங்கள் இதயமும இருக்கும்" லூக்கா; 12 : 33-34.

ஆம்; நாம் இறக்கும்போது நமக்குத் துணையாக எதை நாம் நாட வேண்டுமோ அந்த சர்வேஸ்வரனின திருநாமத்தை மறந்தே விடுகிறோம. அதனை மறந்து, நாம சேர்த்து வைத்த செல்வத்தின்மேலதான நம் மனம் நிலைக்கிறது. வேறெங்கும் செல்லாது. உலகியல நெறியிலே ஊறிவளர்ந்த நாம் அதனை மறக்கக் கூடாதவராய் விடுகிறோம இவ்வியல்பை வேதம் நமக்கு உணர்த்துகிறது. உயிரோடு பொருந்திய உணர்வு கலங்காமல் இருக்கும்போதே இறைவனின் திருவுருவை மனக் கண்ணால உணர முற்படு. அவரது திருநாமத்தை என்றும் போற்று என்று உணர்த்துகிறது. வைணவ அடியார்கள் பன்னிருவருள் ஒருவரான குலசேகர ஆழ்வாரும இதனைத்தான் வலியுறுத்தி,

"அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்
தென்னரங்கத்தம்மான் "

என்று கூறினர்.

நமது தேவைக்குமேல் பொருள் சேர்த்து வைக்க ஆசைப் படுகிறோம். அப்படி ஆசைப்படுவது நன்மை தருமா?

**ஆசையே எல்லாத் துயரங்களுக்கும் மூலகாரணம். உலக உத்தமர் காந்திஅடிகள் அதுபற்றிக் கூறுவதனைக் காண்போம்.**

நாம் எல்லாரும் திருடர்கள் என்றே சொல்ல வேண்டும். என்னுடைய அவசியத்துக்குமேல் இந்தச் சமயம் எனக்கு வேண்டாதது ஒன்றை நான் எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்தேனானால், அதை நான் திருடியவனே ஆவேன். மற்றவர்களின் அவசியத்துக்கு வேண்டியதான ஒன்றை அவர்களுக்குக் கிடைக்காமல் நான் முடிந்து வைத்தால், அது திருட்டே அல்லவா? மக்கள் சமூகத்துக்கு வேண்டியதை இயற்கை அன்னை தருகிறாள். அவனவனுக்கு வேண்டியதை அவனவன் அந்த அளவில் மட்டுமே எடுத்துக்கொண்டு வாழ்ந்தால் இந்த உலகத்தில் பிச்சை எடுக்கும் ஏழைகள் என்பாரே இருக்கமாட்டார்கள்; யாருமே பசியால் சாகமாட்டார்கள்''

—ர தி திராகவ - (காந்திஜீ-1918)

திருடர்கள் யார் என்பதை இப்போது நன்றாகப் புரிந்து கொண்டோம். இனி, நாம் நம் தேவைக்கு மேல் சேர்த்து வைக்கலாமா! அப்படித்தான் சேர்த்துவைத்தாலும் அவை எத்தனை நாட்களுக்கு நீடிக்கும்? எவ்வளவு அழியாச் செல்வமும் அசையாக் கட்டடமும், ஆணவமிக்க அதிகாரமும் இருந்தாலும் அவை எல்லாம் ஆடம்பர வாழ்க்கைக்குப் பொய்யான வாழ்விற்கு உரியனவே. அவை உலகத்தின் சிற்றின்பங்களுக்குத்தான் பயன்படுமே யன்றிப் பேரின்ப உலகத்திற்குப் பயன்படமாட்டா என்பதை உலகப் பொது மறையைத் தந்த வள்ளுவப் பெருந்தகையும்,

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு"

என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கிறார். "ஆண்டவன் அருள் இருந்தால் தான்-அழியாத அருள் துணை இருந்தால் தான் அவ்வுலகை நாம் அடைய முடியும்" என்று சொல்லுகிறார்.

மன அமைதி

நம் மனத்தை அமைதிப் படுத்துவதற்கு அந்த அமைதிக்கு வழி தேடுவதற்கு—அந்த வழிக்கு ஒரு துணையை நாடுகிறோம். அதற்காக எத்தனை எத்தனைக் கதைப் புத்தகங்களைக் கட்டுரைக் களஞ்சியங்களைப் படிக்கிறோம். காமக்கதை, துப்பறியும் புதினங்கள், மகா மாயாஜால இந்திர தந்திர மந்திர மர்மப் படு கொலைகள், மேல்நாட்டு நூதனக் கதைகள். ஆகிய அனைத்திலும் ஆழ்ந்து விடுகிறோம் அவை அனைத்துங் கூட நம் மன அமைதிக்குத் துணையாகிவிட முடியுமா?

> "மனுஷனுடைய இருதயத்திலிருந்து பொல்லாத சிந்தனைகளும், விபசாரங்களும், வேசித்தனங்களும், கொலை பாதகங்களும், களவுகளும், பொருளாசைகளும் துஷ்டத்தனங்களும், கபடும், துராதனமும், பெருமையும், காமவிகாரமும், வன்கண்ணும், மதிகேடும் புறப்பட்டுவரும். பொல்லாங்கானவைகளாகிய இவைகளெல்லாம் உள்ளத்திலிருந்து புறப்பட்டு மனுஷனைத் தீட்டுப்படுத்தும்." —(மாற்கு 7 : 21-23)

நாடகம் படக்காட்சி, கண்காட்சி மற்றும் எத்தனையோ வேடிக்கை விநோதங்களைப் பார்த்து நம் மன அமைதிக்கு உறுதுணையைத் தேடுகிறோம். அவைதாம அமைதியைத் தருகின்றனவா? இத்தனைக்கும் மேலாக நமக்கு உண்மையான துணை உறுதுணை எதுவென்று புரியாமலேயே நம் மனத்தை, அது செல்லுகின்ற இடமெல்லாம அலையவிட்டுச் சொல்லொணா வேதனைகளுக்கும், சோதனைகளுக்கும் இலக்காகின்றோம். அதை மெய்யாகவே உணர்ந்த அருட்பெருஞ் சோதி இராமலிங்க வள்ளலார் கடந்ததையும், நிகழ்ந்ததையும், நேர்வதையும் எண்ணி,

"படித்தேன் பொய்யுலகில் நூல்கள் எந்தாய் நீயே
படிப்பித்தாய் அன்றியும் அப்படிப்பில் இச்சை
ஒடித்தேன் நான்ஒடித் தேனோ ஒடிப்பித் தாய்பின்
உன்னடியே துணையென நான் உறுதியாகப்

பிடித்தேன் மற்றதுவும் நீபிடிப் பித்தாய்
இப்பேதையேன் நின்னருளைப் பெற்றோர் போல
நடித்தேன் எம்பெருமான் ஈதொன்றும் நானே
நடித்தேனோ, அல்லது நீநடிப்பித் தாயோ,"

என்று கூறினர். தாம் செய்த செய்கின்ற-செய்யக்கூடிய எல்லாத் தவறுகளையும் தன்னை ஆட்கொண்ட ஆண்டவன் மேல சுமித்தி, "உன்னையே துணை கொண்டு விட்டேன் சர்வேசா; முன்னால் செய்தவைகளை நீயேதான் செய்ய வைத்தாயோ. இப்போது நடப்பதையும் நீயேதான் நடத்துவிக்கின்றாயோ! இனி நிகழ இருப்பனவற்றையும் நீயேதான நிகழ்த்துவிப்பாயோ உன் நியதியை நானறியேன். ஆகையினாலே உன்னை நான துணையென நம்பிவிட்டேன் இனி எல்லாம் உன்னருளே" என்று துணையெனத் தாம் பிடித்த தூயவனமீதே குற்றத்தையும் சாட்டிக் குறையிலலா மன அமைதிக்குத்துணை தேடிக் கொண்டார் வள்ளல பெருமான, அப்படி நாம கிருஸ்து பெருமானிடம துணை தேடிக்கொள்ள வேண்டாமா!

மரத்திற்கு வேர் துணை; மண்ணுக்கு விண் துணை; மாநிலத்திற்கு மன்னன் துணை. ஆனால் உணர்வு அடங்கி, உடல் ஒடுங்கும இறுதிக் காலத்தில் அநாதையாகப் பிரிய இருக்கும் அழியாத நம் ஆன்மாவுக்கு யார் துணை. நினைத்துப் பாருங்கள்!

என்றுமே நாம வாழ்கின்ற இடத்திலேயே இருந்துவிட முடிவு செய்து விட்டோமா! வேறெங்கும் நாம் செல்லவே மாட்டோமா! அப்படி ஒன்றுமில்லையே. முடிவு செய்து இங்கேயே தங்கிவிடத்தான நம்மாற் கூடுமா? அவ் வண்ணம் தங்கியவர் ஒருவரேனும இந்த உலகில் உண்டா? நாம எல்லாரும் நிட்சயமாக ஒருநாள் போக வேண்டிய இடம் ஒன்று இருக்கிறதே! அதைப்பற்றி நாம் நினைத்துப் பார்க்க வேண்டவா?

ஒரு நண்பர் தன் நண்பர் ஒருவரைப் பார்த்து, "எங்கே இருக்கிறாய் நண்பா" என்று கேட்டார். அதற்கு அந்த நண்பர் "நரகத்தில் தான் இருக்கிறேன்" என்று அடிக்கடி சொல்வார். ஆண்டுகள் பல கழிந்தன. நரகத்தில் இருப்ப

தாகச் சொன்ன நண்பர் இறந்தும் போனார். அவர் சொல்லி வந்தது போல் நரகத்திற்கே போய் விட்டார். அங்குப்போன அவர் நிகழ்ந்த காட்சிகளைக் கண்டு உடல் நடுங்கிக் கண்ணீர் விட்டார். பாவம் செய்தவர்களையும, பிறருக்குத் தீங்கிழைத் தவர்களையும், தாய் தந்தையர்களுக்கு அடங்காதவர்களையும், பொய்ச்சாட்சி சொன்னவர்களையும் பேராசைக்காரர்களையும், இன்ன பிறரை எலலாம், வாளால் அறுத்தும், எண்ணெய்க் கொபபரையில் பொசுக்கியும், பாம்புக்குழியில தள்ளியும செக்கி லிட்டு ஆட்டியும், எரியும் நெருப்பில தள்ளியும் தண்டனை கொடுப்பதைக் கண்டு அவர் அஞ்சி நடுங்கினார். ஐயையோ! எனக்கு நரகமவேண்டவே வேண்டாம. தயவு செய்து என்னை மோட்சத்திறகுக் கொண்டு போய்விடுங்கள் என்று கூக்குரலிட் டார் அங்குத் தண்டனை கொடுக்கும் அதிகாரி, "தம்பி உனனை அவசியம மோட்சத்திறகுக் கொண்டுபோய் விடுகிறேன்; ஆனால் நான சொலவது போல செயது விட்டால நிச்சயம் உனக்கு மோடசம கிடைக்கும்.' என்று சொல்லிப் பெரிய மட் பாண்டம் ஒன்றின உடைந்த அடிபபாகத்தைக் கொடுத்து அதற்குப்பதில வேறு ஒரு மணபாத்திரத்தை வாங்கிவரச்சொன் னார்.

பூலோகத்தை அடைந்து ஒரு குயவனை அணுகினார் அவர். உடைந்த பானைக்குப பதில மறறொரு மட்பாண்டம் கேட்டார். குயவன் நரகவாசியைப் பார்த்து அலட்சியமாகச் சிரித்து, தம்பி செம்பு, பித்தளை, ஈயம, வெள்ளி, பொனனாக இருந்தாலும் அதறகுச் சமமாகப பிற பாத்திரங்களைக் கொடுக்கலாம். ஆனால், இந்த மட்பாண்டத்திற்கு எதையும் கொடுக்க முடியாதே" எனறு சொன்னார். "ஐயா இவ்வளவு பெரிய பானைக் குப்பதில ஒரு சிறு மட்பாண்டம கொடுக்கக் கூடாதா" என நரகவாசி கேட்க, "தம்பி உடைந்த பானை எவ்வளவு பெரிய தாக இருந்தாலும யாது பயன? அதை மீண்டும் மண்ணாக்கி மண்ணோடு கலக்க முடியுமா? அது சுட்ட மண்பானையப்பா— சுட்டமண்பானை" என்று குயவர் சொலல நரகவாசி, மீண்டும் நரகத்திற்குச் சென்று, தண்டனை அதிகாரியிடம் நடந்ததைச் சொன்னார். அதிகாரி அவரை நோக்கி "தம்பி சுட்ட மண்பானை

எப்படி மீண்டும் வேறு பாண்டம் செய்யப் பயன்படாதோ, அது போலவே நரகத்திற்கு வந்துவிட்ட ஒருவன், மீண்டும் எங்கும் செல்ல முடியாது" என்று சொன்னார். மண்ணே மண்ணுக்குத் துணை நிற்காதபோது, நமக்கு மட்டும் யார் துணை நிற்பார்? தெய்வந்தானே துணை. அந்தத் தெய்வமாம் கிறிஸ்துவை மறந்து வேறு யார் துணையை நாம நாடப்போகிறோம். ஆகவே

"துணையென்று நினைப்பனதாம் துணைகளாமோ
துலங்கநிற்கும் திண்மையெல்லாம் தூய்மையாமோ
அணைகட்டி உயர்ந்துவிட்ட ஆழ்தேக்கந்தாம்
ஆதவனின் வெம்மையினால மீண்டதில்லை.
இணையற்ற இலவாழ்வின் இனிய தன்மை
எப்போதும் எல்லையிட்டு இருந்ததில்லை.
பிணைந்து நிற்கும பிரியசுதன் கிறிஸ்து நேசம
பிறப்பிற்கும் இறப்பிற்கும் துணையாகுமே!

(அருமை)

# தெய்வத்துள் தெய்வம்

மனிதன் உலகில் பிறக்கிறான்; வாழ்கிறான்; முடிவில் மடிந்தழிகின்றான். 'உயிர்' என்று சொல்லப்படும் பலகோடி ஜீவராசிகளும், இவ்வியற்கைக்குப் புறம்பானவை யன்று. ஏன்! உலகில் தோன்றிய எல்லாப் பொருள்களும் இவ்வுலகமும் பிறகோள்களும் கூடச் சர்வேஸ்வரனின் ஆணையின் வண்ணம் ஒருநாள் அழியத்தக்கனவே! உலகப் பொருள்களை ஆன்றோர்கள் இருவகையாக "உயர்திணை, அஃறிணை" என்று பகுத்தனர். பகுத்தறிவுள்ளன, பகுத்தறிவற்றன என இருவகைப் படுத்தப் பெற்றுள்ளமையை நாம் அறிவோம். பகுத்தறிவுள்ள மனிதனே ஆக்கத்தையும் அழிவையும் தோற்றுவித்துத் தானும் அழிந்து போகும் நிலையை எய்தக் கூடியவனாக வாழ்கிறான் எப்படியானாலும் மானிடப் பிறவி மேம்பட்டது என்று கூறப்படுகிறது ஆகையால்தான்,

"அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது, மானிடராய்ப் பிறந்த காலையும் கூன் குருடு செவிடு பேடு நீங்கிப் பிறத்தலரிது."

என்று கூறிச் சென்றார் ஔவையார். மனிதர்களாய்ப் பிறப்பது பெருமை யன்று. ஆனால், யாதொரு ஊனமும் இல்லாத பிறப்பே சிறந்தது என்று சொல்லுவார்கள். அப்படி ஓரளவு மனிதர்களாகப் பிறந்துவிட்ட நாம் இன்ப வாழ்வு வாழ வேண்டும் என்று நினைப்பதில் தவறேதுமில்லை.

மனித வாழ்விற்கு மூன்று பேறுகள் அவசியம் தேவை. நிச்சயமாய் இருந்தே தீரவேண்டும் என்பதும் உலக நியதி. அதனை நம் சான்றோரும் மிகத் தெளிவாக வரையறுத்துக் கூறிச் சென்றனர். மனித சமுதாயத்திற்குச் "சங்கம், லிங்கம், குரு" என்ற மூன்றும் இன்றி யமையாதன. ஆம்; உலக வாழ்விலே நுழைந்துவிட்ட மனிதன், ஒரு சங்கத்தில் அங்கம் வகிக்கவேண்டும்; ஒரு குருவினிடம் பயிற்சி பெறவேண்டும்; ஒரு கடவுளிடம் பக்திகொள்ளல் வேண்டும். தற்காலத்தில்

இவை மூன்றையும் கடைப்பிடிக்காத மனிதன் ஒருவனும் இருக்கமாட்டான். இருக்கவும் முடியாது.

சங்கம் என்று நாம் நினைக்கின்றபோது, நமக்கு உடனே தோன்றுவது அரசியல் கட்சிச் சார்புடைய சங்கங்களும் பிறவும்தான. 'லிங்கம' (கடவுள்) என்று சொன்ன உடனே அவரவர் கைக்கொள்ளும் சமயமும் கடவுளும்தான் நினைவில் வரும். எச்சமயத்தையும் சாராத அல்லது கடவுள் நம்பிக்கையே இல்லாதவாகளுங்கூட, "ஒன்றே குலம் ஒருவனே தேவன" என்று சொல்லித் தங்கள கடவுள் கொள்கையை வெளிபபடுத்திக் கொள்ளுகின்றனர். மற்றும் 'குரு' என்று நினைக்கின்றபோது பல குருமார்கள் நினைவுக்கு வருகின்றனர். அவரவர்கள் எண்ணங்களிலே அவர்கள் நிறைந்து நிற்கின்றனர். அந்த குருமார்கள் யாவரும மதம், கலவி, தொழில், வித்தை முதலியவற்றின் ஆசிரியர்களாவர் அத்தகைய குருக்களே அவரவர்களுக்கு ஆசிரியர்களாகக் காட்சி யளிக்கின்றனர். ஆனால கிறிஸ்துவச் சமயத்தைப் பொருத்தமட்டில் எத்தனை வேறு வேறு சஙகம், லிங்கம் குருக்கள் என இருந்தாலும, நம அந்நியக் காப ஆன்ம இளைபபாறுதலுக்காக, மிக முக்கியமாகச் சஙகம் என்று சொலலும்போது, நம் முன் நிற்பது கிறிஸ்துவின திருச்சபையாகத்தான் இருக்கவேண்டும். 'லிங்கம' என்று அதாவது கடவுள் என்று நினைக்கின்றபோது, நம் முன்னும, மனக்கோவிலிலும், இங்கு, அங்கு ஏனதபடி எங்கும் நிறைந்திருக்கும் ஏசுநாதனாகிய கிறிஸதுநாதனே கடவுளாக இருக்கவேண்டும். குரு என்ற சொலலை நாம கேட்கின்ற போது, நமது இன்பம, நமது துனபம, நமது வாழ்வு, நமது மரணம, ஆகிய எலலா நிகழ்ச்சிகளுக்கும் உதவியாளராகவும், ஊக்கம். அளிப்பவராகவும், உண்மைக் குருவாகவும விளங்கக் கூடியவர்களாகச் சத்திய வேதத்தின் குருமார்களான அவர்கள் தான் மிளிரவேண்டும, என்பதை ஒவ்வொரு கிறிஸ்துவ மகனும், மகளும் உணர்வார்களேயானால், கிறிஸ்துவ மதம் மேலும் சீரும் சிறப்பும பெற்று விளங்கும் எனபது திண்ணம்.

அப்படிச் சொலலுகினறபோது, மற்றச் சமயங்களை-சமயத் தலைவர்களை — கடவுளர்களை இழிவுபடுத்துவதாகவோ அல்லது எதிர்பபதாகவோ, எண்ணிவிடக்கூடாது. ஆனாலும்

சில உண்மைகளை நாம் சொல்லியே ஆக வேண்டும் அவற்றில் சில மற்றவர்களால் மறுக்க முடியாதவைகளாகவும் இருக்கவும் கூடும்.

புதிய சகாபதம !

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னால், வளளுவப் பெருந்தகை யும், புத்தபெருமானும், தோன்றி இருக்கிறார்கள். அவர்கள் பிறந்த காலத்தையும், மறைந்த காலத்தையும் இதுவரை யாரும் வரையறுத்துக் கூறவில்லை. புத்தபெருமானின் தோற் றத்தை ஒருவாறு வரையறுததுள்ளனர். ஆயினும் திருவள் ளுவரின் காலத்தை வரையறுத்துக் கூறவோ முடியாததாய் உள்ளது இத்தனையாவது நூாறாண்டில் இருந்திருக்கக் கூடும் இருந்திருக்கலாம்'' என்று சொல்லுகிறார்களே தவிர, இருந்தார்; அவர் பிறந்த தேதி இது அலலது காலம் இது என்று இதுவரை யாரும் கூறியதாகச் சரித்திரமில்லை அப்படி ஏதாவது ஒருநாளைக் குறித்துச் சொன்னவர்களை மீண்டும் மறுத்துப் பேசியதை நாம் கேட்டிருக்கிறோம்.

இந்துமதப் போதகர்களும் வழிகாட்டிகளு மான, அப்பர், சுந்தரர் மாணிக்கவாசகர், தாயுமானவர், பட்டினத்தடிகள் சங்கரர், இராமனுஜர் முதலிய ஞானப்பண்டிதர்களின வரலாறுகளுங்கூட அவர்களின பிறப்பு, இறுதி முதலிய கால நிர்ணயங்களைத் தெளிவாக எடுத்துக் கூறததக்க ஆதாரங் கள் இலவாயின.

கிறிஸது மகானை பொருத்த மட்டிூ ஒரு புதிய சமுதாயத் தைப்—புதிய சகாபதத்தை உருவாக்கியிருக்கிறார்கள், என பதை யாராலும் மறுக்க முடியாது உலகை தோன்றிய நாளை யாரும் அறிந்திலர்; கண்டிலர். ஒரு பெரும் பொருள், சக்தி பரிசுத்த ஆனமா, அகிலம படைத்த ஆண்டவன ஒருவர் இருக்கிறார் எனபதாக—பரமபிதா ஒருவர் இருபபதாக வேதம் சொல்லுகிறது.

''ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஸ்டித்தார். பூமியானது ஒழுங்கினமையும், வெறுமையுமாய் இருந்தது. ஆழத்தின் மேல் இருள்

இருந்தது. தேவ ஆவியானவர், ஜலத்தின்மேல் அசைவாடிக் கொண்டிருந்தார்"

(ஆதி 1—1—2)

இதை நாம் சிந்திக்கிறபோது சர்வத்துக்கும் வல்ல சர்வேஸ்வரன ஒருவர் தமக்குத் தாமே மெய்யான ரூபமாய் இருந்திருக்கிருர் என்பது புலனாகிறது. சர்வேஸ்வரனின் பிரதி பிம்பமாகக் காட்சி யளிக்கிருர் கிறிஸ்து நாதர். அந்த பரமபிதா யாராக இருக்க வேண்டும் என்பதை இக்காலத்தில் இந்திய நாட்டின் பகுதியான தமிழகத்திலே பிறந்து வளர்ந்து மறைந்த அமரகவிபாரதியார் மிகத் தெள்ளத்தெளிவாகக் கூறிச்சென்ருர்.

"வானில் பறக்கின்ற புள்ளெல்லாம் நான,
மண்ணில் திரியும் விலங்கெலாம் நான
கானில் வளரும் மரமெலாம் நான,
காற்றும் புனலும் கடலுமே நான்.
விண்ணில் தெரிகின்ற மீனெலாம் நான,
வெட்ட வெளியின் விரிவெலாம் நான,
மண்ணில் கிடக்கும் புழுவெலாம் நான,
வாரியினுள் உயிரெலாம் நான,
மந்திரங்கோடி இயக்குவோன நான,
இயங்கும் பொருளின் இயலெலாம் நான்,
தந்திரங்கோடி சமைத்துளோன நான,
சாத்திர வேதங்கள் சாற்றினேன நான்;
அண்டங்கள் யாவையும் ஆக்கினேன நான,
அவை பிழையாமே சுற்றுவோன நான,
கண்ட பல சக்திக் கணமெலாம் நான்
காரணமாகிக் கதித்துளோன நான்
நானெனும் பொய்யை நடத்துவோன நான்
ஞானச்சுடர் வானில் செல்லுவோன நான்.
ஆன பொருள்கள் அனைத்திலும் ஒன்ருய்
அறிவாய் விளங்கு முதற் சோதி நான்".

என்று எல்லாம் வல்ல பரம பிதாவை நமக்கு நினைவுப் படுத்து கிருர். ஆம், வானில் பறக்கின்ற பறவையினங்கள், நிலத்தில் வசிக்கும் ஜீவராசிகள், வனங்களிலே வளர்கின்ற மரங்கள்

காற்று, நெருப்பு, கடல், ஆகாயத்தில் பளிச்சிடும் நட்சத்திரங்கள், பரந்து விரிந்து கிடக்கின்ற நிலப் பரப்பு, பூமியிலே ஊறும் புழுப் பூச்சிகள், பாறைக்குள்ளே யிருக்கும் உயிர்கள் அனைத்தும் நானாக இருக்கிறேன். அவை மட்டுமன்று, மந்திர தந்திர மாயா ஜால மர்ம விநோதங்களும், சுத்த சனமார்க்க சாத்திர வேதப் புராண இதிகாசங்களும் ஆக அனைத்துமே நானாக இருக்கிறேன். பூலோகப் படைப்புக்களையும், அவை, கள் இயங்கும் சக்திகளையும்; பேய் பிசாசு சூனியங்களையும், ஆக்கி அடக்கி ஒடுக்கிய பொய்யான கற்பனையான நான் எனனும் அகங்கார ஆணவத்தை அழித்து ஒழிப்பவனும் நானாக இருக்கிறேன். அகிலத்திலிருக்கும் அசைவன அசையாதன, பேசுவன, பேசாதன, அனைத்தையும், ஆள்பவனாக, அறிவாய், தெளிவாய், கனவாய், நீராய், கல்லாய், முள்ளாய், கடலில் பொங்கும் அலையாய்க் காட்சி அளிப்பவனும் நானாக இருக்கிறேன் மோனப பரமண்டலத்திலே சுடர் வீசும ஞான ஒளியாய் நிற்கும மூலப பொருளாய், கனவாய் நனவாய் காட்சி தரும பொருளாய் எங்கும் நிறைந்திருக்கும் ஆதிசக்தி நானே தான" என்று கூறிப் பரமபிதாவை நமக்கு நினைவுறுத்தினார் ஞானக் கவி பாரதியார்.

அந்தப் பரம பிதாவின் ஏகசுதனாகச் சகல சக்திகளையும் உடையவராக, மண்ணுலகில் பிறந்து மனித சமுதாயத்திற்கு மகிமைப பிரதாபங்களை அளித்து விண்ணுலகில ஜோதியாய் விளங்கும் கிருபையின வடிவம் கிறிஸ்து பிரான.

ஞான விளக்கு

கிறிஸ்துவின நினைவு நமக்கு மட்டுமலலாமல், உலகிலுள்ள அத்துணை மதத்தாரின் இதயங்களிலே எப்போதும நீங்கா ஞானவிளக்காய்ச் சுடர் வீசிக் கொண்டிருக்கிறது. மனித சமுதாயம் தங்கள் பிறபபு, இறபபு, வாழ்ந்த காலங்களைக் கணக்கிடும்போது கிறிஸ்து நாதர் இறந்த நாளையே கணக்கிட்டுச் சரித்திரத்தை உருவாக்கி வருகினறது. மதப் பிரச்சாரகர்கள, சரித்திர விற்பன்னர்கள், சாம்ராஜ்ய மன்னர்கள் யாவரும் தங்கள் பிரசாரக் காலங்கள், சரித்திர ஆண்டுகள், சாம்ராஜ்ய ஆரம்ப முடிவுக் காலங்கள் அனைத்தையும் குறிப்பிடுகின்றபோது, கி மு. (கிறிஸ்துவுக்கு.முன்) கி.பி. (கிறிஸ்துவுக்

குப் பின் என்று தான் குறிப்பிடுகிறுர்களே தவிர, மற்றவர் களைச் சுட்டி, "முன் பின்" என்று குறிப்பிடுவதில்லை. பிற சகாப்தங்களைக் குறித்திருந்துங்கூடப் பொதுவாக அனைத் துலகும் இக்கால அளவையே குறியீடாகக் குறித்து வருகின்றன.

ஆகவே சரித்திரத்தை உருவாக்கிய பெருமையோடு கிறிஸ்து என்ற பேரொளி உலகத்திலே நடமாடி மறைந்திருக் கிறது. அது மனித உருவில் உலாவி, உலக வாழ் மக்களின் பாவ வழியை நீக்க மெய்ஞ்ஞான மார்க்கத்தைக் காட்டியிருக் கிறது அந்த ஒளி—அந்த ஞான ஒளி கிறிஸ்து நாதரே; கிறிஸ்து நாதரே, கிறிஸ்து நாதரே என்ற பேருண்மையை நிலவச் செய்திருக்கிறது. என்பதை யாராலும் மறுக்க முடி யாது அந்த ஞான தீபத்தை நம் இதய வீட்டிலே ஏற்றி வைத்திருக்கும் நாம் பாக்கிய சாலிகள் அல்லவா! ஞான வள்ளலின வேதத்தைப் பின்பற்றும் நாம் அதிருஷ்டசாலிகள் அல்லவா! ஆயினும், ஞானப் பரம்பரை என்று சொல்லிக் கொள்ளும் நாம் நடந்து கொள்ளும் நிலை என்ன?

> "நீங்கள் ஒன்றுக்கும கவலைப் படாமல் எல்லாவற றையும் குறித்து, உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும் வேண்டுதலினாலும் தேவனுக்குத் தெரியப படுத்துங் கள். அப்பொழுது எல்லாப புத்திக்கும் மேலான தேவ சமாதானம உங்கள் இருதயங்களையும் உங்கள சிந்தைகளையும கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகக் காத் துக் கொள்ளும"
>
> (பிலிப்பியர் 4 : 6 : 7)

நாம் எதற்கும் கவலைப்பட வேண்டியதில்லை நம் வேண்டுகோள் எதுவாக இருந்தாலும், உத்தமமான மனத் துடனே மெய்யான விசுவாசத்துடனே, பரிசுத்தமான பிரார்த்தனையுடனே ஆண்டவரிடம் மன்றுடிக் கேட்போமே யானல், அந்தக் கருணைக் கடல் நமக்குக் கட்டாயம் கடைக் கண் கருணை அளிப்பார் என்று வேதம் சொல்லுகிறதல்லவா! செய்தோமா நாம்! நம் தேவைகள், ஆசை அபிலாஷைகள்

ஆன்ம நிறைவுகள் அத்தனையும் எப்படி எப்படி உருவாக்கி வைத்திருக்கிறோம்? சற்றே சிந்தித்துப் பாருங்கள்!

பேராசை

எதிர் வீட்டுக்காரன் கட்டிய வீட்டைவிட அகலமாகவும் உயரமாகவும், கட்ட வேண்டுமென்று எண்ணுகிறோம்; எண்ணியபடி கட்டி முடிக்கிறோம் நேற்று வந்தவன் படித்துப் பட்டம் பெற்றதன் காரணமாக நம்மைவிட உயர் பதவியில் அலுவலகத்தில், தொழிற் சாலையில் வந்து விட்டால், "ஐயோ வந்து விட்டானே" என்று பொறுமைப்படுகிறோம். பணம் அதிகம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசையினால் படிப்பு அதிகமாக இல்லா விட்டாலும், மேலதிகாரிகளைச் சரிப்படுத்திக் கையூட்டுத் தந்து, பிறரைக் காட்டிக் கொடுத்து உயர் பதவிபெற முயற்சி செய்கிறோம்; வெற்றியும் அடைகிறோம். அவைமட்டுமா?

அலுவலக நண்பர் ஒருவர் வீண் ஆடம்பரத்திற்காக மிகப் பெரிய பொய்களை எல்லாம் மெய்யாகவே உருவாக்கி "என் மனைவிக்குச் சென்ற மாதம்தான் பதினைந்து பவுனில் ஒரு கழுத்துப்பட்டையும் (செயின்) நான்கு பவுனில் வளையலும் ஒரு பவுனில் மல்லிகைப் பூ மோதிரமும் செய்து போட்டேன்" என்கிறார் அந்தப் பொய்ப் பேச்சைக் கேட்டு, உடனே நாமும் கடன்பட்டுப் பணம் வாங்கி நம் மனைவிமார்களுக்கும் நகைகளைப் பூட்டிவிட எண்ணுகிறோம்; அலங்கரித்தும் விடுகிறோம் ஆனால், கட்டமுடியாத தெய்வீகக் கோட்டையைக் கட்டாவிட்டாலும், கட்டி முடித்துக் காணக் கண் கோடி வேண்டும்போல தோன்றும், சிங்கார மாளிகையில், ஆண்டவன சந்நிதானத்தில் நுழையவாவது பிரயாசைப்பட்டோமா?

இன்றுபோய் நாளை வரும் பதவியை எட்டிப்பிடிக்க எண்ணங்கொண்டோமே தவிர, கிறிஸ்துநாதரின வலப்பக்கத்திலே என்றும் நமக்காகக் காத்துக் கிடக்கும் அன்புக்கரங்களின் இடையிலே இருக்கும் ஆனந்தப் பதவிக்கு என்றும் நீங்காத நித்தியப் பதவிக்கு ஆசைப்படுகிறோமா!

நினைத்த நேரத்தில், நினைத்த உருவத்தை உண்டாக்கித் விடும்—உண்டாக்க வணங்கிக் கொடுக்கும் தங்க நகைக்குத்

தாங்க முடியாத கடனைப்பட்டு, ரத்தமும், சீழும், துர்நாற்றமும் வீசும் அழுகும் சரீரத்திற்கு அலங்காரம் செய்ய நினைக்கும் நாம், அழிக்க முடியாத—அழிக்க எண்ணுவோர் அண்ட முடியாத—ஏன் அண்ணுந்தும் பார்க்க முடியாத—பார்க்கப் பிரார்த்தித்தால் பார்க்க முடிந்த பரம்பொருளை, நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தைவிட, அதிஉன்னத பெருமைக்குரிய ஆண்டவரின் முள்முடியைப் பார்க்க அதன் நிழலிலே ஒதுங்க—நம் சிரம் தாழ்த்தி வணங்க எண்ணங் கொண்டோமா? நினைத்துப் பாருங்கள்.

இதை மனக்கண்களால் சீர்தூக்கிச் சிந்தித்துக் கண்ட உலக உத்தமர் காந்தி அடிகள் மனம் நொந்து,

" ஏசுவின் உபதேசத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் என்று தம்மைக் கூறிக்கொண்டு, அவரைச் சமாதானத்தின் மன்னன் என்று வர்ணிப்பவர்கள், பிரத்தியட்ச நடைமுறையில், அந்த நம்பிக்கையில் ஓரளவு கூடக் காண்பிக்காமல் இருப்பதுதான் முதல் தரமான சோக நாடகம். உண்மையான கிறிஸ்தவ முனிவர்களை, ஏசுவின் உபதேசத்தை ஏற்ற ஒரு சில பொறுக்கி எடுத்த தனி நபர்களுக்கு மட்டுமென்று வரையறுத்திருப்பதைப் பார்த்தால் வேதனையாக இருக்கிறது "

(ரகுபதிராகவ)

என்று சொல்லி இருக்கிறார். அந்த உலக உத்தமரின் மனப்புண்ணை எப்படி நாம் ஆற்றப் போகிறோம் !

குற்றவாளி யார் ?

கெட்டவன் நல்லதைச் செய்தால் அவனைக் கொண்டாடி வழிபடும் மனிதச் சமுதாயம், நல்லவன் செய்யும் தீய செயல்களை மிகவும் கடுமையாகப் பழிக்கிறது நல்லவன் செய்யும் ஒரு சிறு குற்றமும் மலையின்மேல் வைக்கப்பெற்ற விளக்கைப் போல எல்லார் கண்களுக்கும் தெளிவாகப் புலப்படுகிறது. ஆகவே கிறிஸ்துநாதரைப் பின்பற்றுபவர்களாகிய நாம் அவர் சொல்லிய ஞான வழிக்குப் புறம்பாக வழி நடக்கலாமா? அவ்வாறு புறம்பாக நடப்பது பலராலும் பழிக்கப்படத்தக்கதாய் இருக்குமன்றோ !

சில நண்பர்கள், "இருக்கும்வரை இன்பத்தை அனுபவிக்க லாம்" வானவில்லைப்போல வந்து மறையும் அவனி வாழ்வில் அனுபவிக்க வேண்டியவற்றை எல்லாம் ஒரே கணத்தில் அனுபவித்துவிடலாம்" என்று எண்ணிக் கழிந்ததை திரும்பப் பெற முடியாத புவிவாழ்வில் வேறென்ன சுகம் நமக்கு இருக் கிறது" என்று கருதி அவனி வாழ்வில் எல்லா இன்பங்களையும் அனுபவிக்கத் துடிக்கின்றனர். இன்பங்களுக்கும், துன்பங் களுக்கும் காரணமாயிருக்கிற இயேசுநாதனை அவர் நமக் காகப்பட்ட வேதனைப்பலனை எண்ணிப் பார்த்ததே இல்லை.

அதோ பாருங்கள் அந்தத் திருடனைப் பிடிக்க காவற்படை திரண்டு ஓடுகிறது. ஆயுதப்படை ஈட்டியும், கத்தியும் ஏந்திக் கொண்டு விரைகிறது. அரசன் அளித்த ஆணையை அமல் நடத்த வேண்டுமே என்ற அடிமைப்புத்தியோடு இல்லை அவசரப் புத்தியோடு அந்தக் கள்வனைப் பிடிக்க அவர்கள் ஓடுகின்றனர். ஆனால் கள்வன் ஓடவில்லை அப்பாவிகள் தன்னைப்பற்ற ஓடிவருவதைக் கண்டு அலட்சியச் சிரிப்புச் சிரித்து நின்று கொண்டிருந்தான். போர் வீரர்கள் அவன் கரங் களைப்பற்றினர் வீரர்களின் கரங்கள் நடுங்கின ஆனால் தண்டனை அடையப் போகும் கைதியின் கரங்களில் வீர ரத்தம் ஓடி வேங்கை மரம் போலத் திண்மையுடன் இருந்தன. வீரர்கள் அவனை இழுத்துப் போகவில்லை கைதி கெம்பீரமாக வீரநடைப் போட்டுக்கொண்டு அவர்களோடு சென்றான்.

நீதிமன்றத்திலே நிறுத்தப்பட்டான் குற்றவாளி மன்ற மெங்கும் மயான அமைதி சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர்;

"இவன் பாமர மக்களை ஏமாற்றினான்"

"இவன் முட்டாள்களை விவேகிகளாக்கினான்"

'ஏதோ ஒரு சக்தி இருப்பதாகவும் அதற்கு நாம் பயந்து நடக்க வேண்டும் என்றும், கடைசிக் காலத் தில் நாம் செய்யும் தீய காரியங்களுக்குப் பதில் சொல் லியே ஆக வேண்டும் என்றும் சொல்லுகிறான்"

"மனித சக்தியால் நிறைவேற்ற முடியாத செய் கைகளைச் செய்கிறான்"

இவைகள்தாம் குற்றவாளியின் மேல் சுமத்தப்பட்ட குற்றங்கள் அடுக்கடுக்காக சுமத்தப்பட்ட அத்தனைக் குற்றங்களையும், 'ஆம், அல்லது இல்லை'' என்று வாய்திறந்து ஒரு வார்த்தையாலுங் கூட ஒப்புக்கொள்ளவோ அன்றி மறுக்கவோ இல்லை. கையிலே விலங்கு-காலிலே விலங்கு, இரு விலங்குகளையும் பிணைத்துக் கட்டப்பட்டிருக்கும் இரும்புச் சங்கிலியின் சுமை இவ்வளவையும் அமைதியாக அனுபவித்துக்கொண்டு மௌனமாக நின்றிருந்தான் கைதி

''உனமீது சுமத்தப்பட்டிருக்கும் குறறங்களுக்கு நீ ஏதாவது மறுபபுக் கூறுகிறுயா !''

அரசவையே அதிரும்படி கேட்டது அதிகாரியின குரல். அரசவைதான் அதிர்ந்ததே தவிர குறறவாளியின் உள்ளமோ அனறி உடலோ அசைந்ததாகத் தெரியவில்லை

எங்கும் மயான அமைதி .

கைதியின கண்கள் ஒருமுறை அரசவையை வட்டமிட்டு திரும்பி நினறது

மீண்டும் பயங்கரமான அமைதி .

'' பதில் சொல் .''

அவையின கூடமே கிடுகிடுத்தது.

அவையில் இருந்தோரின அங்க உறுபபுகள் யாவும சிம்ம கர்ஜனையைக் கேட்ட காட்டு விலங்குகள் அஞ்சி நடுங்கி ஒடுங்குவன போல அச்சத்தால் செயலிழந்து ஒடுங்கின.

' ஏன பேசாமல நிறகிறுய் உனக்கு எதிராகக் கூறபபடும இத்தனைக் குறறங்களையும் மறுக்கவோ அனறி ஏற்கவோ முயலாமல் இருப்பதேன் ?''

மனனனின மாளிகையே மண்மேடாகும்படி பீரங்கி வெடிக்கும் சப்தம் போல கேட்டது, ஆனுல் குறறவாளி எந்தவிதத் தளர்ச்சியும் உணர்ச்சியுமின்றித் தடுமாற்றமில்லாமல் அமைதியாக நின்றிருந்தான அவன் முகம் அனறுதான் மலர்ந்த அழகு ரோஜாவைபபோல் காட்சி அளித்தது; புன்முறுவல் பூத்துக் கொண்டிருந்தது.

மரணம் தன்னைத் தானாகவே வந்து அரவணைக்கப் போகிறது என்பதை அறிந்தும், அவன் பயங்கரமான மரணத்திற்கும் பயப்பட்டதாகத் தெரியவில்லை.

குற்றம் செய்த கைதியைப் போல அவன முகமும் எந்தவித மாறுதலையும் அடையவில்லை அதறகுப பதிலாக நிதானமாகவும. அமைதியாகவும் இருந்தான. வீரப் பார்வையும உடையவனாய் நின்றிருந்தான.

கூண்டிலிருப்பவன் நிரபராதியா, குற்றவாளியா என்பதை முடிவு செய்யும ஜூரர்களையும், ஜூரிகள சொல்லும தீர்ப்பு எதுவாக இருக்குமோ என்ற கவலையோடும் திருப்தியோடும் கேலிக்கூத்தாகவும் எதிர்பார்ததுக் கொண்டிருக்கும மக்களையும் அரசனையும சாந்தமான பார்வையால சுற்றிப்பார்த்தான கைதி. கொலு மண்டபத்தில் நடக்கும கோமாளித தனத்தைக் குழந்தை உள்ளத்தோடு பார்த்துக் கொண்டிருந்தது. அந்தக் கைதியின பார்வை. ஆம; இன்னும் சற்று நேரத்தில பலியாகப போகும் ஆட்டுக்குட்டி, கசாபபுக்காரனைக் காணபதுபோல் காட்சியளித்தானே தவிர, வாய் திறந்து நான் நிரபராதி என்று கூறவில்லை.

கைதியின் அமைதி அங்குள்ள அவையோரை மட்டும் தான் கதிகலங்கச் செயதது என்று நினைக்கிறீர்களா? இல்லை: இல்லை நாவசைத்தால் நடுங்கிவரும் நாட்டார், விரல் அசைத்தால் விரைந்து வரும் மாந்தர், கோல் அசைத்தால் குவிந்து விடும் சேனை, பளிங்குக் கல மண்டபம், பாட்டிசைக்கும் பாவையர், பட்டுபபட்டாடை உடுத்திப பாரே கிடுகிடுக்கும்படி அரசோச்சும் அரசர், ஆகிய அனைவருக்கும் அறிவு பகரும் அருந்தலைவன் யூதபபரமபரைக்கே பாதுகாவலன் பரம இராஜகுரு 'கைப்பாஸ்.' அவன இதயமே நடுங்கும்படி செய்து விட்டது கைதியின் அமைதி.

சிந்தனை செய்தே அறியாத 'கைப்பாசின்' உள்ளமும் செருக்காக நிறகும் கைதியின் நிலையைக் கண்டு சிந்தனை செய்தது.

எதிர்ப்பு என்னவென்று அறியாத கைப்பாஸின் உள்ளம், ஆணவத்தோடு-அதே நேரத்தில் அமைதியாக நிற்கும் கைதி யின் கதியைக் கண்டு நீதியைத் தேடி அலைந்தது.

கைப்பாஸின் எண்ண இயந்திரம் வெகு வெகுவேகமாகச் சுற்ற ஆரம்பித்தது சுற்றியது: சுற்றியது: வெகு வேகமாகச் சுற்றியது. அருகிலிருந்த அதிகாரிகள் சுற்றினார்கள். போர் வீரர்கள் சுற்றினார்கள்; அரசவையே சுற்றியது: ஒரு முறை தன்னையே பார்த்துக் கொண்டான் கைபபாஸ். அவனும் சுற்றினன் அதற்கு மேல அவனால தாங்க முடியவில்லை; நிதானிக்கவும் முடியவில்லை. ஒரு பெரும்கணைப்பு இரண்டில் ஒன்றைப் பார்த்துவிடுவது என்ற முடிவுக்கு வந்து விட்டான். அந்த முடிவு ? அந்த முடிவு எதுவாக இருக்க வேண்டும்?

கடைசியாக ஒரு புது யூகம் அவன் தெரிந்த சிந்தையில உதித்தது யாருக்கும் அஞ்சாத இந்தக் கைதி, எந்தவித இன்னல்களுக்கும் இதயத்தைத தளரவிடாத இந்தக் குற்ற வாளி உயிரையே துச்சமென மதித்து உலக இன்பங்கள் சூழ்ந்து வட்டமிடும் சுகபோகங்கள் அத்தனையும் தியாகம் செய்ய சித்தமாயிருக்கும் இந்தத் திடச்சித்தக்காரன் யாரா யிருக்க முடியும்? இனியாருக்கும் பயப்பட வேண்டிய அவ சியமோ அவசரமோ அவனுக்கு இல்லை என்ற முடிவுக்கு வந்த வனாக, தான நினைத்ததைச் செய்தாலதான கைதியைப பேச வைக்கவும அந்தப பேச்சின் வாயிலாக எந்த விதத்திலாவது தண்டனையைக் கொடுத்துவிடவும் முடியும என்று கருதினான, கடைசியாக அவனே வாய் திறந்து பேச ஆயத்தமானான்.

கைபபாஸ் பேசுகிறான் என்றால், யூதநாடே பேசுகிறது என்றுதான் அர்த்தம். கைபபாஸ செய்யும் காரியம நாட்டை வளமாக்கலாம், அல்லது வாடிய மரமாகவும் ஆக்கலாம் அத் தகைய சக்தி பெற்ற யூதமக்களின தனிகரற்ற இராஜகுரு, மிகுந்த ஆணவத்தோடு, கோபம் கொண்டு, சீறிப படமெடுத்து நிற்கும் நாகபாம்பைப் போல - உறையினின்று வெளிப் பட்ட வீரன் கைவாளைப் போல அக்கினிக் குழம்பை வீசி எறி யும் எரிமலையைப் போல வெகுண்டு நின்ற கைப்பாஸ் அதி காரம் நிறைந்தகுரலில் அண்டமே கிடுகிடுக்கும்படி ஓசை

எழுப்பினன். அந்த ஓசை மண்டபத்தில் கூடியிருந்த அனை வருடைய செவிகளையும் செவிடாகி விடும்படி செய்தது.

" கைப்பாஸ் பேசினன் . ... .. ? சர்வலோக வியாபகராய், நித்திய ஜீவியபரம் பொருளாய் தேவர் தேவர்களுக்கு அரசனாய் விளங்கும் கடவுளின் பெயரினமேல ஆணையிட்டுக் கேட்கிறேன். நீ உலக இரட்சகனா? அல்லது தேவரின் குமாரனா "

என்ன ஆச்சரியம்! யூதசபையில் ஊசி போட்டாலும் சப்தம் கேட்கும்; அப்படிப்பட்ட பாலைவன அமைதி. அரசவை யிலுள்ள அத்தனைக் கண்களும பரிதாபத்திறகுரிய அந்தக் கைதியை நோக்கின.

மேலும நிரந்தர அமைதி

என்ன விந்தை! யூதக் குலத்திறகே ஏகப் பிரதிநிதியான கைப்பாஸ் எல்லா அதிகாரத்தையும தனனகத்தே கொண்ட இராஜ தரு கைப்பாஸ் சாதாரண பிரஜையிடம, அதிலும் கைதி யான ஒரு பாமர மகனிடம் இவ்வளவு பணிவாகவும், அதே நேரத்தில ஏதோ ஒன்றை அக்கைதியின வாயால எதிர் பார்ப பவன போலவும கேட்பதன மர்மம என்ன ?

பெரும் பயஙகரமான அமைதி! அதைக் கிழித்துக் கொண்டு கைப்பாஸின் குரல் மீண்டும் ஒலித்தது.

"நீ கடவுளின குமாரனா"

கைம்பாஸ் மீண்டும் மீண்டும கேட்பதன் நோக்கம் எதுவாக இருக்கும? "நான் கடவுளின் குமாரன் தான" என்று கைதி ஒப்புக் கொண்டால் அவனுக்குக் கிடைப்பது மரண தண்டனை. ஒப்புக் கொள்ளவில்லை எனருல் அவன் யாருடைய சித்தத்தின ஆணையினபடி அவன் செய்த அத்தனை அற்புதங் களும் புதுமைகளும் தியாகங்களும் நிகழ்ந்தன. என்பதை அறியச் செய்து, அவை பொய்யானவை என நிருபிக்கத்தான் கைப்பாஸ் அப்படிக் கேட்டான்.

அவை எங்கும் எதிரொலித்தது மக்கள் எழுப்பிய ஆரவா ரத்தின் ஒலி. "கைதியைச் சிலுவையில் அறையுங்கள். சிலுவையில் அறையுங்கள்" என அரசவையோர் குரலெழுப்

பின்னர். இந்தக் காட்சியை நமக்கு அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார் வேத நாயக சாஸ்திரியார்-

‘சிலுவையிலேற்றும் என்று கும்பலனைத்துஞ்
செப்பிய கூக்குரல் கேட்டுத்
தீவினை யொன்றும் இவனிடங் காணேந்
திடமெனப் பிலாத்தெதிர் பகர
வலியவெங் களுக்கோர் ஞாயமுண் டிறங்க
வானவன் மைந்தனே யென்ன
மன்னனும் பயந்தாஸ் தானத்தில் மீண்டும்
வந்து நீ யாரெனக் கேட்கப்
வலியதாம் புருவை மவுனமுற்றிருக்கப்
பேசிடா யோவுனை விடவும்
பெருமரத்திடவும் பெலனெனக் கிலேயோ
வென்றபிலா மேலிருந் தல்லால்
இலையிவ் வெனக்கோர் ஆண்மையிங் கதனால்
எனையுன கையளித்தவர்க்கே
இடுங் கொடும் பாவம் அதிக முண்டென்றே
இயம்பினை யேசு நாயகனே.”

(ஜெபமாலை)

என்ற அந்தக் காட்சிக் கொப்ப, கைதியின் உதடுகள் மெல்ல அசைந்தன. சபையில் ஒரே பரபரப்பு “கைதி என்ன சொல்லப் போகிறான்” என்ற பேரவா ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிலைத்தது. கைதியின் உதடுகள் மீண்டும் மெல்ல அசைந்தன.

எங்கும் அமைதி; அவை முழுவதும் மயானத்தின் அமைதி குடி கொண்டிருந்தது. எல்லாரும் ஏழைக் கைதியைக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டே யிருந்தனர்.

அதோ அவன் வாய் திறக்கிறான்!

எங்கும் அமைதி

அந்த அமைதியைக் கலைத்துக் கொண்டு சாந்தம் தவழும் இனிமையான குரல் எழுந்தது. கைதி பேசினான்.

அரசவையே அமைதியில் திளைத்திருந்தது

"ஆம் நீர் சொன்னபடியே நான் கடவுளின் குமாரன் தான் அன்றியும் நான் சர்வ வல்லவரான சர்வேஸ்வரருடைய வலப் பக்கத்தில் வீற்றிருப்பதையும வானத்தில தவழும் மேகங்கள் மேல் வருவதையும் இன்று முதல நீங்கள் காண்பீர்கள்" என்று உங்களுக்கு மெய்யாகவே சொல்லுகிறேன்".

கேட்ட இதயங்களெல்லாம் நிலநடுக்கம போல நடுங்கி ஒலித்தன; வியப்பும் அச்சமும் கலந்த அமைதி மேலும் பரவிறறு.

அடுத்த கணம் கைபபாஸின எக்காள மிட்ட சிரிபபொலி. அங்கு நிலவியிருந்த அமைதியை இரிந்தோடச் செய்தது. கைப்பாஸ் சிரித்தான்—சிரித்தான்; தொடர்ந்து சிரித்தான், அவன சிரிப்பிலே ஆணவங் கலந்த செருக்கு புலப்பட்டது. ஆட்சியம் நிறைந்திருந்தது. அவன பயஙகரமான ஓரொலியை எழுப்பி அகங்கார ஆட்டம் ஆடினான். தான அணிந்திருந்த சட்டையைக் கந்தல கந்தலாகக் கிழித்தெறிந்து பித்தம தலைக்கேறியவன போலப் பேயாட்டம ஆடினான். எதையோ அடைய முடியாத ஒன்றை அடைந்து விட்டது போல எண்ணி, ஆனந்தக் கூத்தாடினான். அந்தக் கூததோடு சேர்ந்தே தன் குரலை எழுபபினான்.

"இனி நமக்கு எந்தச் சாட்சியங்களும் தேவையில்லை. இவன குறறவாளி—இவன குற்றவாளி." என்று கத்தினான். கொடிய அறிவையே பெறலருஞ் செலவமெனக்கொண்ட குருவின கட்டளைகளைக் குருட்டுத்தனமாக ஏற்கும் கோமாளி அமைச்சர்களும், கொடியோன் கைபபாஸுடன சேர்ந்து கூக்குரலிட்டனர். அதன பயனாக நிரபராதிக்குக் கிடைத்தது மரண தண்டனை. ஆம்; சிலுவையிலே நிறுத்தப்பெறறு ஆணிகளால் அடிக்கப் பெற்றுத் தொங்கவிடப்பட்டான் அந்தக் கைதி.

நமமுடைய பாவங்களுக்காக அக்ரம அநியாயங்களுக் காகச் சிலுவையிலே உயிர் நீத்த அந்த உத்தமன யார் ?

ஓங்கி அடிக்கப் பெறற சாட்டையின் அடிகளால் உடல் முழுவதும் இரத்தம் கொப்பளித்துப் பீரிட்டு வெளிவர கொதிக்

கும் கனவிலே சொல்லொணு வேதனைகள் பட்டானே, அக் கைதி யார்?

முள் முடியைத் தலையிலே அணிவித்துத் தலையும் முடியும உதிரத்தால் நனைந்து நனைந்து சூரியனின் வெம்மையால் காய்ந்து காய்ந்து, மீண்டும நனைந்து மறுபடியும் காய்ந்து, மெழுகைப்போல் இறுகும்படி ஆருத்துயரத்தில அல்ல பட்டானே! அந்தக் குற்றவாளி யார்?

தூக்க முடியாத பெரும்பாரம் நிறைந்த சிலுவை மரத்தைப் பலர்கூடித் தூக்கித் தோளில் வைக்க, அதைச் சுமக்க முடியாமல் மும்முறை விழுந்து விழுந்து வேதனையோடு எழுந்து, எழுந்து, பஞ்சு போன்ற பாதங்கள் கொப்பளித்துக் கொடூரமான வேதனையைத் தோற்றுவிக்க நம பாவங் களை எல்லாம சிலுவையின மூலமாகச் சுமந்து சென்றுனே அச்செயல யாருக்காக! அந்தச் சிலுவை சுமந்தோன யார்? நமது நேச பிதா. கிறிஸ்துநாதரே: கிறிஸ்துநாதரே: கிறிஸ்து நாதரே. எம்பெருமான் கைகளையும் காலகளையும் சிலுவை யிலே ஆணிகளால அடித்து விலாவிலே ஈட்டியால குத்திச் சொல்லொணுக் கொடுமைகளுக்காளாக்கிஞர்களே அந்தோ! அந்தோ! சிலுவையிலே அந்தரமாக நின்று அடிக்கப்பெறற ஆணியினுல உண்டான கொடிய வேதனையைத் தாங்கிக் கொண்டு கலவாரி மேட்டிலே உலகம் போற்றும் உத்தமர் தேவகுமாரன் உலகப் பாவங்களைப் போக்கவந்த பரமபிதா, ஐந்து காயங்களோடு காட்சி அளித்து மரணவேதனைப்பட் டாரே அது யாருக்காக?

நம்முடைய பாவங்கள் அகலவும் நாம் கண்டும் காணுதது போல் நடிக்கும் எல்லாக் காரியங்களும் மன்னிக்கப்படவும், உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் பேய்க்குணம் விலகவும் நல்லவர்களின் தூய எண்ணங்களிலெல்லாம் நஞ்சைத் தூவி அவர்தம் பொற்புடைக் கருத்துக்களைக் கருகச் செய்ததால் தோன்றிய வேதனை தரும் விஷத்தை எல்லாம் விவேகமுள்ள வித்துகளாக மாற்றப்பட நம் பொருட்டுத் தம் உயிரைப் பணயம்வைத்து அவர் சிந்திய இரத்தத் துளிகள் நம் இதயங்களைக் கழுவவில்லையா? அப்படிப்பட்ட

தியாக மூர்த்தியை—கிறிஸ்துநாதரை மறந்து நாம் உயிர் வாழ லாமா? உயிர் வாழத்தான எண்ணலாமா? அத்தூயவரான எம்பெருமானைப் பரிசுத்தப் பரம்பொருளை மறக்காமல் நாம் என்றும் நினைத்தல் வேண்டும் என்பதை அறிவுறுத்த மறத்தமிழர் திரு. வி. க. அவர்கள் கூறியதைக் காண்போம்.

"அனபேநீ ஆதலினுல் ஆருயிர்கள் பொருட்டுன
அழகுடலை வதைக்கவிட்டாய் அருளுயிரை நீத்தாய்
இந்நிலத்தில் அச்செயலை எக்குரவர் ஏற்ருர்
இளங்கன்னி வயிற்றுதித்த இறைமை மணிவிளக்கே
அன்பினிலே குறையிருந்தால் அருஞ்செயலை ஆறறல
ஆகாதே ஆகாதே 'அன்புடைய அறவோர்
என்பும் பிறர்க் குரிய'ரென எழுந்தமொழிக்குகந்த
இலக்கியமா யிலங்கிநிற்கும் ஏசுகுரு நாதா!"

(கிறிஸ்துவின் அருள் வேட்டல)

தமிழ்த்தென்றல் திரு வி க மெய்மமறந்து மனமுருகி எவ்வளவு ஆனம ஒருமையோடு இதனை நமக்கு நினைவு கூருமாறு கூறுகின்ருர்.

"கர்த்தாவே உன உள்ளம் அன்பின் வடிவமாகவே இருக கினற காரணத்தினுல அனபுள்ள மக்களுக்காக உயிரையே அறபணித்து விட்டாயே. தூங்காமணி விளக்காகிய தூய கனனிமரி அம்மையின வயிற்றுதித்த மாணிக்கமே அன புடையவர்களின கருத்தும கருணையும ஆன்ருேர்கு உரியன அல்ல, அவை மறறவர்க்கே உரிமையாகும்' எனற அருஞ் சொலலுககு அணிகலனுக விளங்கும் கிறிஸ்துவக் குலக் கொழுந்தே! பாரில வாழ் மக்களின் பாவங்களைத் தீர்ப்பதற காகச் சிலுவையிலே தொங்கித் தியாக உருவாய்த் திகழ்ந திட்ட செயலபோல இநத உலகில் வேறெந்த மதகுருக்கள் ஏறருர்கள்" என்று உலகத்தை மட்டுமல்ல பிறமதங்களைச் சார்ந்து வழிபடும மக்களையும பார்த்துக் கேட்கிருர் திரு.வி க.

அதுமட்டுமன்று எவர்க்கும் அஞ்சாத நெஞ்சுரங்கொண்டு தன் அறிவாறறலாலும் ஆண்மையின் திறத்தாலும் அண்டத் தையே கிடுகிடுக்கச்செய்த பேரரசன் நெப்போலியன் சொல்லு கிருன்.

"உலகில் ஒவ்வொரு நாட்டவரும் பெருமையாக மதித்துக்கொண்டாடும் மதங்களையோ, மார்க்கங்களையோ, ஏற்படுத்தினவர்களைப் பார்த்து, நீங்களும் தேவர்கள் அல்லவா! தெய்வத்தின் ஆட்களும் அல்லவா! விண்ணிலிருந்து இறங்கியவரும் அல்லவா! சாவுக்குரிய மனிதர்கள் எல்லாரும் உருவாக்கப்படுவதற்குக் காரணமான அதே மண்ணினின்றே நீங்களும் உருவானீர்கள்" என்று ஐயமின்றிக் கூறலாம். ஆனால் கிறிஸ்துவோ, முற்றிலும் வேறுபட்டவர். அவரிடத்திலுள்ளவை யெல்லாம் என்னைத் திகைக்கச் செய்கின்றன. அவருடைய ஆன்மா என்னைப் பிரமிக்கச் செய்கிறது; அவருடைய மனவலிமை என்னைக் கலங்கச் செய்கிறது. உலகத்திலுள்ள மற்றெல்லாப் பொருள்களோடும் அவரை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு இயலவே இயலாது"

என்று எவ்வளவு திறந்த உள்ளத்தோடு கூறியிருக்கிறான் ஆம், போராட்டத்தைத் தன் உடன்பிறந்த வியாதியாக எண்ணி, ஆண்டவன் என்ற ஒன்றை ஒன்றையோ—அவ்வாறு கூறப்படும் ஒரு பெருவெளியையோ உண்டு என்று கருதாத அத்தகைய நினைப்பே இல்லாத நெப்போலியன் கிறிஸ்துநாதரைப்பற்றி எவ்வளவு தீர்க்கதரிசனமாக — எவ்வளவு மேன்மையாகச் சொல்லியிருக்கிறான் என்பதைச் சற்றே சிந்தித்துப் பாருங்கள் அப்பேரின்பப் பெட்டகத்தைப் பாவம் போக்கும் பேரொளியைத் தெய்வத்துள் தெய்வத்தைக் கிறிஸ்துநாதனை நாம் மறந்துவிட்டால் மற்றவர்களின் நிலை? ஆகவே,

பலகோடி தெய்வங்கள் பாரில் உண்டு,
பரிவுடனே பணிவோரும் பலபேருண்டு.
சிலகாலம் சென்றவர்தாம் செல்லும் பாதை
சிந்திக்க இயலாது சிதறும் ஓர்நாள்!
நிலமேலே நேர்மைக்கும் நீதி காட்டும்
நெறிகளிலே நீங்காத விளக்கங் கூறும்!
திலகமெனத் திகழ்கின்ற கிறிஸ்து நாதன்,
தெய்வத்துள் தெய்வமெனத் தெரிந்தார் காணீர்!

(அருமை

# உலகப் பொதுச்சின்னம்

சின்னம் என்று சொல்லுகின்றபோதும், நினைக்கின்ற போதும் தற்காலத்தில் நம் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் ஆழப்பதிந்து நிற்பது அரசியல் கட்சிகளின் சின்னங்களே என்பதை யாரும் மறுக்க முடியாது. அவைகள் யாவும் ஒரு காலத்தில் உன்னத நிலையில் போற்றப்பட்டுப் பின்னர் அழிந்து விடுவதும் உண்டு. கட்சியின் சின்னங்கள் யாவும் அஃறிணைப் பொருள்களின் வடிவங்களோ அன்றி உயர்திணைப் பொருள்களின் வடிவங்களோ பொறிக்கப் பெற்றனவாக இருக்கலாம். அவைகளெல்லாம் போராட்டத்திற்கும், மக்களை ஏய்த்துப் பிழைப்பதற்கும் மட்டுமே பயன்படுகின்றனவே தவிர, மற்ற எந்தக் காரியத்திற்கும் பயன்படுவன அல்ல; பயன்படவும் முடியாது என்றும் துணிந்து கூறலாம்.

அழியக் கூடிய, அன்றி நினைத்தால் அழித்துவிடக் கூடிய சின்னங்களைப் பக்க பலமாக வைத்துக்கொண்டு, நீண்டதொரு ஓட்டம் ஓடிக்கொண்டு வருகிறோம் என்னே உலகில் நாம் மேற்கொள்ளும் விசித்திரமான எண்ணம்.

தமிழகத்தின் வரலாற்றை எடுத்துக்கொண்டால், நம் செந்தமிழ் நாட்டைச் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மும்பெரு வேந்தர்கள் அரசோச்சி வந்தார்கள் என்று அறியக் கிடக்கிறது. தமிழக சரித்திர வரலாற்றிலே இதனைக் காண்கின்றோம். அவர்களுடைய சின்னங்கள் வில், புலி, மீன் என முறையே கூறப்படுகின்றன. தமிழ்ப் பற்றுடைய தமிழகத்தின் மேல் அன்பும் அக்கறையும் கொண்ட ஒரு சில தலைவர்களால் எடுத்து இயம்பப்பட்டு, அச்சின்னங்கள் தமிழகத்திலே இலைமறைகாயென மக்கள் மனத்திலே அமைந்திருக்கின்றனவே தவிர அகில இந்தியாவைப் பொருத்தமட்டில், இன்னுங்கூடச் சரியாக விளம்பரமாகாமல், மக்களுக்குத் தெரியாமல் இருக்கின்றன.

அரசுச் சின்னங்கள் என்று சொல்லப்படுகின்ற அத்துணைச் சின்னங்களும மாறும் அல்லது மறைந்துவிடும்; மற்றவர்களால் மாற்றப்படும். அவ்வாறு மாற்றப்பட்டும் இருக்கின்றன காரணம், அவை கேவலம் மனித வர்க்கத்தால் ஏற்படுத்தப் பட்டவை என்பதாலதான். எல்லாம் வல்ல எம்பெருமானைத் துதிக்கின்றபோது வள்ளலார் சுவாமிகள்,

"வட்டவான சுடரே வளரொளி விளக்கே
வயங்கு சிற ஜோதியே அடியேன்
இட்டமே யிட்டத் தியைந்துளங் கலந்த
இன்பமே யென் பெறும் பொருளே
கட்டமே தவிர்த்தெனை என்னை வாழ்வித்த
கடவுளே கனக மன்றத்தே
நட்டமே புரியும் பேரருளரசே நம்பினேனை
கைவிட லேயே"

என்று சின்னம படைக்காத ஜோதி வடிவமாக ஆண்டவனை வழிபட்டார்கள். அவர் மறைவுக்குப் பின்னால், ஒரு வழிபாட்டு உருவத்தை அல்லது ஞாபகச் சின்னத்தை உருவாக்கவோ அல்லது உருவாக்கக் கூடிய சமய சந்தர்ப்பமோ ஏற்படவில்லை எந்த வாய்ப்பும் கிடைக்கவுமில்லை.

அப்படியே காந்தி அடிகள், நபிகள் நாயகம முதலியவர்களுங்கூட மக்களுக்காகவும, மக்களின் நல்வாழ்விற்காகவும் அவர்களின் ஆன்ம நேய ஒருமைப்பாட்டிற்காகவும் இன்னார் இன்னதற்காகச் செய்தார்கள் என்ற சேதியோடு விட்டுச் சென்றார்களே தவிர, செப்பனிடப்பட்ட சின்னம எதையும் விட்டுப் போனதாகத் தெரியவில்லை அவ்வாறு விட்டுச் சென்ற செய்தியும இல்லை.

சிலர் சின்னங்களைத் தாங்களாகவே உருவாக்கி விடுகிறார்கள். நாட்கள செல்லச் செல்ல அவர்கள் ஏற்படுத்திய சின்னங்கள் மறைந்து விடுகின்றன அத்தகைய சின்னங்களை உருவாக்கியவரின ஆணவமும், அகங்காரமும், ஆர்ப்பாட்டங்களும் தலைதூக்கி நிற்க அவற்றின் நிழலிலே சின்னங்கள் மறைக்கப்பட்டுச் செய்கைகள் உச்சியில் வெளிச்சமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன.

அகில உலகில் தன்னிகரற்றுச் சுதந்திரமாகப் பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் பேரரசின் சின்னமான ஐக்கிய நாட்டுக் கொடி (Union Jake) இன்று உலக அரங்கின் பேரணியில் கூட்டுச் சேர்ந்திருக்கும நாடுகளின மத்தியிலே அந்நாடுகளில் வாழும் மக்களுள், எத்தனை பேருக்கு அந்த வெள்ளையரின் கொடியின் நிறமும், தோற்றமும் நினைவிலிருக்கின்றன: ஏன் நமது இந்திய நாட்டை அரசு புரியும் ஒரு சில மேதைகளுக்குக் கூட அக்கொடியின தன்மை இப்போது தெரியாது. அபபடிச் சின்னங்களின் பேரும் புகழும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து இனறு மக்களின மனத்திலிருந்தே எங்கேயோ மங்கி மறைந்து விடுகின்றன.

ஆனல். தான் தோன்றுவதற்கு முனனும் பின்னும் அன்றும் இனறும் எனறும் மக்களின உள்ளங்களில மட்டுமல்லாமல், மனனர்களின மனத்திலுங் கூட நிலைத்து நிறகமதக் குருக்களின இதயங்களிலே போறறி வைக்கப் பெறறு உலகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் நிலைத்து நின்று எந்நாட்டினரும், எம்மதத்தினரும் தங்கள் சிந்தனைப் பீடங்களிலே பொருத்திக் கொள்ளுமாறு அனபு, பண்பு, பத்தி, பாசம, பரிவு, நம்பிககை, நேர்மை, நீதி' சமாதானம ஆகிய அனைத்துச சக்திகளையும் தனனகததே கொண்டு எனறும் நித்திய ஜீவியமாக நிலைத்து நிறகும ஒரே சினனம் பரிசுத்த சினனம—உலகப் பொதுச் சின்னம், சிலுவை ! சிலுவை !! சிலுவையே !!!

உலகப பொது அரங்கிலே சமாதானச்சின்னமாகப்-போர்க்களத்திலே சமர்புரியும வீரர்களின காயங்களைக் கண் காணிக்கும வைத்தியச் சினனமாக இருப்பதும் சிலுவையே ! அது சமாதானத்தின ஏழைகளின துயரைத் தீர்க்கும் உதவிச் சங்கத்தின் சினனமாக விளங்கித் தனிப்பெருமை வாய்ந்ததாகத் திகழ்வது சிலுவையே !

அச்சிலுவையின் சரித்திர மெனன ? அது எப்படித் தோன்றியது? அது தோன்றுவதற்குக் காரண காரியங்கள் யாவை ? காரணக் கர்த்தாக்கள் யாவர்? அதை எப்படி யாருக்காகப் பயன்படுத்தினர்கள்? அந்தச் சிலுவையைச் சுமந்த பரமபுருஷன் யார்? என்பன முதலிய கேள்விகள்

நம் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் ஆழ் கடலில் நிலவொளிப் பட்ட அலைகளின் இனிய ஒலியைத் தோற்றி மறைகிற தல்லவா?

சிலுவை உண்டானதற்குப் பல காரணங்களைப் பெரியவர்கள் சொல்லுகிறார்கள். அந்தச் சிலுவை மரத்தைச் செய்வதற்குப் பயன்பட்ட மரத்தின் சரித்திரத்தைப் பலர் பலவாருகச் சொல்லுகிறார்கள். அவைகளை எல்லாம் ஆராய்ந்து பார்க்கின்றபோது சில உண்மைகளும் புதைந்து கிடப்பதை நாம் அறிகிறோம். அந்த உண்மைகளை மெய்ப்படுத்தும் வகையில் நடந்த சம்பவங்கள் நமக்கு முன்னோடிகளாக இருக்கின்றன. ஆதிக்கால நிலையை விளக்கும் ஓர் உண்மையைக் காண்போம.

ஆதாம் வயோதிக வயதடைந்து தன அந்தியக் காலம் நெருங்கிப் படுக்கையில கிடக்கிறான. தனது மரண யாத்திரை தொடங்க இன்னும் சற்றுக் காலமே இருப்பதாக ஆதாம் உணர்ந்து தன் குமாரர்களில் ஒருவனான சேத்தவனை அழைத்து' 'மகனே சேத்தவா' எனது அந்தியக்காலம் நெருங்கிவிட்டது. ஆகையால் நீ சிங்காரத் தோட்டத்திற்குச் சென்று அங்கீகரிக்கும் காவல் சம்மனசைக் கேட்டு ஜீவியத் தைலம் கொண்டு வா என்று சொல்ல அதற்குச் சேத்தவன் "அப்பா. எனக்குச் சிங்காரத் தோட்டத்திற்குப் போக வழி தெரியாதே', எனக்கூற 'மகனே நானும் உன் தாயும் அங்குத்தான ஓடி விளையாடினோம கடைசியாக நாங்கள் அத் தோட்டத்தை விட்டு வரும் போது நடந்து வந்த காலடிகள் அங்கு நன்ருகத் தெரியும் அதன் மேல் புல் முளைத்திருக்காது. அந்த அடையாளத்தை வைத்துக் கொண்டு போய்வா "என்று சொல்ல, அப்படியே சேத்வன் சிங்காரத் தோட்டத்தை அடைந்து காவல சம்மனசை அணுகி விஷயத்தைச் சொல்ல, அதறகுச் சம்மனசானவன், "தம்பி ஜீவியத்தைலம் இப்போது கிடைக்காது. அதற்குக் காலம் கடந்து விட்டது. ஆகையால் நீ இரவு முழுதும் காத்திருந்தால் ஜீவிய விருட்சத்தின் பழம் காலையில உதிரும் அதை எடுத்துக் கொண்டு போய் ஆதாமிடம் கொடு" என்று

சொல்ல, சேத்தவனும் அப்படியே காத்திருந்து பழத்தைக் கொண்டுவந்து ஆதாமிடம் கொடுத்துத் தேவதூதுவன் சொல்லியவற்றை ஆதாமிடம் சொல்ல, அதைக் கேட்ட ஆதாம் குலுங்கக் குலுங்க நகைத்தான் ஆம் ஏதன் தோட்டத்தை விட்டு வந்தப்பிறகு ஆதாம் சிரித்த முதல சிரிப்பு இதுதான். அது என்ன சிரிப்பு? உலகமே! இவ்வளவு நாள் நீ என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தாய் நான் நடக்கும ஒய்யார நடை, உடுத்தும் அலங்கார உடை, அதனால ஏற்படும் பெருமையான வாழ்வு அதை நம்பிக் கொண்டு மற்றவரை மதிக்காமல தனது மனம்போனபடிபோன மமதையான போக்கு இத்தனையும் பார்த்துப பார்த்து என்னை ஏளனம் செய்து சிரித் தாய ஆனால, இன்று உன்னைப பார்த்து நான சிரிக்கிறேன! ஏ உலகமே! இன்றும எத்தனை நாளைக்குப் பாவிகளையும, பாத கர்களையும், படுமோசக்காரர்களையும உருவாக்கி ...த்து உன ... தாரித்தனத்தை வளர்த்துக் கொள்ளப போகிறாய அப்படிப பட்ட உன்னைபபார்த்து இன்று நான் சிரிக்கிறேன்'' எனபதற்கு ஒப்பாகத்தான ஆதாம் அந்தக் கடைசிச் சிரிப்பை சிரித்திருக்க வேண்டும்

ஆதாம் ஆண்டவரை நோக்கி வணங்கி 'ஆண்டவரே என்னைப படைத்தவரே! இனி இந்த உலகில் தங்க நான எண்ணவில்லை, ஆகையால உமது பாதத்தில உமக்கு உரிய வனாகிய என்னைச் சேர்த்துக்கொள்ளும்'' என்று சொல்ல, குறிப்பறிந்த சேத்தவன மூன்று வித்துக்களை நாவடியில வைக்க மூன்று நாள கழித்து ஆதாம இறந்து விடுகிறான சேத்தவன் ஆதாமை எபிரோன கணவாயில அடக்கம செய்தான

ஆதாமைப் புதைத்த மூன்றும் நாள் அம மூன்று விதைகளி லிருந்து மூன்று செடிகள முளைத்தன அவை காலப்போக்கில பெரிய மரங்களாக வளர்ந்து பெரிய காடு போல் காட்சி அளித் தன மரங்களெல்லாம் மரங்களாகி விடுவதில்லை ஆம். சில மரங்கள் வானளாவ ஓங்கி வளர்ந்துவிடும் ஆனால், மக்கள் தங்குவதற்கோ அல்லது வேறெந்த பயனுள்ள வேலைகளுக்கு உபயோகப் படுத்துவதற்கோ முடியாத முறையில் பயனற்றுப் போய் விடுகின்றன. ஆனால, நாம் சொல்லும் மரம் சரித்திரத் தில் இடம் பெற்ற மரம்.

அம்மரத்தின் கீழ் கணக்கற்றவர் தங்கி இளைப்பாறிச் சென்றுள்ளர்கள், எகிப்திலிருந்து வந்த மோசே, தனது இஸ்ரேயல் மக்களை அழைத்துக் கொண்டு போகும் போது அவர்கள் எல்லோருக்கும் நிழல் கொடுத்தமரம.

'மாரா' எனகிற கசப்பான ஆற்றுத் தண்ணீரை நல்ல தண்ணீராக்க மோயிசன் அதன கிளையை ஒடித்துப போட்டு, குடிக்க நீராக்கித் தந்த நலல மரம்.

அதன மறறொரு கிளையை மோயிசன் ஒடித்துக் கற்பாறை மேல அடிக்க, பாறை பிளந்து தண்ணீர் ஊறறெடுத்து ஓடிவரச் செய்த மரம்.

தாவீதரசன வந்து இளைபபாறிய பாக்கியம பொருந்திய மரம்,

அதுமட்டுமனறு, தாவீதரசனின் குமாரன் சாலமோன் ராஜா தேவாலயம கட்டுவதறகு உபயோகப்பட்டமரம். சாலமோன தேவாலயம் கட்ட அதன உத்திரத்திற்கு மிகப பெரிய மரம் தேவைப்பட்டது. எங்கெங்குத் தேடியும் அவ்வளவு பெரிய மரம கிடைக்கவில்லை. கடைசியில் ஆதாமின கல்லறையின் மேல் வளர்ந்த மரமே எல்லா மரங்களிலும் மிக உயரமாகக் காட்சி அளித்தது. அவவளவு பெரிய தேவாலயமா அது? இதோ சரித்திரம கூறுகிறது.

> 'சாலமோன அரசாட்சியின் நாலாம வருஷத்தில் எருசலேமிலுள்ள கோரியா பர்வதத்தின மேல் ஆண்டவருக்கு ஓர் ஆலயத்தைக் கட்ட ஆரம்பித்தார். அது கட்டப்படும் போது, மரங்களை வெட்டிக் கொண்டுவர எழுபது ஆயிரம் ஆட்களும், கற்களைப் பெயர்த்து வேலை செய்யும் சிற்பிகள் 80 ஆயிரம் பேரும வேலை செய்ததுடன், 3600 மேஸ்திரிகள் மேல் விசாரணை பார்த்து வந்தார்கள். லிபனன் மலையிலுள்ள கருங்காடு விருட்சங்களை வெட்டும்படி 10 ஆயிரம் இஸ்ரெயலத்தார் அனுபபப் பட்டார்கள்.

தேவாலயக் கட்டடம், பிரமாண்டமானதும் அதன் பரிமானத்திற்கேற்ற சிறப்பும, அலங்காரமும்

வாய்ந்து கம்பீரத் தோற்ற முடையதாயிருந்தது. அதன நீளம் 60 முழம்; உயரம் 30 முழம்; அகலம் 20 முழம. இதைத்தவிர, அக்கட்டடத்தைச் சுற்றி மண்டபங்களும ஆசாரியருக்கும் ஜனங்களுக்கும் உப யோகபபடும்படி முற்றங்களும் அமைக்கப்பட்டிருந் தன". (வேதாகம சரித்திர கி மு. 1003)

ஆகவே அம்மரங்களை வெட்டி அவற்றை உபயோகப் படுத்தினார்கள். ஆனால் அந்த மரங்களும் நீளம் போதாமல் போகவே அப்புறப்படுத்திக் கோவிலைக் கட்டி முடித்தார்கள்.

ஒதுக்கித் தள்ளப்பட்ட அம்மரத்தினால் யூதர் குலத் திற்கே ஆபத்து வருமெனறு ஒரு தீர்க்கதரிசி சொல்ல, யூத ஜனங்கள் அம்மரங்களை ஒரு நீரோடையின உள்ளே ஆழமாகப் போட்டுப் புதைத்துவிட்டார்கள். ஆனால் அவர்கள் எண்ணிய படி அம்மரங்கள் மக்கி அழிந்து விடாமல நீரின்மேல மிதக்க ஆரம்பித்தது.

அந்தச் சமயத்தில சாலமோன் ராஜாவின தேவாலயத்தைப் பார்க்க சாபா நாட்டு இளவரசி வருமபோது 'சேத்ரோன்' என்னும ஆற்றைக் கடக்க வேண்டியதாயிற்று. அப்போது வேலையாட்கள் மிதந்துகொண்டிருந்த இந்த மரங்களை ஆற்றைக்கடக்க பாலமாகப் போட்டார்கள். அப்பாலத்தின மீது இளவரசி நடந்துவரும்போது, அவளுக்கு ஒருவித திகைப்பு உண்டாகி, கண்களை மூட அவள் கண்டகாட்சி இளவரசியைத் திடுக்கிடச் செய்தது.

நடந்துவரும அம்மரத்தில கிறிஸ்துநாதரை சிலுவையிலே அறையும காட்சியைக் கண்ட ராணி, சாலமோன் அரசனிடம் சொல்ல, சாலமோன் ராஜா. அம்மரங்களைக் கொண்டுவந்து தங்கத் தகடுகளால அம்மரத்தை மூடித தனனுடைய தேவால யத்தின முன் தொங்க வைத்தார். மக்கள் எல்லாம், அதை ஆராதித்து வணங்க, அதைக்கண்ட பொன்னாசை பிடித்த 'அபியா' என்பவன தன்னுடைய ஆட்களை அனுப்பித் தங்க பதித்த அம்மரங்களைக் களவாடி வரச்சொல்லி, தங்கத் தைக் கவர்ந்து தன்பொக்கிஷத்தை நிரப்பி, மரத்தைப் புதைத்து விட்டான், புதைந்த அம்மரத்தின் நிலை என்ன? இதோ சரித்திரம் கூறுகிறது.

"சாலமோன் இராசா விக்ரக ஆராதனையில் விழ, அஞ்ஞான சனங்களெல்லாரும் அவர் பிசகிப் போனதுக்காக சந்தோஷித்துக் கொண்டிருக்கையில் ஒருநாள் சர்வேஸ்வரன் இவர்மீது தனது கோபாக்கினி சமீபித்திருக்குதென்று காட்டப் பெருங்காற்றெழும்பி இடிமுழக்கத்தோடு, பிரசண்டமாருதமும் பெருமழையும் சொரியவே, ஆறேரிகள் கரைபுரண்டோடிச் செழுமையான நஞ்சை புஞ்சை நிலங்களெல்லாம் பள்ளங்களும் சதுப்பு நிலங்களுமாக மாறிப் போயிற்று. அப்பொழுது இந்த மரம் வெள்ளத்தாலிழுக்கப்பட்டு ஆழ்ந்த ஒரு சதுப்பு நிலத்தின சேற்றுத் தண்ணீரில் ஆழ்ந்து கிடந்தது. அநேக யுகங்களுக்குப் பிறகு தண்ணீர் வற்றியதினால் அவ்விடத்திலொரு காணிக்கைக் குளமெனகிற ஒரு குளம் வெட்டப்பட்டது; அதிலிருந்த அந்த மரம் சம்மனசுவினாலே கொடுக்கப்பட்டதினாலே மாத்திரமல்ல— சுபாவிகமாகவே அதினுடைய மகத்துவத்தினாலும் தண்ணீர் கொந்தளித் தசைகிறது கண்டு, அப்போது வியாதியாயிருக்கப்பட்டவர்களில் யார் முந்தியிறங்குவார்களோ அவர்கள் குணப்படுகிறது வழக்கமா யிருந்தது ஆயினும் மரத்தைக் குறித்து யாவரும் மறந்தே போனார்கள். ஆனபோதிலும், சந்ததிகள் தோறும் பழைய உடன்படிக்கையிலிருந்து புதியவுடன்படிக்கை மட்டும் பாரம்பரமாக ஒரு பெரிய மரம் ஜீவித்திருக்கிறதென்கிற வார்த்தையானது அநேகரால் வழங்கி வந்தது. தெய்வசித்தப் பிரகாரம் சேசுகிறிஸ்துநாதர் பூங்காவனத்தில் வியாகுலப்பட்ட இராத்திரி பகையாளிகளால் பிடிபட்டபோது அவர்களுக்கே ஏதோ ஒரு கனவு கண்டதுபோல் இவ்விருட்சமானது மற்றெல்லா விருட்சங்களைப் பார்க்கிலும் மனிதர் பாவங்களினால் நிறைந்திருக்கிறதென்றும் அது தண்ணீரில் நனைந்து கொண்டிருப்பதினால் கனமாயிருக்குமென்றும் நினைத்து அதைத் தோண்டி எடுத்து அதிலே ஒரு சிலுவை செய்து கொல்கொத்தர

வென்னுமலையினுச்சி வரையில் கர்த்தர் திருத்தோளின் பேரில் அதைச் சுமத்திக் கொண்டு வந்து அதி லறைந்து அங்கொரு குழிதோண்டி அச் சிலுவையை நாட்டினார்கள்"

(சத்திய வேதானுசாரம்
1—15—1890)

சிலுவை ஆண்டவர் நமக்கு அளித்த அடையாளமாகும். கிறிஸ்துவை நாம் மட்டுமல்ல உலகத்திலுள்ள அத்தனை மக்களும நினைக்கின்றபோது கிறிஸ்துநாதருக்கு முன்னால் நம் நினைவுக்கு வருவது சிலுவையே. இதோ வேதம சொல்லு கிறது.

"அபபொழுது மனுஷ குமாரனுடைய அடை யாளம வானததில காணபபடும அபபொழுது, மனுஷகுமாரன வல்லமையோடும மிகுந்த மகிமை யோடும வானத்தின மேகங்களினமேல வருகிறதை பூமியிலுளள சகல கோத்திரத்தாரும் கண்டு புலம்பு வாாகள."

(மத்தேயு 24: 30)

ஆம. கிறிஸ்து பிரானின் சிலுவை அடையாளம் முதலில் தோன்றும. பிறகு அவரே மேகங்களின மேல வருவார் என்பதை வேதம் மற்றோர் இடத்தில கூறுவதைக் கேட்போம்.

சூரியனிலும், சந்திரனிலும், நட்சத்திரங்களிலும் அடையாளங்கள் தோன்றும். பூமியின் மேலுள்ள ஜனங்களுக்குத் தத்தளிபபும் இடுக்கணும உண்டா கும. சமுத்திரமும் அலைகளும் முழக்கமாயிருக்கும்"

(லூக்கா 21; 25)

இப்படித் தோன்றுகின்ற வேதத்தின் அடையாளமே சிலுவை தான். இச்சிலுவையின் சரித்திரத்தை மிகத் தெளிவாகச் சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு (300) முன் எழுதபபட்ட ஒரு நூல் கூறுகிறதைக் காண்போம்.

"ஆதியிலே ஆதாமை அடவிவிட்டு
நீங்கியப் பின்
வாழ்ந்துவந்த காலமும்போய்
வதிக கிழவனாகி
மரணம வருங்காலங் கண்டு
மனமாரத் தானறிந்து

தன் மகன சேத்தவனை தயவாகத் தானழைத்துக்
கண்ணுற வெனமகனே கழறுவேன கேளுமடா
எனக்கோ மரணகாலம் இனிதாய் முடிந்தாப போல
இருக்குது யெனமகனே இனி நாகச் சொலுகிறேன கேள்
முனனே நான தங்கியிருந்த முதுமை இடமதான
ஏதேன எனனும் தோட்டத்திறகு என மகனே நீ
நுழைந்து
சீவிய விருட்சத்தைச் சிறப்பாகக் காவல செய்யும
வானவரைக் கண்ணுற கண்டு வணங்கியே போய்
நிறபாய
நிறகையிலே எனன வென்று நிருபனுருரை பகர்வார்.
அப்போது-என் மகனே அன்பாக நீயுரைபபாய்
வாக்களித்த நறறயிலம வலலவரே தாருமென்பாய்
அபபடியே தந்தாலே அவசரம் நீ கொண்டு வாராய்
எனற மொழிகேட்டு யேதுரைபபான சேத்தவனும்
அருமை என தாதாவே அடவியான யேதன தோட்டம
பார்த்து அறியேனே பட்சமுள்ள என் தகப்பா
வழியுந் தெரியாது வாகை சிறியனையா
அந்த மொழி கேட்டு ஆதாமு மேதுரைப் பார்
என் மகனே யுந்தனுக்கு யினிதாகச் சொல்லுகிறேன கேள்
சூரியன் தானுதிக்கும் சொர்ணக் கிழக்குப் பக்கம்
கிழக்குப்பக்கம் போனாலே கிட்டுமோர் கணவாய் வழி
அந்த வழியிலே தான் ஆனவுன் தாயும் நானும்
நீயும்பிறக்கா முன்னே நீண்டு நடந்து வந்தோம்

அந்தவழி தனிலே ஆனவெங்கள் காலடியை
கண்ணாலே கண்டிடுவாய் காரணத்தைச் சொல்லுகிறேன்
கேள்

அதின் மீது புல் பூண்டு யாது முளைத்திடாது
அதுவே தெரிந்து கொள்ளு யருமையான எனமகனே
ஏறி நடத்தாலே ஏதன் தோட்டங் கண்ணிற் காண்பாய்
கண்டு சீவக் கனியைக் கண்மணியே பெற்றுவாடா
அந்த மொழிகேட்டு அழகிய சேத்தவனும்
அப்படியே நலமென்று அடிபணிந்து தோத்தரித்துச்
சிறப்பாய் நடந்தானே சிங்காரச் சேததவனும்
கண்டுபிடித்தான தகப்பனுர் சொன்ன வண்ணம
ஏறறிடத் தோட்டத்தை யினிதாக வந்து சேர்ந்தான
அத் தோட்டக் காவல் செய்யும் அழகான தேவதூதன்
உருவிய பட்டயத்தை அந்தரமாய்க் கைபபிடித்து
உலாவித் திரியும் போது ஒளியே கனத்து வீச
கண்டு பிரமை கொண்டானே காளைச் சிறுவனவன
நாவெடுத்துப் பேசாமல் நலிந்து சொக்கி நிறகையிலே
கண்டு தெளிந்தாரே கனமான தூதனவர்
அப்பா-சிறுவனே நீ யாரைத்தேடி யிஙகு வந்தாய்
எந்தனுக்குச் சொலலுமென்று யினிதாகக் கேடக்கலுற்ருர்
அப்போது சேத்தவனும் அழகாக வேது சொலவான
''என்னுடைய தந்தையவர் இனிதான ஆதாமும
காலம் முடிவாகிக் கடைசி மரணவேளை
நெருங்கி யிருப்பதாலே நீதிபிதா வாக்களித்த
ஞானத்தயில மதை நான் வாங்கிப் போக வந்தேன்''
என்று முடிசாய்ந்து யினிதாகத் தோத்தரித்தான
அப்போது வானவனும் அன்பாக வேது சொலவார்
அந்தத் தயிலமது ஆ சிறுவா கிட்டாது
கால மிருக்குதப்பா கணக்காக கிட்டுதற்கு
என்ற மொழிக்கேட்டு யிளையோன் கிலேசமுற்று

வானவனே உன் பாதம் வணங்கியே தோத்தரித்தேன்
கிட்டுவது எக்காலம் கிருபையால சொல்லு மென்றுன
அப்போது வானவனும அன்பாகச் சொல்லுகிருர்
அய்யா யிரஞ் சென்று அதற்குமே லஞ்ஞூறு
முறுங் கழிந்த பின்பு முதல்வனுர் வாக்கின்படி
கிடைக்குமையா சிறுவா கிருபையினை மொன்று
சொலலுகிறேன் கேளுமடா சோருவதால கெட்டவனே
காணுமிந்த மரந்தனிலே கண்டிப்பாய்க் கண் விழிப்பாய்
சிவிய விருட்சமிது சிறப்பாயறிந்து கொள்ளு
இந்த விருட்சத்தின் இனிதான வித்து மூன்று
இதனை எடுத்துக் கொண்டு இனியவுன தந்தையிடம்
கொண்டு சென்று அவனுடைய நாவின் கீழே பதிழுததிடுவாய்
அமிழுதத்த பின மூன்று நாளில ஆதாம மரித்திடுவான
அதறகுமேல பாதாள அழுத்தில வீற்றிருப்பான.
சொன்னேன் தெரிந்தாயா சுந்தர வாலிபனே.
இன்னமுஞ் சொலலுகிறேன இனிதா யறிந்து கொள்வாய்
அதற்கு மேல் ரெண்டாமாதம ஆதாமுக்கு வந்திடுவார்
வந்தபின்னுன தகப்பன வாழ்க்கை சிறப்பாகும
என்றுவுரை பகர்ந்தார் இனிதான சம்மனசும
காதாரக கேட்டானே கனமான சேத்தவனும்
அப்படியே சேததவனும அறுத்துக் கொண்டு
அக்கனியைத்

திரும்பினுன தந்தையிடம் திகழ்பெரிய சேத்தவனும்
வந்து வணங்கினுன் வளமை பெரும் தந்தையைக்
கண்டாரே ஆதாமும் கனமான தனமகனை
நான-சொன்ன பிரகாரம் ஞாயம் முடிந்துவிட்டதா
என்று-ஆதாம் கேழ்க்கும் போது எடுத்துரைப்பான்
சேத்து.

தேவதூதன சொன்னதெலலாப் சிறப்பாக சொல்லி
வந்தான்

காதாரக் கேட்டாரே கனமான ஆதாமும்
குலுங்க நகைத்தாரே குழந்தையவன் சொல்லைக் கேட்டு
அப்போது ஆதாமும் ஆண்டவரைத் தான் பார்த்து
என்னத்தை சொல்லுகிறுர் இனிதான ஆதாமும்
என்னைப படைத்தவரே இனிதங்கே னிவ்வுலகம்
உயர்நத உன் பாதமதில் உரியவனைச் சேர்த்தருளும்
என்ற சொல கேட்டு யினிதான சேத்தவனும்
வானவன் தான கொடுத்த வழியே வித்துவைத்தான்
ஆதாமின் நாவடியில அனபாக வைத்தானே
வைத்த மூன்றும் நாளதிலே வழகிய வாதாமும்
அபபோது சேத்தவனும அப்பன சடலமதை
சீராட்டி நேமநிஷ்டை சிறப்பாகத் தான்புரிந்து
எபிரோன கணவாயில் எடுத்து அடக்கஞ் செய்தான்.
அடக்கஞ் செய்த மூனரும் நாள் அந்த விததிள்
காரணத்தால்
பரமத் திருத்துவத்தின் பாங்கின் சிறப்பாக
மூன்று சிறு செடிகள் முளைத்ததே நயமாக
நாளுக்கு நாளாக நிகழ்ந்து பெருமரமாய்
மூன்று மர மொன்ருய் முடிவில்லா வேரோடி
காலஞ்செழித்ததுவுங் கணக்காய் வளர்ந்துவர
இப்படியர்ய் வளர்ந்து இனிதா யிருக்கையிலே
சொல்லொணு வழிப்போக்கர் சோர்ந்து அங்குத்
தங்கிடுவார்
எஜிபத்திலே யிருந்து யினிதான மோசையார்
இஸ்ரயேல் ஜனத்தை இட்டுக் கொண்டுப போகும்
போது
அல்லவர்க்குந் தங்குதற்கு அழகுநிழல் தந்த மரம்
அந்த-மரங்கினை யொடிந்து அன்பான மோயீசன்
மாராவின் கசப்பான மாற்ற மதைத் தான் பிரித்து

மதுரஜல மாக்கிவைத்து மக்களைக் குடிக்கவைத்தார்
பின்னுமொரு கிளையொடித்து பிரபல மோர்யீசன்,
கற்பாறையில் தண்ணீரை கனம்பொழிய வைத்த மரம்
தக்கப்படி கேட்டு வாருங் தாவீ தரசனவர்
வந்து அங் கிளப்பாறிய வரத்தில் சிறந்த மரம்
தாவீது பெற்றெடுத்த தவத்தில் மிகச் சிறந்த
சாலமோன் தேவாலயஞ் சதுராகக் கட்டுதற்கு
வெட்டு விழுத்தி விளைப்படி முடிக்காமல்
ஒதுக்கிக் கிடத்திவிட்டு உபயோக மில்லாமல்
கிடந்திட வோர் கால சியானி கிருபையுடன் தான் பார்த்து
இத்த-மரம் பின்னைக்கு யினிதா வுதவு மென்றும்
யூதர்க ளழிவுக்கு யுபகார மாகு மென்று
சொல்லியிருந்ததாலே சோர்ந்து யந்த யூதஜனம்
என்ன விளைந்திடுமோ யிந்த மரத்தாலே
பெரியோர்கள் வாக்கியத்தைப் பிசகாக்க வென்றது
நிலைத்திடா இம்மரத்தை நீர்மூலஞ் செய்வோ மென்று
அல்ல வநந்தான் கூடி யம்மரத்தைத் தானெடுத்துப்
பெருத்தவோர் நீரோடையில் போட்டுப் புதைத்து விட்டு
மண்ணுலக மக்கியது மாறட்டு மென்று விட்டார்.
நாளுக்கு நாளதுவோ நவிலு மந்த நீரதிலே
மிதக்கி மிதக்கியது முன்னுடுச் சென்று வர
அனளுளில சாபா வென்னும் அழகிய நாடாண்ட
கன்னியந்த ராக்கினியும கனமான சாலமோனை
காணுதற்கு வரும் போது கட்டையான இந்தமரம்
சேத்ரோன அருவிக்கு சிறந்த வோர் பாலமாக
நின்ற தாலதின் மேலே நேரிழை நடந்துவர
என்ன வொருக் காட்சி யவனிதாகக் காணுகிருள்
சேசு பரன்கை விரித்து சிலுவையில் தொங்குவிதம்
கண்ணாலே கண்டு கவழ்ந்து வணங்கி நின்ருள்

வணங்கி நின்ற சாலமோனை வந்து விஜயஞ் செய்தான்
கண்டவதி சயத்தைக் கனமாகத் தானுரைத்து
இந்த மரத்தினிய ஏசுவின் நற்பாடு கண்டேன்
என்ற மொழிகேட்டு யினிதான சாலமோனும்
அந்த மரமதனை யழகாகக் கொண்டு வந்து
சொல்லொன்றைத் தங்கமதால் சுற்றிக் கவசங் கட்டி
சாலமோன் தேவலாயத் தலத்தினில் தொங்கவைத்தார்
வைத்திருந்தாரம் மரத்தை வாஞ்சையுடன கண்டவர்கள்
வாயார வாழ்த்தி வசனிப்பார் சீர்பெற
இப்படியாகவே யினிதாக நடந்துவர
தூன் மார்க்கன அடியாவின் தொகைகால மங்கிருக்க
காலனந்த அபியாவும் காணுமந்த நன் மரத்தின
பொன்னைக் கவர்ந்து கொள்ள புத்தியிலே தான் நினைந்து
தங்கமெல்லாம் பேர்த்தெடுத்துத் தனது பொக்கிஷம்
வைத்து
மரமதனை பூமியிலே மகத்தாய் புதையு மென்ருன்
அப்படியே செய்து விட்டார் அவனுடைய வீரர்களும்
சென்று வெகுகாலம் சிறப்பாகப் நடந்த பின்பு
அவ்விடத்திலோர் கிணறும் வெட்டி ஆன
ஜனங்களெல்லாம்
பட்சமுடன் நீரருந்தி பெத்செய்டா குட்டையென்று
சீராக பேருமிட்டுச் சிறப்பாய் நடந்து வந்தார்
கடைசியூதர் தன்னிடமே கண்ணவனுர் (ஏசு)
கிட்டியபின்
இந்த மரம் நீர்தனிலே யினிதாய் மிதக்கக் கண்டு
அன்னவரைத் தானறைய அழகிய மரமீதென்று
யூதர்கள் தானெடுத்து யொழுங்கான குருசடித்து
அந்த மரந்தனிலே அழகாய் அறைந்து விட்டார் ”
(பார்ப்பரம்மாள் மாலை

என்பதை பெங்களூர் இயற்றமிழ் வித்வான் ச. ஆசீர்வாதப் புலவர் மிகத் தெளிவாக பார்பபரம்மாள் மாலை என்ற கவிதையிலே எழுதியிருக்கிருர்.

கிறிஸ்து நாதரை அறைந்துவிட்ட பிறகு சிலுவையின அச் சரித்திரம அதோடு நினறுவிடவில்லை. முனபு கூறியதுபோல அவமானச் சின்னமாகக் கருதப்பட்ட சிலுவை ஏசுபிரான் அறையபபட்டதால அதிக பெருமை வாய்ந்ததாகச் சரித்திரத் தில இடம பெறறுவிட்டது. ஆனால கிறிஸ்துவை அறைய ஏது வாக இருந்த மரம் ஏறகனவே சீரும் சிறபபும சரித்திரப் பெருமையும் வாய்ந்த மரம் எனபதை நாம் அறிந்தோம். ஆனால ஏசுநாதரை அறைந்து, அவர் மூனரும் நாள் உயிர்த் தெழுந்து ஞான ஒளியாக மாறிவிட்ட பிறகும் சிலுவையின் சரித்திரமும் அதன கீர்த்தியும மென் மேலும பிரசித்தி பெறறதையும நாம் அறிகிருேம.

நமமுடைய வாழக்கையிலே பலதிருப்பங்கள் வருகின்றன, அத்திருபபங்களின காரணமாக நாம் சொலலக்கூடாத சில இடங்களுக்குச் செலலுவதும், சென்ற இடத்தில சிறப்பாக, வாழ்க்கை நடத்துவதும, இன்றேல அங்கேயே இறந்து விடு வதும உண்டு. ஆனால எதிர்பாராத விதமாக அந்த இடம் நமது பாட்டன வாழ்ந்த இடமாகவோ அல்லது நம்மைப் புதைத்த அதேகுழியாகவும இருந்துவிடக்கூடும். அந்த இடமதான நமது பாட்டனைப புதைத்த அதே குழியாகவும் இருந்து விடக்கூடும் அந்த இடம்தான் நமது பாட்டனைப் புதைத்த இடமெனறு அங்கு ஒரு பெரியவர் கூற அதை நம் பேரன் கேட்டு அபபடியா எனறு ஆச்சரியப்படக் கூடிய சம் பவங்களும் நடந்துவிடும். அப்படித்தான் கிறிஸ்துவின் வாழ்க்கையிலும நடந்ததும் அந்த மெய் சிலிர்க்கும் சம்ப வத்தைச் சரித்திரம் நமக்குக் கூறுகிறது.

"அச்சிலுவை நாட்டிய இடம் ஆதாமைப புதைத்த சரியான கலலறையாக இருந்தது. அதி லகப்பட்ட ஆதாமின் கபாலத்தைச் சிலுவையடியில் வைக்க மனிதர்களுடைய இரக்ஷிப்புக்காகச் சிந்தின சிரை விரக்குக் சாளிகளால் அரை கறைபட்டது. சேசு

நாதசுவாமி உயிர்விட்டபோது இப்பூவுலகத்தின் சுபாவ குணமாறி விண்ணிலு மண்ணிலும் கொந் தளிப்புண்டாயிற்று. அநேக நூறு வருட காளமவவும் சிலுவை ஆணி முதலிய திருபபாடுகளின் ஆயுதங்கள் காப்பாற்றபபடாதிருந்ததாலும் அவைகள் அம் மலை யிலே புதைக்கப்பட்டிருந்தன, அந்நாட்டை ஜெயங் கொண்ட அஞ்ஞானிகள் அதனபேரில் வீனஸ் எனனும் நாமமுள்ள ஒரு துஷட தேவதைக்கு ஒரு கோயில் கட்டினார்கள். அக்காலத்தில் கொனஸ தநந்ஹ்ராயன என்கிற சக்கரவர்த்தி கடைசியிலே மேகத்திறகண்ட ஒரு சிலுவையினால் வெறறி அடைந்ததறகு அடையாளமாக எலலா மனிதர்களையு மிரட்சிக்கிறதற்கு ஆதிகாரணமாயிருந்த இந்த ஆதி சிலுவையைக் கண்டுபிடித்து அவ்விடத்தில கோவில் கட்டத் தீர்மானித்தான். அதெப்படி யெனறால் அவனுடைய பக்தியுள்ள 80 பிராயஞ் சென்ற அவனுடைய பக்தியுள்ள எலெலன வென்கிற தாயார் ஜெருசலேம் நகருககு யாத்திரையாக வந்த அச்சிலுவையைத் தேடிக் கண்டடையும் பொருட்டு அககாலத்திலிருந்த மேறறி ராணியாராகிய மகேரி யவை ஆண்டவருடைய ஜெப ஒத்தாசையை வேண்டிக் கொண்டான, உடனே ,அஞ்ஞானிகளால கட்டப பட்ட கோவிலை இடித்து அதன அஸதிவாரத்தைத் தோண்டுகையில அதிலே மூன்று சிலுவைகளும ஆணிகளும் முள்முடியும எழுத்து வரைந்த தகடும் அகபபட்டன. இந்தத் தகடு மறறிரண்டு சிலுவை களுக்குச் சரிப்படாமல் ஒன்றுக்குச் சரிப்பட்டா லும இவ்விராக்கினியும், மேறறிராணியாரும் இது தான் நாங்கள் நாடிய பொருளென்று திருபதி யடை யாமல் இன்னும் சந்தேகித்திருக்க இவ்வாண்டவர் சர்வேஸ்வரனை நோக்கி எதுவெனறு நிச்சயப்படுத்த ஓர் அடையாளங் காணவேண்டுமெனறு அக்காலத் தில ஜெருசலேம் பட்டணததில எல்லா வயித்தியர் களாலும கைவிடப்பட்டு இதோ சாகப் போகிற

னென்கிற ஒரு ஸ்திரியைக் கொண்டுவரச் செய்து சகல மனிதர்கள் முன்பாகவும் மூன்று சிலுவைகளின் பேரிலும் ஒவ்வொன்றுகக் கிடத்திட இடத்தில் இரு சிலுவைகளால் ஒன்றுமில்லாமல் மூன்ருவது சிலுவை இவள்மீது பட்டவுடனே சொஸ்தமாகி எழுந்து நடந்தாள். அந்த நாள் முதல் எல்லாச் சனங்களும் இச் சிலுவையாராதனை செய்யத் தொடங்கினுர்கள். இப் பரிசுத்தமான சிலுவையையும் ஆணிகளையும் தம் குமாரர்களுக்கு அனுப்பினள். மற்றெல்லாவற்றையும் வெள்ளியினுல் செய்யப்பட்ட ஒரு பேழையில் வைத்து இனி வருஞ்சந்ததியாருக்குக் காப்பாற்றி வைக்கும்படி மர்க்கியூஸ் ஆண்டவருக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டது.''

(சத்திய வேதானுசாரம் 15—1—1890)

பிறகு அம்மரத்தின் துண்டுகளை உடைபபதறகு உலகத்திலுள்ள அத்தனை இராசாக்களும வந்து ஒருவரோடொருவர் போட்டி இட்டுக்கொண்டு முந்தினுலும் கிறிஸ்துவ நாடுகளில மிக பிரசித்தி பெற்ற ஸ்தலங்களில மாததிரம் இவைகள் பரவி மகிமை பெற்றது எனபது சரித்திரம்.

சிலுவையின மாட்சிமை எடுதது இயமபுமதென்பது இச் சிறுவனுல இயலாத செயலாகுமலலவா!

**நீதியின வடிவம**

சிலுவை செந்நெறியை நமக்கு விளக்குகின்றபோது அச் சிலுவையைத் தாங்கி நின்ற சீர்பெற்ற தேவநாதனை நமக்கு அறிமுகப்படுத்தும்போது பாளையங்கோட்டை கிருஷ்ணப் பிள்ளை அவாகள் தெளிவுப்படுத்துகிருர்.

அக்ரமங்கள் அநியாயங்கள் அத்தனையும் அடுக்கடுககாக நடக்க வழி வகுத்துக் கொடுக்கும் காரிருளைக் கிழித்துக் கொண்டு நீதியின வடிவமாக நேர்மையின் உருவமாக—சமாதானத்தின தூதுவனுக ஒளிவீசும் சூரியனைப பாருக்கே ஒளியாய்த் திகழும் வார்த்தெடுத்த பசும் பொன்னை, போற்றி வைத்த புகழையும் ஏற்றி வைத்த பேரின்பத்தையும் சேர்த்து வைத்துச் சிந்தாமல் காட்சி யளிக்கும மாமணியைப் பரிசுத்த

மான நித்தியப் பிரகாசமாய் எங்கெங்கும் பரவிநிற்கும் ஒப்பற்ற ஜோதியை, என்றும் சுடர்விட்டுத் தூயவருக்கும், துஷ்டர்களுக்கும் வாழ்விற்கு வழியான வழிகாட்டித் தூண்டுகோலில்லாமல் என்றென்றும ஒளிவீசிக்கொண்டிருக்கும தூங்காமணி விளக்கை, செக்கச் சிவந்த மேல் வானம்போல் காட்சி அளித்துக் காணாத கண்களெல்லாம் கண்டுகளிக்கும் செம் பொன் நிறத்தொளியை — கிறிஸ்துநாதனை — வினைதீர்க்கும் வித்தகனை — வேதனைபோக்கும் விண் வேந்தை — சாதனைசெய்த சற்குருநாதனைச் சிலுவையிலே கண்டேன் எனபதை,

“ காயொளியிற் கதிர்பரப்பும்
களங்கறு நீதியின் சுடரைப்
பாயொளிகால பசும்பொன்னைப்
பணிக்கருஞ் சிந்தா மணியைத்
தூயொளி கொணித்திலத்தைத்
தூண்டாத சுடர்விளக்கைச்
சேயொளிகொள் செமமணியைச்
சிலுவை மிசைக் கண்டேனே.

(இரக்ஷணிய யாத்ரிகம்)

ஆம்; ஆனந்தக் கண்ணீர் பெருகப பாடுகிறார் கவிஞர்

இந்தப் பரந்த உலகம் வாழ்வதற்கு—வறுத இனபங்களை ஏற்று வாழ்வாங்கு வாழ்வதறகு ஜீவநீராகவும், அலலறபட்டு அயராதுவிட்ட துயரக் கண்ணீர் காய்ந்து படிந்த உப்பெனக் காய்ந்து கடினமாகிக் காட்சி அளிக்கும அந்தப் பாவ பூமியைக் கழுவிச் சுத்தப்படுத்த சிலுவை மரத்திலே அண்ணல் ஏசுவை ஆணிகளால் அடித்து, அடித்த துவாரத்தின் வழியாக வழிந்து வழிந்து சொட்டுச் சொட்டெனக் கொட்டும் தூய ரத்தமே இந்த உலகம் வாழ்வதற்குப் பாதுகாப்பாய் விளங்கும் நல்ல நீராகும்.

நீண்டு நெடுமரமாய் நின்றுகொண்டிருக்கும் சிலுவை மரத்தைக் கண்ணுக்கெட்டியதூரம் காட்சிப்படுத்த ஏதுவாயிருக்கும் கல்வாரித் திருமலை நமக்கு அளிக்கும் செய்தி. “மக்களே இதோ பாருங்கள் உங்கள் பாவங்களுக்காக—நீங்கள் தெரிந்தும் தெரியாமலும் செய்யும் நீசச் செயல்களுக்காகத்

தெய்வத் திருமைந்தனை, தேன் சுரக்கும் தூயசிந்தையுடையோனை, வையகத்திற்கே வாரிசாக அளிக்கிறேன்" என்பது அம்மேட்டிலே ஊன்றப்பட்ட சிலுவையில் வழிந்துகொண்டிருக்கும் உதிரம், "தீயவற்றை எல்லாம் நல்லன என்று காரியம் சாற்றும் மனிதர்களே இதோ வழிந்து கொண்டிருக்கும் இரத்தமாகிய நான், நீங்கள் செய்த நீதியற்ற செய்கைகளுக்குப் பரிகாரமாகக் காட்சி அளிக்கிறேன" என்று அறிவுறுத்தும்.

அதே சிலுவையைப் பாருங்கள். அங்கே ஏசுநாதன் தொங்கிக்கொண்டு, தம் முள்தாம் வருந்திவிடும் இரத்தக் கோலம், நம் உள்ளங்களிலே உண்மை தத்துவத்தை விளக்கி, நினைந்து, நினைந்து, கண்ணீரால் உடம்பு நனைந்து, நனைந்து, அவ்வுத்தமனைப் புகழ்ந்துபாடி மரணமிலாப் பெருவாழ்வைப் பெற வழிகோலும் சிலுவைமேல சிந்திய இரத்தத்தோடு நிற்கும் காட்சி நம் மனத்தில் படிந்து விட்டால் அதைவிடப் பெருமை எது இருக்க முடியும்? அதுவே பேரின்ப எல்லையாகுமல்லவா ?

அருமருந்து

ஒரு நாட்டின் சுதந்திரத்தைப் பெறுவதற்காக—அந்த நாட்டின விடுதலைத் தாகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக எத்தனைப போராட்டங்கள் உலக அரங்கிலே நடந்து முடிந்திருக்கின்றன என்பதை நாம் நன்கு அறிவோம். வயிறார உண்ண உணவு வேண்டி விவசாயத்தைப் பெருக்க—உடலார உடை உடுத்த நெசவுத் தொழிலைச் செப்பனிட—வளமான இல்லறம் நடத்த பொது நிலைகளை மேம்படுத்த காட்டை வயலாக்கி, வயலை வீடாக்கி, இவ்வளவும் வளர்ச்சி பெற்று நம் வாட்டம் தீர—வறுமை யொழிய, வறுமை அகல பிறந்த பொன்னாட்டிற்கு, அந்நியர் ஆதிக்கத்திலிருந்து—ஏன் நம்மவர் ஆதிக்கத்திலிருந்துங் கூட விடுதலை கேட்கிறோம்; கொடுக்கவிலலை என்றால் அதற்காக உயிரையே துச்சமென மதித்துப போராடி விடுதலை அடைகிறோம். ஆனால் உள்ளத்திற்கு விடுதலை தந்தோமா நாம்? ஊதாரித்தனத்திற்கு விடுதலை அளித்தோமா நாம்? உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று

பேசும் கள்ளத்தனத்துக்கு விடுதலை அளித்தோமா நாம்? இல்லையே! ஆனால் அத்துணைத் தீயசெயல்களும் சிலுவையின் சீரிய தியாகச் செயல்களை நம் உள்ளங்களிலே பதிய வைத்துக் கொண்டு விட்டால, அதுவே நம் வாழ்விற்கும் வையத்திற்கு விடுதலை அளிக்கும் அருமருந்தாகும் என்று பாட்டாளித் தலைவன் திரு. வி. க. சொல்லுகின்றார்.

"ஆணியில் சிந்திய செந்நீரே.
அகிலம் புரக்கும் நன்னீரே
திருமலை பொழிந்தது சொன்முறையே
சிலுவை வழிந்தது செயன்முறையே
சிலுவையின் நின்ற செங்கோலம்
சிந்தையில படிந்திடின் நறுஞ்சீலம்
சிலுவை நுட்பம் உளத்தினிலே
சேர்ந்தால் விடுதலை அளித்திடுமே"

(கிறிஸ்துவின் அருள் வேட்டல்)

தமிழ்த் தென்றல் கல்யாணசுந்தரனார் அவர்கள் உள்ளத்தி லெழுந்த உண்மை உணர்ச்சிப் பெருக்கோடு பாடியிருப்பதைக் கவனியுங்கள்.

சிலுவையின் சிறப்புகளைத் தனக்கே உரித்தான அமுதத் தமிழ்க் கவிதையில் அவர்கள் எழுதியிருக்கின்ற ஒவ்வொரு வாக்கியமும் நம் உள்ளங்களிலே விவரிக்க முடியாத ஓர் ஒப்பற்ற சிறப்பை உண்டாக்குகின்றன அல்லவா!

கருணையின தோற்றம :

கள்ளரும் கடுங்கோபக்காரரும் காசாசை கொண்டவரும் காமக் களியாட்டக்காரரும் மலிந்து கிடக்கிறார்கள் என்று சொல்லுவதைவிட, மலியவைக்கப் பட்டிருக்கின்றனர் என்று கூறுவதே சாலச் சிறந்ததாகும்.

நாம் ஒரு செயலைச் செய்ய நினைக்கின்றபோது அந்தச் செயல் நல்லதா கெட்டதா என்று முன்கூட்டியே நினைத்துப் பாராமல் செய்யத் துணிகிறோம். அதனால் குற்றவாளியின் முதற்படியில் நிற்கிறோம். அச் செயல் மற்றவர்களிடம் சொல்லும்போது அதைத் தடுத்து நிறுத்தி, நீ செய்யும் செயல்

தவறுனது என்று சொல்லாமல் அவன் செய்யும் செயலில் பங்கு கிடைக்கும் என்ற சுயநலப் போக்கால் நாமும் குற்றவாளியாகிச் சேர்ந்து செயல்பட்டு அதனுல் நாமும் குற்றவாளியின் இரண்டாவது படியில் நிற்கிறேம். மேலும் அச்செயல் நடைமுறையில் நிகழும்போது, உலக வாழ்க்கையிலே ஊடுருவிப் பாய்கின்ற போது, அதன் பிரதிபலிப்பின் காரணமாக ஏற்படும் தவிர்க்க முடியாத பேராபத்துக்களுக்கு இலக்காகிக் குறறவாளியின் மூன்ருவது படியில் நிற்கிறேம். அந்த நிலை வருகின்றபோது நாம நினைபபது என்ன ?

கடந்த செயலகளை, அதனுல் அடைந்த அல்லல்களை எண்ணி, எண்ணி, இதயம் நொந்து, அப் பாரத்தை இறக்கி வைக்க ஓர் இடம தேடுகிறேம். அத்தகைய செய்கையின எதிரொலியால் ஏறபட்ட இன்னல்களையும் இழிநிலையையும் எண்ணற்ற ஏக்கத்தையும், பெறற பாவமூட்டையை இறக்க வழியிலலாமல் தத்தளித்துக் கொண்டிருக்கிறேம. அந்த நேரத்தில நமமுடைய இதயபாரத்தை—பாவமூட்டையைத் தாங்கும சுமைதாஙகியாகச் சிலுவை நமக்குக் காட்சி அளிக்கிறது.

ஆம், பாவிகளுக்கும சிலுவையின காட்சியால மனனிபபு உண்டு. கள்ளருக்கும் சிலுவையின தோறறததால கருணை காட்டபபடுவது உண்டு கடுங்கோபக்காரர்களுக்கும் சிலுவையின நிழலில் சுகமுண்டு. காசாசை கொண்டவர்களுக்கும் சிலுவையின சார்பினுல நிமமதியுண்டு. காமக் களியாட்டக் காரர்களுக்கும சிலுவையின சுடரால சுகம்பெறும மகிமையுண்டு. எனபதைத நாம் எண்ணுகினறபோது அண்ணலே, ஏசுவே, அனபின சிகரமே, ஆனம பரிசுத்தனே ஆதி பரஞ் சுடரே, நீ அலலற்பட்டு, வருந்தியதறகுக் காரணமாயிருந்த சிலுவையின பெருமையே பெருமை அப்பா!'' என்று போறறி போறறி நம உளளங்கள ஆனந்தக் கடலில நீந்தித் திளைக்கினறது அலலவா!

அதோ பாருங்கள்! எங்கே பார்க்கிறீர்கள்? உங்களைத்தான் நண்பரே! எங்கே பார்க்கிறீர்கள்!

"குலத்திடையுங் கொடியேன் குறிகளிலுங் கொடியேன்
அனறிக் குணங்களிலுங் கொடியேன்
மலத்திடையே புகுந்த புழுக்களிலுங் கடையேன
வனமனத்துப் பெரும்பாவி வஞ்சநெஞ்சப் புலேயேன்
நலத்திடையோ அணுவளவும் நண்ணுகிலேன
பொலலா நாய்க்கு
நகை தோன்றுகின்றேன பேய்க்கு மிக இழிந்தேன்
நிலத்திடை நானேன பிறந்தேனின் கருத்தையறியேன்
நிர்க்குணனே நடராஜ நிபுண மணிவிளக்கே."

எனறு ஜோதி வள்ளல் இராமலிங்கனுர் மனங் கசிந்து அழுதாரே; அந்தத் தீய செயலகளுக்கெல்லாம் ஏகப் பிரதிநிதியாகக் காட்சி அளிக்கிருமே! நினைத்துப பார்த்தோமா நாம' நாம் செய்த தீய செயலகளுக்கெலலாம் விடுதலே அளித்து நம்மை நித்தியானந்தப பெருவெளிக்கு அழைத்துச் செல்ல கலவாரி மலேயிலே நிறகும் சிலுவையைப பாருங்கள்.

நலல களளன :

சிலுவை நேசனே ஏற்றிய சிலுவையின் இடபபக்கத்திலும் வலபபக்கததிலுமாக இரு சிலுவைகள் தோனறுகினறன. அவறறிலே இரு கள்வர்கள் தொங்கிக் கொண்டிருக்கிருர்கள். உரோம நாட்டின யூத சர்வாதிகார ஆட்சியின காவலர்கள கிறிஸதுநாதரைப பார்த்துச் சிரிக்கிருர்கள். வாய்க்கு வந்தபடியெல்லாம ஏசிப பேசுகிருர்கள். ஜீவநீரை நமக்குத தநத ஏசுபிரான குடிக்க நீர் இலலாமல நாக்கை உதட்டின இடையே தடவுகிருர். சேவகர்கள் காடியைக் கொண்டுவநது காட்டிச் சொறகளால விவரித்து எழுத முடியாத தீயவார்த்தைகளால் பிதறறுகிருர்கள. இவறறை எலலாம வலபபுறக கள்வன பார்க்கிருன. அவன இதயம சொலலொணு வேதனைபபடுகிறது. ஆம்; நலலவர்கள் வேதனை அடைகினறபோது அதே வேதனையை அடையும் நமககும வேதனை தெரியாது.

காந்தி அடிகள் விடுதலேப போராட்டத்தில சிறையில் அடைக்கப்பட்டு, ஆகாகான் மாளிகையில இருபத்தொருநாள் உண்ணுவிரதம் ஆரம்பித்திருந்தபோது, மறறத் தலேவர்களும் சிறையில வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அந்த

நிலையில் மற்றவர்கள் எல்லாரும் காந்தி அடிகளின் உடல் நிலையின் மேல் அதிகக் கவனத்தையும், அக்கரையும் செலுத்தி வந்தார்களே தவிர, தங்களின் வேதனையை ஒருவரும் அறிந்ததாகத் தெரியவில்லை; அறிந்திருக்கவும் மாட்டார்கள்.

அப்படி இந்தியாவின் இன்பத்திற்காகத் துன்பங்களை ஏற்ற காந்தி அடிகளுக்கே அந்தப் பாசமும் பரிவும் என்றால் உலக இன்பத்திற்காகத் துன்பம் ஏற்று இரத்தம் சிந்திய ஏசுநாதன் எம்பிரானுக்கு எத்தகைய பரிவையும் பாசத்தையும் காட்டியிருப்பார்கள்! அத் தன்மையிலேதான் கர்த்தரின் வேதனை கள்ளனுக்கும் தெரிந்தது. முள்முடி தரித்த சிரசிலிருந்து வழியும் உதிரத்தையும், இடப்பக்கத்தின விலாவிலிருந்து கசிந்து கசிந்து குருதியை ஊறிக்கொண்டிருந்த ஈட்டியின் காயத்தாலும் அதன் வேதனையாலும் எம்பெருமான சோர்வுற்றிருப்பதையுங் கண்ட கள்வனுக்குக் கோபம் வந்துவிட்டது அவன் பேசினான,

"ஏசியது போதும் நிறுத்துங்கள், தவறுசெய்த எனனைத் தண்டித்தீர்கள். கொடுமைப்படுத்தினீர்கள் கொலையும செய்துவிட்டீர்கள். இன்னுங் கொஞ்ச நேரத்தில் நான சாகபபோகிறேன. நான செய்த தீமைகளுக்குத் தகுந்த தண்டனையை ஏற்றுவிட்டேன நிமமதியோடு சாகப்போகிறேன. ஆனால், எனக்காக, என்னைபோன்ற பெரும் பாவிகளுக்காகத் தம இன னுயிரைத் தியாகம செய்யும் இப புண்ணியவானை— ஏசுநாதனை ஏன துன்புறுத்துகிறீர்கள்"

எனறு கோபத்தோடு கேட்டுவிட்டு.

கிறிஸ்துவைப பார்த்து,

"ஐயனே! நான் பாவியிலும் பெரும்பாவி, கொடியவன், கொலைஞன், சூத்திலோலன, அற்பன், அகங்காரி, ஆணவக்காரன, துஷ்டன, துரோகி, வனனெஞ்சன. ஆகையால நான செய்த பாவஙகளை மன்னித்து மோட்ச சாமராஜயத்தின ஒரு மூலையில் எனக்கும் இடந்தந்தருளவேண்டும. தந்தையே".

என்று மன முருகிக் கேட்டான்.

இரக்கமே உருவான கிறிஸ்துபிரான்,

"நல்ல கள்ளனே. நிச்சயமாக மோட்ச சாம்ராஜ்யத்தில் என்னுடன் வந்திருப்பாய். உன் பாவங்கள் மன்னிக்கப்படும் பரிசுத்த பரமண்டலத்தின் பளிங்கு மாளிகையில், அந்த உன்னதப் பட்டணத்தின் அரண்மனையில் நீ இருப்பாய்"

என்று நல்ல கள்ளனுக்கு ஆசீர்வாதம் செய்தார் அண்ணல் இயேசு அந்த மெய்சிலிர்க்கும சமபவததை

"திட்டியே நகைததுச் சேவகர் காடி
கொண்டு வந்தருகினிற சேர்த்து,
தீமொழி பிதற்ற இடப் பாரிசத்தின
சிலுவையின கள்ளனுஞ் சினக்கத்

தட்டியே மறறேன அவன்றனைக் கடிந்து
தங்க இவ்வாக்கினை குள்ளாயச்
சார்ந்ததும அச்சயனுக் கஞ்சிடா யோநாஞ்
சரிவர செய்ததற் கீடாய்ப்

பட்டிட ஞாயம் இவரவ குணமோ
பண்ணினை எனறு பார்ததுனையுன்
பரம ராச்சியத்தில வந்தபோ தென்னைப
பரிந்தருள் ஐயனே என்றன.

மட்டிலாத் திடமாய் என்னுட னினறே
வானில வந்திருபபை யெனறனபாய்
வலது பாரிசத்தின் கள்ளனுக் குரைத்த
மாசிலா யேசு நாயகனே.

(ஜெபமாலை)

என்று சிலுவையின் மகிமையைச் சித்திரித்துக் காட்டுகிறார் வேதநாயக சாஸ்திரியார்.

ஞானமார்க்கம :

மதங்கள் என்று நாம் நினைக்கின்றபோது நம் நாட்டில பெரும்பாலோர்க்கு முதலில் இந்து மதமும் அடுத்துக் கிறிஸ்துவ மதமும் மறறும் இஸ்லாமிய புத்த மதங்களும் பிறவும் தான் நம் மனத்துள் வரிசைப்பட நிற்கின்றன. புத்த மதத்தின்

கொள்கைகள், கோட்பாடுகள், ஆண்டவனை வழிபடும் முறை அவ்வளவும் எப்படி யெப்படியோ இருந்துவந்தாலும், அந்த மதம், ஏதோ உலகில் பரவி இருக்கிறது என்ற நிலையைத்தான் அது அடைந்துள்ளது. ஏன்? அச் சமயத்தின் கோட்பாடுகளை நடைமுறையிற் கைக்கொண்டு போற்றுவோர் ஒரு சிலராக இருப்பதனால்தான். அச் சமயத்தாரின் வளர்ச்சி, வரலாறு எல்லாமும் எண்ணெயற்ற எரிவிளக்கென ஒளி குன்றி வருகிறது. காரணம் பலப் பல. அதில் முக்கியமானவை சில அவற்றுள்ளும் ஒன்று.

ஒரு கொள்கையை அல்லது கோட்பாட்டை நாம் பரப்புவதற்கு முன்னால் மூன்று முக்கிய காரியங்களில நமக்குத் தேவைப்பட்ட பலன் கிடைக்குமா என்பதைத் தீரச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதாவது.

o சிறந்த கொள்கை!

o தகுதியான சினனம்!

o நிறைவேறறுவதற்குரிய சாதனம் அல்லது அமைப்பு!

இவை எப்படி இன்று நடைமுறையில் நமக்குத் தேவைப் படுகின்றனவோ அப்படியே முன காலத்திலும் தேவைப் பட்டிருக்க வேண்டும். ஆனால் அதிலும பல மாறறங்கள் உண்டு

எத்தகைய கொள்கைகள் சினனங்கள் அமைபபுகள் இருந்தாலும், அந்தக் கொள்கைகள் மக்கள் உளப்பாங்கிற்குப் பிடித்தமாக இருத்தலும் அவசியம். அமைப்புகளும் மக்களின மனமறிந்து செயல்படுவதற்குரிய போக்குடையனவாய் இருத்தலும் மிகமிக முக்கியமாகும். ஆகவே, மேறகூறிய மூன்றும் மதத்தை உருவாக்கும் மதக் குருக்களுக்கு மிகவும இன்றியமையாத சாதனங்களாய் அமைகின்றன.

சூழ் நிலைகளை அவர்களே உண்டாக்கிக் கொள்ளா விட்டாலும், அந்தந்த மதக் குருவின் தியாகச் செய்கைகளினால் ஏறபட்ட வரலாறு அவர்களுடைய சீடர்கள் மேற் கொள்ளும் அன்புப் பிரச்சாரம் நிலைப்பதற்குப் பொருந்திய

சின்னம் ஆகியவை மூன்றும் நிலைத்து நிற்கும் தன்மையைப் பெறுகின்றன.

அப்படிப் பார்க்கின்ற போது, புத்தமதத்திற்கு குரு இருந்தார், சீடர்கள் இருந்தார்கள். இன்று செய்யாமை இருந்தது. ஆனால் சரியான சின்னம் இல்லை அப்படி ஒரு சின்னத்தை ஏற்படுத்தும் வாய்ப்பும், வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையும் இல்லாமல் போய் விட்டது என்று தான் சொல்ல வேண்டும்.

புத்தர் இயேசு கிறிஸ்துவிற்கு முன்னால் தோன்றியவர். உண்மையாகச் சொல்வதானால், மகான்களின் வரிசையில் பார்க்கும்போது புத்தரின் அடுத்த வாரிசாக இயேசுநாதர் தோன்றினர் என்றும் சொல்லலாம். ஆனால் முன்தோன்றிய புத்தர் பெருமானால் ஒரு சின்னத்தை ஏற்படுத்த முடியவில்லை. அதைத் தியாகத்தின் மூலமாகவும்பெற முடியவில்லை காரணம் அவரது இறுதி அத்தகையது.

ஆசையே துன்பங்களுக்கெல்லாம் காரணம், எந்த உயிரையும் துன்புறுத்தக் கூடாது, முதலிய பல நல்ல கொள்கைகளை வகுத்தளித்த புத்தர் பெருமான, ஒருவன் "ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் காட்டு" என்ற ஒரு சொல்லைத் தன வாய் மூலம் அளித்திலர். ஆயினும் இயேசுவையும் அதனைச் சொல்ல வைத்தார். இவ்வாறு ஒரு சிலரேனும் சொல்லும் அளவுக்குச் சரியான வழியைக் காட்டவில்லை என்று ஒப்புக் கொள்ள வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கி விட்டது என்றும் கூறக்கூடும்.

புத்தர்பிரானைப் புலி அடித்துக் கொன்று விட்டதாக நமக்கு விளக்கங்கள் கூறுகின்றன. தன்னுடையப் பசியைப் போக்கிக் கொள்வதற்காகத் தன் குட்டியையே உண்ண முயலும்போது அக்குட்டியைக் காப்பாற்ற முயன்ற புத்தரைப் புலி கொன்று விட்டதாகச் சொல்லுகிறார்கள். மேலும் அவருடைய முழு உடல் இல்லாத காரணத்தால், கைவிரல் நகங்களையும் ரோமங்களையுமே வைத்து அடக்கம் செய்ததாகவும் சொல்லுகிறார்கள். அக்கூற்று உண்மையாயின் புத்த மதத்தின் சின்னம் புலியாகத்தான் இருக்க வேண்டும். அப்படி

இருப்பினும் புலியைத் தெய்வச் சின்னமாக வணங்குவதென்பது இயலாத காரியம். அப்படியே இந்துமதத் தெய்வங்களின் மாடு, எலி, மயில் சக்கரம் முதலிய சின்னங்கள் இருப்பினும் அவைகளை வழிபட வேண்டிய வழிகளை அறுதியிட்டுக் கூற வில்லை, என்பதை நடைமுறை வாழ்வில் நாம் காண்கிறோம். அவை இலைமறை காயென விளங்கிய போதிலும் அந்த உரு வங்கள் அகில இந்தியாவிலும் அதற்கு மேலும் அகண்ட உலகிலும் பரவுவதற்கு வேண்டிய சந்தர்ப்பத்தையும் தேடிக் கொள்ளவில்லை.

இந் நிலை வளராததற்குக் காரணம், பேச்சின் வன்மையாலும் ஒழுக்க நெறிகளாலும், பிறவற்றாலும் மற்ற மதங்கள் பர வினவே யன்றி, சமயம் பரப்பப் படுவதற்கு உரிய தொரு சிறந்த மதவழி பாட்டுச் சின்னங்கள் இல்லாமல் போயின. அத்தன்மை போல எம்மதத்திற்கும் இல்லாத ஓர் தனிச் சிறப்பான சின்னம் சிலுவையேயாகும்.

நிலையான காட்சி

காட்சிக்கு வைக்கப்படும் பொருள்களெல்லாம் மக்களின் கண்களுக்குப் புலப்படுவதில்லை. அப்படிப் பார்க்க நேர்ந்தாலும் இதயத்தில் அவற்றுள் சில படிவதில்லை. இதயத்தில் தங்கிய எல்லாமே நினைவில் நிலைத்து இருப்பதில்லை. நிற்பனவாயும் ஏதோ ஒன்று அல்லது இரண்டுமட்டும் என்றும் நினைவை விட்டு அகலாமல் நிலைத்து நிற்பதுண்டு. அவை போல வன்றி என்றும் மக்களின் இதயக் கமலமெனனும் ஒரு சிறந்த இடத்தில் வைத்துப் போற்றத் தக்க ஒரே சின்னமாய் விளங்கு வது சிலுவையே யாகும்.

காந்தி அடிகள் சிலுவைக் காட்சியை நமக்கு நினைவுப் படுத்துகின்றபோது.

"என் செயல்கள் அனைத்தும் வழி நடத்தும் அகிம்சைக் கொள்கையின் பாலுள்ள என் அசையா நம்பிக்கை உருவா வதற்குச் சிலுவையிலறை யுண்ட கிறிஸ்து ஒருவரே எனக்கு முன் மாதிரியாக விளங்கிறார்!"

என்று அழுத்தந் திருத்தமாக கிறிஸ்து ஒருவரே எனக்கு முன் மாதிரி என்கிறார்.

காலமெல்லாம் கஷ்டப்பட்ட பாவி. உலகத்தில் எத்தனை இன்பங்கள் உள்ளனவோ அவ்வளவும் அனுபவித்து, அனுபவித்து அவற்றால் ஏற்பட்ட தீராப் பெரும்பாரச் சுமையைத் தாங்கி நிற்கும் மனிதன், அதோ போய்க்கொண்டிருக்கிறான். பார்த்தீர்களா! அவன் எண்ணங்கள் பலப்பல; நோக்கங்கள் ஆயிரமாயிரம் ஆசைகள் இலட்சோபலட்சம்; கொள்கைகள் கோடானுகோடி. அந்தப் பெரும் பாரத்தை—பாவமூட்டையைச் சுமந்துகொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்துபோகிறான்; அவன முகத்திலே ஏறபட்டிருக்கும் சுருக்கங்கள், இந்த உலகத்தில் எத்தனை ஆண்டுகள் அவன் வாழ்ந்தான என்பதைத் தெளியைக் காட்டுகின்றன. சுருக்கங்களின் இடையே தேங்கித் தேங்கி உதிரும் வியர்வையின சொட்டுகள, அவன் செய்த ஆர்பாட்டங்கள், ஆசை விநோதங்கள், அறப விளையாட்டுகளின முடிவுகளாக காட்டிக்கொண்டிருக்கின்றன. அவன நடந்து கொண்டிருக்கிறான்; நடந்துகொண்டே யிருக்கிறான. திடீரென்று அவன் நடையில் வேகம் குறைகிறது. அவன் காதுகளிலே ஒரு பேரொலி கேட்கிறது. அசைவற்று நின்று அவ்வொளியைக் கவனிக்கிறான். அவனால நிற்க முடியவில்லை. தன முழுப் பலத்தையும் வரவழைத்துக்கொண்டு நிற்கிறான. அபபோதும தளளாடுகிறான. ஆப; ஒருநாள் இருநாள் பாவ மூட்டையா? ஒரு வாரம், ஒருமாதம், ஒரு வருடம் செய்த அக்ரம மூட்டையா! இல்லையே அறுபது ஆண்டுகளாக அவன சேர்த்து வைத்த பயங்கரப் பாவமூட்டையின் சுமையல்லவா. எபபடியோ நின்று விட்டான். காதுகளை ஒலி வந்த திசையில் திருபபுகிறான.

"கர்த்தருக்குப் பயப்படுதல் அவருக்கு உகந்த வாசனையாயிருக்கும். அவன் தமது கண் கண்டபடி நியாயந் தீர்க்காமலும தமது காது கேட்டபடி தீர்ப்புச் செய்யாமலும், நீதியினபடி ஏழைகளை நியாயம் விசாரித்து யதார்த்தத்தினபடி பூமியிலுள்ள சிறுமையானவர்களுக்குத் தீர்ப்புச் செய்து பூமியைத் தமது வாக்கின் கோலால அடித்துத் தமது வாயின் சுவாசத்தால துர்மார்க்கரைச் சங்கரிபபார்."

ஏசாயா, 11:3-4

அவன் காதுகளில் வெண்கலமணி ஓசையைப்போல் அவ்வொலி கேட்கிறது. அந்தப் பாவிப் பரதேசியின் கண்களில் நீர் ஆருகப் பெருகி அவன் சட்டையை நனைக்கிறது. அவன் உடல் தீயினுல் சுட்டெரிப்பது போன்ற ஒரு தவிப்பு.

மீண்டும் நடக்கிருன்.

அவன் எண்ணக் குதிரை கடந்த காலத்தில் மேய்ந்த சிங்காரப் பூங்காவிறகுத் தாவிச் செல்லுகிறது.
சொாகக வாழவு?

தாவிக் குதித்தோடும் மானைப்போல ஓடிப் பிறர்மனை நாடி பெண்கொடுத்த சுகமே கண்கண்ட சுகமென்று கடையனுய் வாழ்ந்தேன் 'அம்மா' பசிபசி என்று கா, கா, வெனக் கூவும் காக்கைக்கும் உண்டு கொண்டிருந்த கையால் உதறி உதவாமல் நாக்கால் நக்கிச் சாப்பிட்டுப் பசித்த பறவைக்கு ஒரு சோறு கூட இடாத கொடிய பாவியாய் வாழ்ந்தேன. போது மென்ற மனமில்லாமல ஓடி ஓடி உழைத்து வீணுக காலத்தைக் கழித்தேன் ஆதலால ஐயனே! அப்பனே! ஆதிப் பரம்பொருளே! நான இறந்தும் இறவாத பெருவாழ்வை அளிக்க வேண்டுகிறேன்'' என்று கண்ணீர்விட்டுக் கலங்கிய அந்தக் காட்சியை நமக்கு இன்றும் காட்சிப படுத்தும்போது,

''தாவு மானெனக் குதித்துக் கொண்டோடித்
தையலார் மூலத்தடம்படுங் கடையேன்
கூவு காக்கைக்குச் சோற்றிலோர் பொருக்குங்
கொடுக்க நேர்ந்திடாக் கொடியரில்
ஓவுறாழ லீயெனப் பலகால கொடியேன
ஓடியோடி தேடுறந் தொழிலேன
சாவுறாகைக் கென்செயக் கடவேன்
தந்தையே யெனைத் தாங்கிக் கொண்டருளே!''

என இராமலிங்க அடிகள் கூறுகிருர். அந்த நினைவே பரதேசிப் பாவியின் எண்ணத்திலாடி அவன் சிந்தனைக் குதிரையை மீண்டும் தாவி அவன் இடத்தே வந்தது அவன் உடலெல்லாம் வியர்த்து நீண்ட பெருமூச்சு ஒன்றைவிட்டு மீண்டும் வழி நடந்தான்.

அவன் கால்கள் தடுமாறின, கண்கள் இருண்டன. 'எங்கே போகிறோம்' என்ற நினைவே இல்லாமல் தட்டுத் தடுமாறி மெல்ல நகர்ந்தான். விலையுயர்ந்த பாதரட்சைகள் அணிந்து தழறறி எறிந்த கால்கள், இனறு கலலும முள்ளும நிறைந்த கனல் வீசும் பாதையில கடின நடை போடுகின்றன.

மீண்டும் ஒரு பெருமூசசு!

கடைசி மூச்சா?

ஒருவேளை அது மரண மூச்சா?

இலலை இலலை: பாவம நிவர்த்தியான மூசசு. அதோ சிலுவை தெரிகிறது. ஆம் சிலுவையேதான. நமது ஆண்டவர் படக் கூடாத பாடுபட்டு மரித்த அதே சிலுவையதான். அந்த ஆனந்த காட்சியைக் கண்டான். மறு கணம்? அவன சுமந்துவந்த பாவ மூட்டை அறுந்து விழுந்தது போனற உணர்ச்சி; பெருஞ்சுமை அவனை விட்டு நீங்கியது போன்ற பிரமை; அவனுக்கு ஒரே ஆனந்தம்; தாங்க முடியாத பேரின்பம்; பொங்கும் இன்பம் அவனைத திகைக்க வைத்தது.

அவன் பாடினான.

"பாவபாரம் சுமந்தேன்
இதுவரையும் வந்தேன.
இங்கே வரு மட்டுமே
பாரம் நீங்க வில்லையே
இங்கே வந்த நிமிஷம்
என பாவபாரம் நாசம்
இது என்ன இடமோ!
பாரம் நீங்கிப் போயிறறே
இங் கென்பாரம் நீங்கவும்
இங் கென்கட்டு விடவும
என் வாழ்வு துவங்கிற்றே
இது என்ன இடமோ!
சிலுவையே நீ வாழ்க!
சமாதியே நீ வாழ்க!
சிலுவையிலே மாண்ட
ஏசுவே வாழ்க வாழ்க.

(மோட்ச பிரயாணம்

போதித்தார். போதுமென்ற மனம் படைத்துப் பொல்லாத செய்கைகளை போக்கிவிட போதம் புரிந்தார். அதன் பலன் ஒருசில துரோகிகள் அவரை மக்காவிலிருந்து மதினாவுக்கு அடித்து விரட்டி, இரத்தம் கசியக் கசிய ஈவு இரக்கமின்றி வாட்டி ஓட்டினார்கள். அதுவே அவர் மரணத்தை அணைத்துக் கொண்டது. அப்படிப்பட்ட பெருமகனாரின் வழிவந்த மதத்திற்குச் சின்னம் இல்லாமல் போய்விட்டது.

உலக உத்தமர்களின் வரிசையிலே வைத்துப் போற்றிப் புகழத்தக்க காந்தி அடிகள் கூட மக்களுக்காகவும், அவர்களின் நல்வாழ்விற்காகவும் மதத்திற்காகவும் அதற்கு மேலும் சிறப்பாக இந்திய நாட்டின் விடுதலைக்காகவும் தம் உயிரையே அர்ப்பணித்துக் கொண்டார். அவர் உயிர் பிரிவதற்குக் காரணமாயிருந்தது துப்பாக்கி. அதற்காக அவர் கொள்கையைப் பின்பற்றுவதாகச் சொல்லுகிறவர்கள், துப்பாக்கியைத் தங்களின் மதச் சின்னமாக வைத்துக் கொண்டார்களா? வைத்துக் கொள்ள முடிகிறதா? இல்லையே. ஆனால், சிலுவை மட்டும் கிறிஸ்துவ மதச் சின்னமாகக் காட்சி அளிக்கிறது.

அகப்பேய

இல்லற வாழ்வில் நாம் ஏற்றுக் கொள்ளுகின்ற அத்தனை நடைமுறைக் காரியங்களும் நிறைவேறி விடுவதில்லை. பல அரைகுறையாக நடந்து தோல்வியிலே முடிந்துவிடும். இவை எல்லாவற்றையும் முடித்து வெற்றி நடை போடுவதாக நினைத்து நிம்மதி அடைகிறோம். என்னே பைத்தியக்காரத்தனம் இது!

பைத்தியத் தன்மை எப்படி உண்டாகிறது. ஆம்; அதற்கென்று ஏதோ ஒரு சக்தி பிறந்து அதனால் உந்தப்படும் காரியங்களே சிலவேளைகளில் நன்மைகளாகவும், பல வேளைகளில் தீமைகளாகவும் முடிந்துவிடுகின்றன. தீமைகளாக முடியும் செயல்களை நாம் செய்வதற்கு முன்னால் சிந்திக்கிறோம். அப்போது அந்தச் செய்கை "தவறானது;" அதைச் செய்யாதே" என்று ஏதோ ஒரு சக்தி நமக்கு அறிவுறுத்துகிறது. அதைப் பலர் ஆண்டவன் என்றும் சிலர் மனச்சாட்சி என்றும் சொல்லுகிறார்கள்.

"உன் சுயபுத்தியின் மேல் சாயாமல் உன் முழு இருதயத்தோடும் கர்த்தரில் நம்பிக்கையாயிருந்து, உன் வழிகளை எல்லாம் அவரை நினைத்துக் கொள். அப்போது அவர் உன் பாவங்களைச் செவ்வைப்படுத்துவார், நீ உனனை ஞானி என்று எண்ணாதே கர்த்தருக்குப் பயந்து தீமையை விட்டு விலகு"

(நீதி 3 : 5—7)

என்ற வேத வாக்கியத்திலிருந்து நமக்குப் புரிவதென்ன. அறிவு புகட்டும் கட்டளை; நாம் தீய காரியங்களைச் செய்வதற்கு, முன்பே நமக்குக் கொடுக்கப்படுகிறது. ஆனால் நாம் அதை அலட்சியப்படுத்தி வேறுபாதையில் நம்மை நாமே செலுத்திவிடுகிறோம். அந்தப் பாதைக்கு அதிபதி யார்? அதைத்தான சாத்தான் பேய், பிசாசு, என்று பெரியவர்கள் அறிவுறுத்துகிறார்கள்.

நாம தீய பாதையில் அகப்பட்டு அல்லற்படுகின்ற போது எவ்வளவு மன வேதனை அடைகிறோம தீய செய்கையிலிருந்து விடுதலை அடைய என்னென்ன முயற்சிகள் எடுத்துத் தோல்வி அடைகிறோம தோல்வியைத் தாங்கும் சக்தியையும், வேதனையை விலக்கி விவேகத்தை அடைய நமக்கு மட்டுமல்லாமல் உலகத்திற்கே வழிகாட்டி ஆறுதல் அளிக்கும் ஒரே சின்னம் சிலுவையே. சிலுவையின் சிறப்பினால பொல்லாத அகப்பேயும, சினப்பேயும், அகங்கார ஆணவப்பேயும் இருக்கின்ற இடம தெரியாமல் ஓடி மறைந்துவிட்ட காட்சிகளை நாம் கண்டும கேட்டும் இருக்கிறோம.

அகப்பேயின அரவணைப்பிலே அகப்பட்டு அவதிப்பட்ட பாவி ஒருவன் மன நிலையைச் சங்கை திரு. ஆ. ஜோ. அடைக்கல சுவாமி அவர்கள் விளக்குகையில

"சிற்றினப மாய்கையிலே சிக்குண்டேன
சிறுமதியேன் சீரழிந்தும
சற்றுமதைக் கருதாது சகதியிலே
வீழ்ந்தமிழ்ந்தேன்; உலகாளும்
கொற்றவனே! உனையன்றிக் குறைதீர்ப்பார்
குவலயத்தில் யாருமிலர்;

அவன் கண்கள் கண்ணீர் உகுத்தது. அது என்ன கண்ணீராக இருக்கும்! இரு கரங்களையும் கூப்பினான். ஆண்டவரே! பாவிகளை இரட்சிக்க வந்த பரம பிதாவே! பாவி என் பாவச் சுமையைப் போக்கிய ஞானபோதனே! பொல்லாங்கு அளித்தோர்க்கும் வாழ்வாங்கு வாழ்வளித்த வள்ளலே! நீர் வாழ்க! உம திருநாமம் வாழ்க! எனக் கூவி, பரிசுத்த சிலுவையின் நிழலிலேயே தஞ்சம் புகுந்துவிட்ட அக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்ணெதிரே காட்சிப் படுத்தும் கிருஷ்ணபிள்ளை அவர்கள்.

"இத்தகு சிலுவையை யெய்து முன்னர் யான்
சித்தச சஞ்சலச் சுமைசுமந்து தேம்பி
அத்தனைத் துயரமு மகன்றேன் தேயமீ
தெத்தனை பெரிய பாக்கியமென றேத்தினான்."

என்ற கவிதையின் மூலம் நமக்கு வடித்துக் காட்டுகிறார். அச் சிலுவையின் பெருமை இன்று அகில உலகிலும் பரந்து கிடக்கின்றதென்றால் அது உலகப் பொதுச் சின்னமல்லவா! பொதுச் சொத்தல்லவா!

குடும்பத்தின் குறும்பன்

இஸ்லாமிய மதம் இந்தியாவில் பல இடங்களிலும் குறிப்பாக, ஈரான், ஈராக், துருக்கி, பாக்கிஸ்தான் எகிப்து முதலிய நாடுகளிலும் பரவியிருக்கின்றது. என்றாலும் அதற்கும் மதத்தைக் குறிக்க எந்தச் சின்னமும் இல்லை. ஆனால் பிறைக் குறி, சமாதி போன்ற பிற சின்னங்களைச் சில இஸ்லாமியர் கையாள்வாரே யாயினும் அவை மசூதிகளில் வைக்கப்படுவதில்லை. ஏதோ ஊர்வலம் சென்று உற்சாகப்படுத்திக் கூட்டத்தைக் கூட்டும் சின்னமாகக் குறிப்பிட்ட நாட்களில் மட்டும் அவை உபயோகப் படுத்தப்படுகின்றன. பிறைக் குறி முகம்மது நபிகள் வானுலகம் ஏகும்போது இருங்கள் என்ற குறிக்கோளோடு காட்டிய அடையாளச் சின்னமாகும்.

இஸ்லாமிய மதத்திற்கும் கிறிஸ்துவ மதத்திற்கும் மத அளவில் நெருங்கிய உறவு இருக்கிறது. என்றாலும், அவர்கள் நடை உடைபாவனை வழிபடும் வகைகள் எல்லாம் வெவ் வேறு

நபிகள் நாயகம் மக்களின் ஆன்ம விடுதலைக்காகவே பாடு பட்டார். குடும்பத்தின் பாசத்தை வளர்த்து அதன் மூலமாக ஆன்ம சிந்தனையைப் பெருக்கி, அதன் வாயிலாக ஆண்டவனை அடைவதற்கு வழிவகுத்த தனிச் சிறப்பு நபிகள் நாயகத்திற்கு உண்டு.

"பந்துக்களின் உறவை முறித்துவிடுகின்றவன்
சுவர்க்கத்தில் நுழையமாட்டான்"

என்பது நபிகள் நாயகத்தின் பொன்மொழி ஆம்; பந்துக்களை பகைத்துக் குடும்பத்தை வெறுத்துச் சந்நியாசியாகப் போகிற வன், பக்கிரியாகப் போகிறவன், கட்டாயம் மோட்சத்தை அடையமாட்டான் என்பது நபிகளின் வாக்கு அதனால்தான் நபிகள் நாயகம் விதவைத் திருமணத்தை ஆதரித்துத் தானும் "கடிஜா" என்னும் பெயருடைய விதவையைத் திருமணம் செய்து கொண்டார். அந்த வழிகாட்டியின் பாதையைப் பின் பற்றும் இஸ்லாமியர், இன்றளவும் தங்களின் முழு முதற்கொள் கையாகக் கடைப்பிடித்துச் செயல்படுத்தி வருகின்றனர்.

காந்தி அடிகள் கூடச் சொன்னார் "ஒரு வாலிபன் தனக் குத் திருமணமாவதற்கு முன், தன் வயதிற்குச் சரியான ஓர் இளம் விதவை இருப்பாளேயானால் முதலில் அவளைத் திரு மணம் செய்துகொள்ள வேண்டும் அவ்வாறு ஒவ்வொரு வாலி பனும் பிரதிக்கினை செய்துகொள்ள வேண்டும்." என்று சொல்லி விட்டுத்தான் மறைந்தார். எத்தனை பேர் அவர் வழியைப் பின்பற்றினார்கள். ஏன்! சாதிவிட்டு வேறு சாதியில் கூட மாறி மணம் செய்து கொள்ளவில்லையே. எல்லாம் பணம்படுத்தும் பாடன்றோ!

நபிகள் நாயகம் அன்று வாழ்க்கையில் அல்லற்பட்ட அருந்தலைவர். ஒரு முதலாளியிடம் அடிமை வேலை செய்து வந்த சாதாரண தொழிலாளி அதனால்தான் மனிதர்களின் அன்றாட வாழ்வில் ஏற்படும் இன்பதுன்பங்களை அவரால் அறிய முடிந்தது. அந்த இன்னல்களைப் போக்க அரும்பாடு பட்டார். அதற்கு ஆன்ம ஞானம் வேண்டுமென்று மக் களுக்கு எடுத்துச் சொன்னார். மற்றவர்களுக்குத் துன்பம் விளைவிக்காத தூய வாழ்வை நடத்துமாறு மக்களுக்குப்

பற்றினேனுன் பாத மதைப் பரிவுடனே
பாவிஎனைப் புரந்தருள்வாய்!"

(இன்பசாகரம்)

எனப் பரமபிதாவின் பாதங்களை அடைக்கலம் அடைகிறார் அடைக்கலம் சுவாமியார்.

அவ்வளவு பொல்லாததா அகப்பேய்! ஆம்; பொல்லாதது தான். யாராலும் அவரவர்களால் உண்டாக்கிக் கொண்டது மன்று அது. அந்தப் பேய் கற்பனையுமன்று. கிறிஸ்து நாதரையே ஏமாற்ற நினைத்த பேயல்லவா! ஆகையால்தான்.

"உண்டாக்கிக் கொண்டதல்ல அகப்பேய்
உள்ளது சொன்னேனே.
கண்டார் நகையாரோ-அகப்பேய்
கற்பனை யற்றதடி!!

என ஒரு சித்தரும் பாடினார் அகப்பேய் கற்பனையல்ல அது நம்மைப் போல் ஒரு ஜீவன்தான். ஆனால் நமக்குச் சரீரம் உண்டு; அதற்குக் கிடையாது. அதனால் தான் நேரிலே கண்டு அதனிடம் போராட முடியவில்லை என்றாலும் நமது மனத்திறத்தாலும், அறப்போரின் தாக்குதலினாலும் கூட அந்தப் பேயின் ஆணவத்தை அடக்க முடியவில்லை. அதற்கு ஈடாக அகப்பேயின் பாவவலையிலே வீழ்ந்து விடுகிறோம். அப்படிப்பட்ட நிலையிலும் நம்மைப் பாதுகாப்பது சிலுவையே!

பேய்க்குறும்பு

இயேசுவே நீர் சிலுவையில் மரிப்பதற்கு முன்னால் உலக மும் எனது தீராத்துயரங்களும் அகப்பேயின் பிடியிலே அகப் பட்டு அவதிப்பட்டன அண்ணலே நீர் சிலுவையில் அறை யுண்ட பிறகு அகப்பேயின் ஆர்ப்பாட்டங்களும் அனாசு விந்தைகளும் பகலவனைக் கண்ட பனியைப் போல் மறைந்து விட்டன. ஆம்; சுவாமி உங்கள் பொன்னான மேனியிலிருந்து சிந்திய இரத்தத்துளிகள் என் இதயத்திலே பெரும் வெள்ள மெனப் பாய்ந்து என் பாவங்களை எல்லாம் கழுவிப் பரிசுத்த பர மண்டலத்திலே என் ஆன்மா ஆனந்தக் கூத்தாடிப் பரமபிதா வின் பாதங்களிலே போய் நிற்கிறதே! இனி அகப்பேய்

என்ன அகிலத்தையே ஆட்டிப்படைக்கும் அரசனே என்னை அடக்க வந்தாலும், அது ஆகாத காரியம், அப்படிப்பட்ட வைர நெஞ்சம் படைத்துவிட்ட என் அகத்தில் அகப்பேயின் குறும்புத்தனம் என்ன செய்யும். என் இதயத்திலே குடிபுக அதற்குச் சக்தியுண்டா? முடியாது ஐயனே! முடியாது. மூலப் பொருளே! முழு முதற கடவுளே! மோகன வடிவாய் சிலுவை மரத்திலே காட்சி அளித்த தேவனே! நீர் வாழ்க. நீர்வாழ்க! என்றெல்லாம் தென்னகக் காந்தி திரு. வி க. அவர்கள் நமக்கு நினைவு படுத்துகையில்,

"உன்னருளால் உன்னுடனே உறைந்த வரும்பேயினை,
உறுத்தலினால் உணமறந்த உண்மையினைத் தேர்ந்தேன்
என் மனத்தில எளிமை குறித் தேக்க முற்றேன் ஐயா!
ஏசு எனறும் கிறிஸ்து என்றும் எண்ணி யெண்ணிக்
கிடந்தேன்
மன்னவனே! சிலுவையிலே மரித்த பின்னர் பேயின
மயக்கமில்லை சீடருக்கு மயங்காமை தெளிந்தேன
பொன்னுடலம் பொழிகுறுதிப பெருக்கினிலே ஆழ்ந்தேன்
பொல்லாத பேய்க்குறும்புக் கிடமும் உண்டோ!
(கிறிஸ்துவின் அருள்வேட்டல்)

என்றெல்லாம் உள்ளத்திலெழுந்த உணர்ச்சி வசத்தால் சிலுவையை நினைந்து நினைந்து பாடினார் அவர்

மாயபபிசாசு

அகப்பேயின போராட்டம் அவ்வளவு பொல்லாததா. திரு வி க மட்டும்தானா சொன்னார்? அவருக்கு முன வாழ்ந்த ஞானியர்கள் பலர் அகப்பேயின் அற்பச் செயல்களிலே அகப் பட்டு அவதியுற்ற சம்பவங்கள் பலப்பல. அதனால அளவற்ற பாவங்களைப் புரிந்து, பாவி என்ற பட்டங்களைப் பெற்றவர்களு முண்டு, அதறகுப பிராயசித்தமாகக் கவிதை வடிவிலே வடித் துத் தந்திருக்கிறார்கள் உலக வாழ்க்கையிலே, குறிப்பாக இல்லற வாழ்க்கையிலே கட்டுண்டு திகைக்கின்ற எந்த மனித னும் பழிபாவங்களை எந்தக் கோணத்திலாவது ஒரு மார்க்கத் தில் செய்யாமல் இல்லை. அப்படிச் செய்தவர்களை அகப்பேய் வாழவிடாது; வாழவிட்டதுமில்லை என்பதை மேதைகள்,

ஞானிகள், மகான்கள் ஆகியோரின் வாழ்க்கைச் சரித்திரங்களைக் கொண்டும், நடந்த சம்பவங்களைப் பார்க்கின்றபோதும் கண்டிருக்கிறோம். பழிபாவங்களைச் செய்து, பிறகு திருந்தியவர்களின பெர்களைத்தான் நாம் அதிகம் படித்திருப்போம். பாவமே செய்யாமல தெய்வ வாழ்வு வாழ்ந்த மகானகள் ஒரு சிலரேயாவர். அந்த அகப்பேயின திருவிளையாடல்களிலே அகப்பட்டு,

''தேகாதி யகிலம்பிர பஞ்சமது பொய்யென்று
தேர்ந்தறி விலாத பாவி
தீபாவி, தீபாவி தீபாவி, தீபாவி
திவ்யகுண மற்ற பாவி
பாகவலை குடி கொண்ட பாவி வமனாகவே
வாதாடு கின்ற பாவி.
மாயபபிசாசு கொண்ட பாவி வீணாக
வாழ்நாள் கழித்த பாவி,
ஆகாத பாவி யாருகாத பாவியா
ருக்கு மாகாத பாவி,
அளவற்ற பாவியடி யேனு முனை நம்பினேன்
ஆண்டணைத் தருளு தற்கே''

என்று ஆணடவன திருப்பதமே ஏற்ற துணையாக எடுத்து இயம்புகிறார் குணங்குடி மஸ்தான அவர்கள. எவ்வளவு தெளிவு பெற்றவர் எனபதைக் கூர்ந்து நோக்குவீர்

தாவிவரும நிழல

''பாவம் இபபடித்தான இருக்கும்; இந்த உருவத்தில்தான் வரும், இந்த நேரத்திலதான நேரும என்று எப்படி நமபுவது'' என்று கேட்பது என காதுகளிலும விழுகிறது. நமக்குமுனனால் இந்தப் புவிவாழ்வின் இனப துனபஙகளை அனுபவித்து அதனால் ஏற்பட்ட நனமை தீமைகளில் பங்குகொண்டு பரிதாப நிலைக்கு ஆளான ஆன்றோர்கள், மிகத் தெளிவாக எழுதி விட்டும் பாடிவிட்டும் மறைந்திருக்கிறார்கள்.

அந்தரங்கத்தில் ஆழ்ந்து கிடந்த பாவங்களெல்லாம் அவைக்கு வந்து, நம் கண்முன்னே காட்சி அளிக்கும் தன்மை

களை நாம் கண்டிருக்கிறோம். ஆன்மாவின் அடித்தளத்திலே அடைத்து வைத்திருந்தாலும் அந்தப் பாவங்களெல்லாம் காலப்போக்கில் வெளிவந்து, காசினியோரின் கவனத்தைக் கவர்ந்த காட்சிகளையும் நாம் கண்டிருக்கிறோம். பெரிய அறிஞர்கள், எழுத்தாளர்கள், மேதைகள் முதலியவர்களெல்லாம் தங்கள் பாவங்களைப் பேச்சின் மூலமாகவும், எழுத்தின் மூலமாகவும் அவனிக்கு அறிமுகப்படுத்தும் ஆச்சரியமான போக்குகளை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஏழை எளியவர்கள் நேரிடையாகவே தங்கள் பாவங்களைப் பகிரங்கமாகப் பகிர்ந்து கொள்ளும் பரிதாபக் கோலத்தை நாம் சந்தித்திருக்கிறோம். பேட்டைக்குப் பேட்டை பஞ்சாயத்துகளும், நாட்டு ஒருமைப் பாட்டு நகரத்துக்கு நகரம் நீதி மன்றங்களும், உலகத்திற்கு ஐக்கிய நாட்டு ஒருமைப் பாட்டு அமைப்பும் இருப்பதற்குக் காரணமென்ன? பாவங்கள் நடக்கின்றன, பழிகள் சுமத்தப் படுகின்றன; பகிரங்க ஆபாசங்கள் நடத்தப்படுகின்றன என்பதற்கு அறிகுறிதானே இவை!

தேசத்திற்கு தேசம் இராணுவம், அந்த இராணுவத்திற்கு வேண்டிய ஆயுதங்கள்; உற்பத்தி செய்ய ஆங்காங்கே ஆயுதத் தொழிற்சாலைகள்; இவையாவும் நமக்கு எதைக் காட்டுகின்றன. பிற நாட்டு மக்களின் உயிருக்கும் உடைமைக்கும் தீங்கிழைக்கத்தானே! அது பாவத்தைச் சார்ந்ததன்றோ! "மக்களின் உயிரையும், உடைமையையும் காப்பாற்றுகிறேன்" என்று சொல்லி போர்க்களத்திலே ஆயிரமாயிரம் உயிர்களைப் பலியாக்க ஏதுவாக நிற்கும் அரசனும் பாவியல்லவா! அரசபீடம் நிலைத்து நிற்கச் சூழ்ச்சிகள் பல செய்து, பதவியை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறானே அது பாவமல்லவா! ஆம்; பாவம் நம்மைப் பிரியாமல் என்றும் நம்முடனே தொடர்ந்து வரும் நிழல்போன்றதல்லவா!

பெண்பாவம்

பாவம் செய்துவிட்டதாக மக்களால் தீர்மானிக்கப்பட்ட ஒரு பெண்ணைக் கொல்லுவதற்குத் தீர்மானித்து விட்டது ஒரு கூட்டம். இன்னுங் கொஞ்ச நேரத்தில் கற்களால் அடிக்கப் பட்டு, உடம்பெல்லாம் இரத்தக் காயத்தோடு உயிர் இழக்கப் போகிறாள். பாவம் பரிதாபத்திற்குரிய அந்தப்பெண் பயந்து நடுங்கி ஓடுகிறாள்.

அங்கே தரையிலே!

அடக்கமே உருவாகக்கொண்டு அமைதியான திருமுகத்தோடு, விரல் நுனியால் தரையிலே எழுதிக்கொண்டு இருக்கிறது ஓர் உருவம். அதன் அருகிலே நிற்கிறாள் அபபேதைப் பெண். கூட்டம் நெருங்கிவிட்டது; கூச்சலும் கிளம்பி விட்டது; அடியுங்கள்; உதையுங்கள்; கற்களால அவள் மண்டையை உடையுங்கள், என்றெல்லாம் ஆர்பாட்டம் செய்து அங்கலாய்க்கிறது அக் கூட்டம்.

பெண்ணின் கண்ணீர் அவள் கனனத்தின் வழியோடி உடலையும் நனைக்கிறது.

நிமிர்ந்து பார்க்கிறது அமர்ந்திருக்கும் அவ்வுருவம. பெண்ணின கோலம் கோமகனின் உள்ளத்தைத் தீண்டியது.

'சுவாமி என்னைக் காப்பாறறுங்கள்! இனிமேல் இப படிப பட்ட கொடுமையான பாவஙகளைச் செய்வதிலலை எனறு கெட்டியான மனத்துடனே பிரதிக்ஞை செயது கொளகிறேன"

கெஞ்சும குரலில தேமபிச் சொனனாள் பெண்!
கண்ணீர் சொட்டும காரிகையைப பார்த்தார்!
கோமகனின் நா அசைந்தது.
பேதையே!

"மேட்டிமையான கண், பொய்நா குறறமறறவர்களுடைய இரத்தம சிந்துங்கை துராலோசனைப பிணைக்கும் இதயம; தீங்கு செய்வதறகு விரைந்தோடுங்கால், அபத்தம் பேசும பொய்ச்சாட்சி; சகோதரர்க்குள்ளே விரோதத்தை உண்டு பண்ணுதல" (நீதி. 6 : 17-19)

ஆகியவைகளை எலலாம் ஒதுக்கித்தள்ள வேண்டும்; இருதயத்தைப் பரிசுத்தமாக வைத்துக்கொளள வேண்டுமெனறு சொன்னேனே!

"என் மகளே உன் தகப்பன கற்பனையைக் காத்துக் கொள். உனதாயின் போதகத்தைத் தள்ளாதே" என்றும் சொன்னேனே கேட்டாயா? என்று கேட்பதுபோல் இருந்தது. மகானின் பார்வை.

எந்த மகனுக்கு அப்படிப்பட்ட ஞானமும் தைரியமும் வரும்? அந்த மகான்! அந்த மகான்! அண்ணல் கிறிஸ்துவைத் தவிர வேறு யாராக இருக்கமுடியும் ?

இயேசு சுவாமி எழுந்து நின்றார் !

மீண்டும் கூச்சலிட்டது கூட்டம்.

கிறிஸ்து ஒருமுறை கூட்டத்தைச் சுற்றிப் பார்த்தார்.

"அன்பர்களே பாவம் செய்த பெண் அவசியம சாகத்தான் வேண்டும. ஒபபுக்கொள்ளுகிறேன். ஆனால் உங்களில் எவன் பாவம செய்யாதவனே அவன் முதலில் இவளைக் கல்லால் அடிக்கட்டும" என்று சொல்லி மறுபடியும் உட்கார்ந்து தரை யில எழுத ஆரம்பித்தார்

ஒரே அமைதி !

நிமிர்ந்து பார்த்தார் ஏசுபிரான் ஒருவர்கூட அங்கில்லை. பெண்மட்டும் நின்றிருந்தாள். கிறிஸ்து அவளை நோக்கி மகளே! இனிமேல் இப்படிபபட்ட தவறான வழியில் போகாதே !

"கள்ளதராசு கர்த்தருக்கு அருவருபபானது; சுமுததிரையான நிறை கலலோ அவருக்குப பிரியம; அகந்தை வநதால இலச்சையும் வரும; தாழ்ந்த சிந்தையுளளவர்களிடததிலே ஞானம் உண்டு; செமமை யானவர்களுடைய உததமம அவர்களை நடத்தும; துரோகிகளின மாறுபாடோ அவர்களைப் பாழாக்கும்; கோபாக்கினை நாளில ஐசுவரியம் உதவாது; நீதியே மரணததிறகுத் தப்புவிக்கும; உததமனுடைய நீதி அவன வழியைச் செமமைபபடுத்தும்; துன்மார்க்கனே தன துன்மார்க்கத்தில் விழுவான்." (நீதி. 11 : 1-5)

"போ மகளே போ, வகையான வழியில் வாழ்வை நடத்து" என்று சொன்னார் கிறிஸ்துநாதர்.

பாவம் உலகத்திறகே நாசம் விளைவிக்கக்கூடிய ஏகசக்தி யாகப் பரவி வந்திருக்கிறது. அப் பாவத்தைப் போக்க வழிதான் என்ன! பாவத்திற்கு ஊதியம் மரணம். மரணத்திற்கு வழி பாவமே என்பதை அறியாதார் யார்? சாவான பாவம் உலகத்

திலிருந்து மறைந்துபோக அல்லது மாண்டுபோகவழியுண்டா? கொடிய பாவத்தை அழிக்கக்கூடிய சக்தி எது? அச்சக்தியிடம் நம் சஞ்சலத்தை சொல்லவேண்டாமா! நெஞ்சத்திலே அனுதாபம் கொள்ளவேண்டாமா! அதற்காக நொந்து அழுது ஆண்டவரிடம் அவரின் பாதங்களில் நமது பாவங்களைக் காணிக்கையாகக் கொடுக்கவேண்டாமா?

கண் செய்த பாவம்

ஐயகோ! பாவத்தினுல் உதித்த நான குழந்தைப பருவ முதல் இன்றுவரை கண்களால் பொருத்தமட்டில நான செய்த பாவங்கள் கொஞ்சமா அரைவயிற்றுக் கஞ்சிக்கு அல்லற படும ஏழையைப பார்த்து மனமிரங்காமல ஆப்பில பழமாக தின்றுகொண்டு ஏழையின் கொடுமையைக் கண்டு ரசித் தேனே!

கால் இல்லாத முண்டமாய்க் கடும் வெய்யிலில் தத்த ளித்துக் கொண்டிருந்த எளியோனைப் பார்த்துப் புன்னகை புரிந்துவிட்டுக் காரில ஏறி உட்கார்ந்து காற்ருய்ப் பறந் தேனே!

உடன் பிறந்த சகோதரனை ஊரார் துன்புறுத்த அதைப பார்த்தும பார்க்காதவன்போல் நடித்து நகர்ந்துவிட்டேனே. இன்னும் எத்தனை எத்தனையோ காட்சிகளைக் கண்டு களித் தனவே என் கண்கள்!

பொன்னைப் பார்த்தேன்; பெண்ணைப் பார்த்தேன்: மண் ணைப பார்த்தேன்; மற்றுமுள்ள அனைத்துப் பொருள்களையும் பார்த்துப் பார்த்துப் பார்வையே மங்கிப போய்க்கனமான கண் ணுடித் துண்டை என் கண்களிலே பதிய வைத்து, அதன் மூலமாகவும் பார்த்துக்கொண்டே இருக்கிறேனே! அந்தப பொல்லாத பார்வை இன்னும் எத்தனை நாளைக்கு?

காது செய்த பாவம

காதைமட்டும் விட்டேனு! கர்த்தனே! உன்னைக் காத கர்கள் தூஷிக்கும்போது, அதைத் தடுத்து நிறுத்தாமல் பயனற்ற பாடல்களைக் காது குளிரக் கேட்டு நெடுமரமாய் நின்றேனே! உன் ஞானப் பிரசங்கங்களைக் கேட்காமல், கலை படைத்த கற்பனைகளையே நிலையெனக் கொண்டாடிக் கண்

மூடிக் காது கேளாதவன்போல் நின்றுவிட்டுக் காலைப்படக் காட்சிக்குச் சென்று களியாட்டத்தில் அமர்ந்தேனே! அந்தக் கலைக்குதவா வசனங்களைக் கேட்டு விசனப்பட்டு வெளி வந்தேனே! ஐயையோ நானசெய்த பழிபாவங்களுக்கு எல்லை யுண்டா ! எத்தனைக் குடும்பங்களைக் கெடுத்தேன் : எத்தனை நண்பர்களைப் பிரித்தேன் : எத்தனை தீயகாரியங்களுக்கு ஏகப் பிரதிநிதியாகப் பொறுப்பேற்றேன் அவ்வளவும் என் இத யத்தை ஆயிரம் அரபுகள்கொண்டு குத்தி அசைப்பதுபோல் அலலற்படச் செய்கின்றனவே! நான என்ன செய்வேன். இயேசுநாதா, கிறிஸ்துநாதா, ஆனமநாதா, அமலோற்பவ நாதா, அடைக்கலநாதா, அருமைநாதா, சகாயநாதா, சன்மார்க்கநாதா, எலலைக் காப்பாறறு எனனைக் காப்பாற்று என்று குரல் கொடுக்கிருர் வேதநாயக சாஸ்திரியார்.

'மண்ணிலே பவத்திஞல உதித்துவந்த பாவிநான
மதலையான நாள துவக்கி வையபிலே நடந்தநான்
கண்ணுலே செய்தபாவம் எண்ணிஞலு முடியுமோ
காதொாடைம் பொறிவினை கணக்கிலைக் கடந்ததே
புண்ணிய மனைத்துணைய தேனுமற்ற வஞ்சகப
புலையஞன பாவிநான் புரிந்தரண்ட கங்களாம்
எண்ணிறந்த கோடிபாவ மும்பொறுத் தீடேற்றவென
றேகனுக் குரைக்கவேணும் ஏசுநாத சாமியே '

(ஜெபமாலை)

ஏங்கிக் கிடந்த இதயத்திலிருந்து வெளிவந்த வேதனைக் காட் சியை எடுத்துக் கிறிஸ்துவச் சமுதாயத்திறகு மட்டுமன்றி உலகத்திலிருக்கும் அத்துணை மதத்தாருக்கும் தெளிவுபடுத்து கிருர். அந்தக் கிறிஸ்துநாதரை ஞாபகப்படுத்தும் சின்னம் சிலுவைதானே! சிலுவையை மறப்போர் இம்மானிலத்தில் மனிதர்களாக இருக்கலாமா! சிந்தித்துப் பாருங்கள்!

பொய்யான காயம

உள்ளத்தை ஊனப்படுத்தும் அகப்பேய் உடலைமட்டும் விட்டுவிட்டதா; விடமுடியுமா அதனுல! உள்ளம் விரும்புகிற உருட்டல் மருட்டலைத்தானே உடம்பு செய்கிறது. அந்த உடம்பு நிலையானதா!

"காயமே இது பொய்யடா—சிவ
காற்றடைந்த பையடா
மாயனார் குயவன் செய்த
மண்ணுப் பாண்டம் ஓடடா
உப்புமண்ணும் ஓட்டை மூங்கில்
ஓட்டிவைத்த கூடடா
உளுத்த நரம்பும் வெளுத்த தோலும்
இழுத்துக் கட்டிய கூடடா"

என்று சித்தர் ஒருவர் பாடிய கருத்தின்படி அமைந்த இந்த ஈனமான உடலை வைத்துக்கொண்டு என்ன ஆர்ப்பாட்டம் செய்கிறோம்! நேற்று பிறந்து, இன்று வளர்ந்து, நாளை அழிந்துபோகும் நிலையற்ற உடலை, எப்படி எப்படியெல்லாம் காப்பாற்றுகிறோம்! புண்ணான மேனியைப் பொன்னாகப் பாவித்துக் கண்களில் காணும் கந்தைகளை யெல்லாம் கணக்கில்லாமல் வாங்கிக் குவித்து, மண்ணாக மாறும் இந்தக் காயத்தை அழகு பார்க்கிறோம். இரத்தமும் சீழும் துர்நாற்றமும் வீசும் அசுத்த உடலை மணம் வீசும் திரவியங்களைக்கொண்டு பூசிக் குளித்துப் பகட்டு மணம் வீசச்செய்து, மேன்மேலும் அழகு படுத்துகிறோம். ஆனால் அழகிய இந்த உடலை உயிர் நீங்கிய சிலமணி நேரத்தில் "உடனே எடுத்து விடுங்கள் வாசனை வந்துவிட்டது" என்று சொல்லுகின்ற மோசமான இந்த உடலைச் சீவி முடித்துச் சிங்காரித்து என்னென்ன வேடிக்கைகளைக் காட்டுகின்றோம்! இறந்துவிட்ட நம்மைப் புதைத்துவிட்ட பிறகேனும் அந்த உடலுக்கு நிம்மதியுண்டா!

புதைத்துவிட்டுச் சென்ற நம் உடலை நாயும் நரிகளும் குழியைப் பறித்து வெளியே கொண்டுவந்து கௌவிப் பிடுங்கியுண்ண, அதைக் காக்கைக்கழுகுகளும் கொத்தித் தின்று ருசி பார்க்க, அக்காட்சியைக் கண்டவர்கள் கண்மூடிச் செல்லும் நிலைபடைத்த ஈன உடலதானே இது!

கண்ட பெண்களுடன் சேர்ந்து காமக்களியாட்டம் புரிந்து, காமலோலனாகத் திரிந்து, கண்டவர் எள்ளி நகையாடும்வண்ணம் தொழுநோய்கொண்ட இந்த உடல, மலமும் பிறவும் நிறைந்து அழுகிவழிந்துகொண்டிருக்கும் பாழுங்

கிணற்றைப் போன்று காட்சியளிக்கும் இந்த நாற்ற உடலை, மற்றவர் பதவியில் ஏறவோ அன்றிக் கீழ்த்தளத்தில் இறங்கவோ பயன்படுத்தப்படும் இந்தப் பொல்லா ஏணியை அழுகிய பண்டங்களை அடைத்துக் கட்டிவைக்கும் கோணிப் பையை—அகப்பட்டதை எல்லாம் அவ்வப்போது தின்று ஜீரணிக்க முடியாமல் தவிக்கும் தொந்தியைப் பெற்று, அதனால் பாதுகாக்கப்படும் கூட்டினை உடைந்து போகும் மண்பாண்டத்தை, எத்தனை, எத்தனை ஆடை அணிகலன்களைக் கொண்டு அழகுபடுத்தி ஆனந்தப்படுகிறோம்; இத்தனையும்,

"காகமோடு கழுகலகை நாய்நரிகள்
சுற்றுச் சோறிடு துருத்தியைக்
காலிரண்டு நவவாசல் பெற்றுவளர்
காமவேள் நடனசாலையை
மோகவாசை முறியிட்ட பெட்டியை, மும்மல
மிகுந்தொழுகு கோணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை,
முடங்கலார் கிடை சரக்கினை
மாக விந்திர தனுமின்னை யொத்திலக
வேத மேனிய குலாலனார்
வனை ; வெய்யதடி காரனா னயமன்
வந்தடிக்கு மொரு மட்கலத்
தேகமான பொய்யைமெய் யெனக்கருதி
பையவைய மிசை வாடவோ ?
தெரிவதற் கரிய பிரமமே வமல
சிற்சு கோதய விலாசமே!"

என அனுபவித்து அவனியோருக்கு எடுத்து இயம்புகிறார் தாயுமான சுவாமிகள்.

எவ்வளவு மட்டமான நிலையுடையது? இந்த உடல், துருத்தி - காமவேல் நடனசாலை - பெட்டி - கோணி - கும்பி-கிடைமின்- மட்கலம் - பொய் என்றெல்லாம் தாயுமானவர் சொல்லுகிறாரே, நம் உடலிலிருக்கும் ஒன்பது வாயில்களும் நம்மை

என்னென்ன பாடுகள் படுத்திவைக்கின்றன. அந்த ஒன்பது வாயில்களிலே நுழைந்த அக்ரமங்களுக்கு எண்ணிக்கை யுண்டா? அவை புரிந்த எண்ணற்ற பாவங்களுக்குப் பரிகாரந் தான் உண்டா! இருக்கும் வரைக்கும் இகபோக இன்பங்களை எல்லாம் அனுபவித்தோமே! கடைசியில், அதனால் என்ன பயனை அடைந்தோம், அன்றி அடையப்போகிறோம்.

பொய்யான தேகத்தின் மறைவுக்கு முன்னால நாம் செய்ய வேண்டிய கடமைகள்—சிந்தித்துச் செயலாற்ற வேண்டிய செய்கைகள் எல்லாம் கிணற்று நீராகவே தேங்கிக் கிடக்க வேண்டியவைதாமா!

மனிதன் தனது ஆக்க சக்தியினால், விஞ்ஞான ரீதியாகப பல விநோதங்களைக் கண்டுபிடிக்கிறான். அவைகளில பல அழி கின்றன சில வளர்கின்றன. வளர்ந்த விஞ்ஞானத் தெளிவுகள் உலகப் பகுதிகளிலே ஆக்கவேலைகளை வெற்றியின் முகட்டிலே ஒளிவீசச் செய்துகொண்டிருக்கின்றன

- o சூரிய மண்டலத்தை எட்டிப்பிடிக்க ஸ்புட்னிக்!
- o பூமியை ஒரு நொடியில சுற்றிவர ராக்கெட்!
- o உலகத்தை அரைக் கணத்தில் அழித்துவிட ஆட்டம் பாம!
- o அழிவுக்கே ஆக்கம் செய்யும் ஐடிரஜன் குண்டு!

ஆகியவைகளைக் கண்டுபிடித்து உலகமக்களை நிம்மதியற்ற முறையில் வாழவைத்துக் கொண்டிருக்கின்ற அளவுக்கு இன்றைய விஞ்ஞானம் வளர்ச்சி யடைந்திருக்கிறது. ஆனால் உலகத்தை அழிக்கும் விஞ்ஞானம், உலகை என்ன செய்கிறது. அதன் சக்தி எவ்வளவு உண்டோ அத்தனையும் செய்கிறது. ஆனால் நமது பொய்யான காயத்தை என்றும் அழியாத மெய்யா வாழ்க்கையாக, அழியாத உடலாக மூச்சுவிடாமல் வாழ்கின்ற விஞ்ஞான வாழ்க்கையாக மலரவைக்க மனிதன் கண்டுபிடித்த விஞ்ஞானத்தால் முடியுமா? முடியவில்லையே! முடியாதே!

விஞ்ஞானத்தாலும் காப்பாற்ற முடியாத உடலை எப்படி எப்படி எல்லாம் அழகுபடுத்துகிறோம். அந்த அழகை நீடித்து

நிலைபெறச்செய்ய மனிதனால் கண்டுபிடித்த விஞ்ஞானத்திற்கு வலிமை இருக்கிறதா? அல்லது முயற்சிதான் செய்ய முடிகிறதா?

உயிர் பிச்சை:

அன்றே பூத்துப் புதுமையாகக் காட்சியளிக்கிற மலரைக் கண்ட கலைஞன, மலரைப் போலவே உருவத்தைச் செய்து அதற்கு உயரம், அகலம், நிறம் முதலியவற்றுள் சிறிதும் மாற்ற மின்றி செய்துவிடுகிருன். ஆனால் ஒன்றைமட்டும் அவனால் செய்யமுடியவில்லை. ஆம்; விஞ்ஞானத்தைக் கண்டுபிடித்த அவனால் இயற்கைப் பூவிலிருக்கும் இயற்கை மணத்தைச் செயற்கை மலருக்குக் கொடுக்க முடியவில்லையே ஏன்?

எத்தனையோ ஆண்டுகளாகத் தன் இதயப் பீடத்திலே வைத்து ஏங்கிஏங்கிக் கடைசியில் சிலையாக்கி விடுகிருன் சிற்பி. அச்சிற்பப் பூர்பாவை காண்போர் மனத்தைக் கவரக் கூடியதாக கட்டழகு மிக்கதாக பார்த்தவுடனே பரவசம் கொள்ளும் பாங்கான வடிவுடையதாக இருப்பதோடு அவ் வடிவம் உயிருள்ள பெண்தானு என்று மயங்கும் தன்மை யுடையதாக அமைந்துள்ளது. இத்தனைச் சிந்தனைகளும் அச் சிற்பத்தை ஏறிட்டுப் பார்த்தவுடனே எழக்கூடிய எழில உருவ மாய் அமைந்துள்ளது அது. ஆனால், அது சிலையாகக் காட்சி அளிக்கிறது. ஆம்; காட்சி அளிக்கவைத்திருக்கிருன் கை தேர்ந்த சிறபி. என்ன பரிதாபம். அந்த எழில மங்கை பேச வில்லையே! நடக்கவில்லையே! பாடவில்லையே! கடைக் கண்ணால் நம்மை பார்க்கவில்லையே! இத்தகைய எண்ணங்கள் நம் முன எழுகின்றன. என்ன மயக்கம அது! அதறகு உயிர் இல்லையே! இருந்தாலல்லவோ அது நம்மைப் பார்க்கக்கூடும், அலலது நம் முன பேசக்கூடும். உயிரும் இருந்துவிட்டால்! அப்பப்பா. அந்தப் பெண் பேசுவாள், ஆடுவாள், பாடுவாள், ஏன் ஒய்யாரநடை போடுவாள். விஞ்ஞானத்தைக் கண்டு பிடித்த மனிதனால் அந்தக் கற்சிலைக்கு நிலையாக உயிர் கொடுக்க முடியுமா, முடியாமை ஏன்?

வானவீதியில் வண்டைப்போல் பறந்து குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில், குண்டுகளைப் போட்டுவிட்டு

மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேர்ந்து விடுகிறது வான ஊர்தி. ஆனால், குண்டுகளைப் போடுவதால் ஏற்படும் நன்மை தீமைகளை அது அறிகின்றதா! இல்லையே! அறியும் திறமையை - பகுத்தறிவை - விஞ்ஞானம் கண்டுபிடித்த மனிதனால் கொடுக்க முடியவில்லையே! ஏன ?

பாவம், விஞ்ஞானியாலேயே தனது உடலைக் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை என்றும், அவன் படைக்கும் படைப்புகளுக்கு மட்டும் எவ்வாறு பாதுகாப்பும உயிரும உணர்வும் பகுத்தறிவும் அளித்து வாழவைக்க முடியும வளரவைக்க முடியும? ஆகவே நம பொயயான இத்தேகம் உயிர்பிரிந்த பின்னர், நலல இளைபபாறுதலைப பெற ஞான அமைதியைப பெற எனன வழி செய்தோம. இளைபபாறுதலையும, ஞான அமைதியையும உணடாக்க நாம கண்டுபிடித்த விஞ்ஞானத திறகுச் சக்தி யிலலையே ஏன ?

அனசயும ஆமை :

உலக வாழ்க்கையிலே மனிதன் உல்லாசமாக வாழ வேண்டும் என்பதறகாகத் தன்னுடைய உடலை மிகவும் பொருப்புணர்ச்சியோடு காபபாறறுகிறான. அந்த உணர்ச்சிகளெல்லாம் நீண்ட நாள் நிலைத்திருப்பன அல்ல.

கிணற்றிலே சுதந்தரமாக மூழ்கிச் சுறறிக்கொண்டிருந்த ஆமை ஒருநாள் ஒருவனிடம அகபபட்டுக்கொண்டது. ஆமையைப பிடிததுக்கொணடு சென்ற மனிதன் அகலமான மட்பாணடம ஒன்றில் தண்ணீர் ஊறறி ஆமையை அதிலே வைத்து மூடி அடுபபில ஏறறித் தீ மூட்டினான. தீ பரவபபரவ தண்ணீர் வெமமை ஏற ஆரமபிததது. ஆமைக்கு ஒரே ஆனந்தம். தண்ணீரிலேயே இருந்த அதற்கு வெதுவெதுப்பான நீரில் உலாவ மிகவும மகிழ்ச்சி ஏறபட்டது. தன் உடலை மேலும் கீழுமாகப் புரட்டிச் சூடாகிக் கொண்டிருக்கும் நீரில் தன்னை மறந்து சுகம் அனுபவிததுக் கொண்டிருந்தது. ஆனால், தீயின் வெம்மையால நீர் மேலும் மேலும சூடாகிக்கொண்டேயிருந்தது. மிகுந்த சூட்டின் காரணமாக "நாம வெந்து மாய்ந்து மனிதனுக்கு உணவாகப் போகிறோம்" என்பதை

அறியாமலே ஆமை அகமகிழ்ந்து கொண்டே யிருந்தது. அதன் முடிவு!

அப்படித்தானே இன்றைய மனிதனும் உலக வாழ்வில் சிக்கிச் சீரழிந்து வருகிறான். யாது பயன்? ஆமையேனும் அசைவ உணவுண்போனுக்கு உணவாகும நிலையிலாவது பயனபடுகிறது. ஆனால், இந்த மனிதனே!

ஆண்டுகள் பல கழிந்தும், இறந்த மீன் உபபிட்டு உலர்ததபபட்டதன காரணமாகப் பலருக்கு உணவாகிறது. ஆம், மனழைக் காலஙகளில அம மீனகளின தலைகளுக்குக்கூட மேனமையும் தட்டுப்பாடும ஏறபடுகினறன. ஆனால, பாழும் இந்த மனித உடல! "சீக்கிரமாய் அறுந்த புவிடலாம நேறறு மாலையே இறந்தது" எனறு கூறபெறறுககபபட்ட மகன வாயா லேயே சொலலும் அளவுக்குச் சீர்கெட்டு சேர்நத மெய்ஞ் ஞானமும் கெட்டு, மனிதபிண்டமே நீ பலவகையானும் கெட்டு, கெட்டு, உயிர்விட்ட பிறகு நீ யார்? வெறுங் கட்டையை, மாமிச மூட்டையை நமபி நாம எனனெனன நச்சுப பரீட்சையில நம வாழநாட்களை வீழ் நாட்களாகக் கழிக் கிறோம.

அத்தகைய அபாயத்திலிந்து நாம எபபடி மீளப் போகிறோம?

"நீஙகள் நினையாத நாழிகையில் மனுஷ குமாரன
வருவார். ஆதலால நீஙகளும ஆயத்த மாயிருஙகள"
மத்தேயு 25·41.

என்று வேதம் சொல்லுகிறதே! நாம் நினையாத நேரத்திலே ஆண்டவர் வருவாராம அபபோது நாம் எனன செயயப் போகிறோம? பள்ளிப பாடததைப படிககாமல காலத்தை வீணாகக கழிதது ஊர் சுறறித திரிந்து நணபர்களுடன கூடி மகிழநது விளையாட்டிலே ஈடுபட்டிருநத மாணவனைப பார்த்து கல்வி அதிகாரி கேள்வி கேட்டபோது விடை சொல்ல முடியாமல விழிக்கும் மாணவனைப போல, ஆமை இரட்சகர் கிறிஸ்துநாதர் நம்மை ஜீவிய இரட்சணயததைப பறறி, மகனே உன வாழநாளில் எனன செய்து கொண்டிருந்தாய் உனனால் மனித சமுதாயததிற்கு ஏறபட்ட பயன என்ன?" எனறு

நம்மை கேட்கின்றபோது நாமும் விடை கூற முடியாமல் இருப்போம். இல்லை, எல்லாவித வினாக்களுக்கும் தக்கபதில் சொல்லி ஆண்டவரின் அன்பைப் பெற ஆயத்தமாக இருக்க நாமால் கூடுமா ஆய்; என்றால் நாம சிலுவையை மறந்தவராய் இருக்க முடியுமா?

சிலுவையின் செந்நெறி

எல்லா நெறிகளும் சரிவர நடைபெறுவதில்லை. நடக்கும் நெறிகளெல்லாம் பரிபூரண வெற்றியை அடைவதும் இல்லை. வெற்றியடைவதற்குக் காரணம், நெறியை நெறியாக மாற்றி வழி தவறிப் போகின்ற போக்கு மனித சமுதாயத்தையே அழித்துவிடும் நச்சுநீராக மாறிவிடுகிறது. ஆனால் சிலுவை காட்டும் செந்நெறி அவ்வகையானது அச்சிலுவையின் செந்நெறி ஏவலமைக்க கீர்த்தி வாய்ந்தது என்பதை தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்களே சொல்லுகிறார் கேட்போம்.

> "கிறிஸ்து பெருமான சிலுவைககோலம என் முன்னே நிற்கிறது. அக்கோலம் நெருசில படியப் படிய அது சடத்ததுவங்கள் எல்லாவற்றையும் கடந்த தெய்வீக அன்பைப் பொழியும் அப்புனித வெள்ளத்தால பகைமை இரிந்து ஓடும அங்கே பொறுமைப பொங்கும; தியாகம கொழிக்கும. உலகம அமைதிக் காட்சியை வழங்கும் சிலுவைக் கோலத்தியானம இவ்வுலகைப் பரலோக மாக்கு மென்று சுருங்கச் சொல்லுகிறேன. அத்திருக் கோலம செகத்தின சிந்தையில் நிற்கும் காலத்திலேயே உலகம் விடுதலை அடையும் அமைதி பெறும்"
>
> (பரம் பொருள் அல்லது வாழ்க்கை நெறி)

எவ்வளவு ஆழ்ந்த சிந்தனையோடு சொல்லுகிறார் உண்பது நாழி உடுப்பது நான்கு முழம் ஆனால் எண்ணுவது கோடான கோடி எண்ணங்கள். அத்தனை எண்ணங்களும் குவலயத்தின் பால் ஈடேறக் கூடியவைகளா? எண்ணங்கள் ஏக்கங்கள் எல்லாம் ஒருவழி வந்து நிலை பெறின்றி நீரின பரப்பிலே தோன்றி மறையும் அலையென மறைந்தே போகும்.

சிலுவையை நாம் சிந்தையிலே நிலை நிறுத்திச் சிறக்க வைத்து விட்டால், வேதனையும் வீண்பழியும் தாமாகவே ஓடி மறைந்து விடும். அமைதியைத் தேடி அலைந்து அலைந்து அங்கலாய்த்துக் கொண்டிருக்கும் நமது உள்ளங்களுக்கு அமைதி கொடுக்கும் அரு மருந்தாய அமைந்தது சிலுவையே யாகும்.

பிறர் துன்பங்களைத் தன் துன்பங்களாக ஏற்று நிற்கும் ஒவ்வொரு தனி மனிதனும் அமைதியை அவசியம் பெறுவான். மற்றவர்கள் துயரங்கண்டு இரங்கும் நனமதியாளன் என்றென்றும் ஈடு இணையில்லா அமைதியை அடைவான ஆம்; அன்று அண்ணல் கிறிஸ்து பெருமான், சிலுவையைச் சுமந்த காரணத்தினால் தான மற்றவர்களின் பாவங்களுக்குப் பரிகாரம் தேட, அவர்களின குற்றங்கள் குறைபாடுகளைத் தீர்க்க அப்பெரும் பழிகளை ஏசுநாதர் ஏற்றுக் கொண்ட காரணத்தினால் தான் இன்று அச்சிலுவையும அதுகாட்டிய செந்நெறியும், ஏசுவின பேரன்பும உலக வீதியிலே சுடர்விளக்காகப பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. அப்பிரகாசத்தில் நம் வருங்காலத் தெய்வீகப் பாதையை நாம் அறிந்து கொள்ள வேண்டாமா?

சிலுவையை எண்ணிச் செகத்தைச் சீர்திருத்திய பெரியார்கள் பலர், சிலுவையின் மகிமையை மாநிலத்திற்கு எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

> "சிலுவையே சிம்மாசனத்திற்கு வழி சிலுவையின் பிறகு கிரீடம் மகிமை நமக்கும் கிடைக்கும. இவை நமக்கு வேண்டுமானால், மற்றவர்கள் ரட்சிக்கப பட நாம் சகல துன்பத்தையும் சகித்து உழைப்பது அவசியம்"
>
> (சாது சுந்தர்சிங் பிரசங்கங்கள்)

சாது சுந்தர்சிங் அவர்கள் சொல்லிய சிலுவையின் மேன்மையை என்னென்று சொல்லுவது.

தாயின் இதயம

நம்மைப் பத்து மாதம் சுமந்து பெற்றுப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்த அன்னை, தன் மகன் என்னதான் தவறு செய்

தாலும், தன் மரணத்திற்கே வழிகோலியாக ஆம்; "மெல்லிய வாழைக்குத் தானீன்றகாய் கூற்றம்" என்பது போல நின்று சதி செய்தாலும் இறக்கும் தருவாயிலும் கூட தான் பெற்ற மகனை அந்தத் தாய் மறப்பதில்லை. குற்றங்களை மன்னித்து மகனே என்று மார்போடு அணைத்து உச்சிமோந்து இன்பம் அடைகிருள். ஆனல் மகன்... ?

இளம் தம்பதிகள் இருவர் இன்பம் அனுபவித்துக் கொண்டு வருகிருர்கள் என்ருலும், கணவனின் தாய் தன்னுடைய சுதந்திரத்தைப் பறிப்பதாகவும், தன் இன்பத்தில பங்கு கொள்வதாகவும், தன்னுடைய ஏகாந்த வாழ்க்கையைக் குலைப்பதாகவும், கற்பனை செய்து கொண்ட அந்த பேதைப் பெண், ஒருநாள் தன் காதலனிடம்

"எனனை நீங்கள் உண்மையிலேயே நேசிக்கிறீர்களா''

"ஏன் அப்படிக் கேட்கிருய் என் உயிரை உன மேலல்லவா வைத்திருக்கிறேன"

"எலலாரும் அப்படித்தான சொல்லுகிருர்கள் ஆனல் செயலுககுவரும் போது"

'கட்டாயம செய்யக்கூடிய ஆறறல எனக்கு இருக்கிறது. சொல்; உனக்கெனன வேண்டுமு"

"எனக்கு வேண்டியதை நீர் அவசியம தருவீரா?"

"தருவேன; இது உறுதி; தடையிலலாமல கேட்கலாம் உனக்காக நான எதைச் செய்யவும சித்தமாக இருக்கிறேன்'

'அப்படியானல உங்கள தாயின இதயததைக் கொண்டு வாருங்கள்"

"என்ன தாயின் இதயத்தையா"

ஒரு முறைமென்று விழுங்கினன். அவன் பார்வை வெளியே சென்றது. அங்கே மரக்கிளையின கண் கட்டபபட்டிருக்கும் கூண்டிலிருக்கும் காக்கைக் குஞ்சுக்குத் தாய்க் காக்கை தன் அலகில் வைத்துள்ள ஆகாரத்தை ஊட்டிக் கொண்டிருந்தது; அவன் கண்களிலே நீர்த்தேக்கம் மனைவியின் குரல் கேட்டது.

"என்ன தயங்குகிறீர்கள்? உங்கள் தாயின் இதயத்தின் மீது ஆசை வைத்திருக்கிறேன். அது உடனே வேண்டும்"

ஒரு முறை தன் மனைவியின் முகத்தைப் பார்த்தான் கணவன் இதோ ஒரு நொடியில் நீ விரும்பியதைச் செய்கிறேன்." என்று சொல்லி மனைவியின் மறுவார்த்தையைக்கூட எதிர் பார்க்காமல் ஓடினான்.

தன் தாயிடம் சென்றான். அந்த அபலைத் தாய் மகனைக் கண்டவுடன் தாவி அணைத்து, முத்தம் கொடுத்தாள். ஆனால் மகனோ தான வந்த காரியத்தை ஈடேற்றிவிட்டான். ஆம்; அரவணைத்த அன்புக் கரங்களை அகற்றி அன்னையின் ஆவியைப் போக்கி, அவள் இதயத்தைத் துண்டித்துக்கொண்டு தன் காதல் மனைவியிடம் ஓடினான்.

அவன் தனது வெற்றியை வேள்விழியாளின் கடைக்கண் நோக்கிற்குக் காணிக்கையாக்க வேண்டும் என்ற பெரு நோக்கத்தோடு விரைந்து நடந்து சென்றான். செல்லும் வேகத்தில், கல் ஒன்று தடுக்கிக் கீழே விழுந்தான் உடனே ஒரு குரல் கேட்கிறது. "ஐயோ மகனே விழுந்து விட்டாயா? காயம் ஏதேனும் பட்டதா? பார்த்துப் போகக்கூடாதா மகனே!" கீழே விழுந்த காளை சுற்று முற்றும் பார்த்தான் குரல் எங்கேயோ கேட்கவில்லை தன் கரங்களினபிடியிலிருந்த அவன தாயின் இதயம் தான் அவ்வாறு பேசிற்று. ஒரு முறை தன் கரங்களில் தொங்கிக் கொண்டிருக்கும் தாயின் இதயத்தைப் பார்த்தான். மகனே!" காயம் எதுவும் படவில்லையே" என்று மீண்டும் கேட்டது இதயம். காளையின் கண்கள் நீரை ஆறுகப் பெருக்கியது.

"அம்மா" காளை கதறினான். அண்டமே அதிரும்படி 'அம்மா, அம்மா" என்று கூக்குரலிட்டுக் கதறினான். என்ன பயன்? மாண்டுவிட்ட அந்த மங்காத பேரொளி, மாணிக்கச் சுடர், மந்தகாச வாழ்வளித்த மாதா, மண்ணிலே நம உடல படாமல மடியிலே வைத்துப் பாதுகாத்த மரகதமணி மீண்டும் வருவாளா? இறந்தப் பிறகும் இரக்கங் காட்டும் இதயப் பொக்கிஷம் மீண்டும் உயிர்பெற்று வரக்கூடுமா? முடியாது முடியவே முடியாது!

தாயைக் கொல்லத் துணிந்த மகனும், கொன்றுவிட்ட மகனுங்கூட கடைசி நேரத்தில் தாயைச் சவக்குழியில் வைக்கின்றபோது ஒரு சொட்டுக் கண்ணீர் விடாமல் இருக்க மாட்டான. அத்தாயையும் மகனையும, அவர்கள் செய்த பாவங்களையும் மன்னிக்கத்தானே பொறுப்பேற்றுச் சிலுவையிலே பலியானர் கிறிஸ்து அந்தக் காட்சியைக் கண்டு நாம் மட்டும் கண்ணீர் விடாமல் இருக்க முடியுமா !

அவமானச் சின்னம

சில பொருள்கள் உலகில் மரியாதைக்குரிய அரும்பொருள்களாகச் சிறப்பிக்கப்படுகின்றன பல பொருள்கள் அவமானச் சின்னங்களாகக் காட்சி அளிக்கின்றன. கால வேறுபாட்டினுல் அல்லது கருத்துப்போர்கள் நடந்து அவற்றுள் தவிர்ப்பன, ஏற்பன என்ற முறை வருமபோது, அல்லது வந்துவிட்ட ஓர் சூழநிலை உருவாகிவிட்ட பிறகு, கொடுமைக் குரியவைகள் கொள்ளத்தக்கனவாகவும் பெருமைக்குரியவைகள் புதைக்கப் படுவனவாகவும மாறிவிடுகின்றன. ஆனல் உலக ஏற்றத் தாழ்வின் சூழலிலே சில பொருள்கள் தொடுவோரின் உயரிய எண்ணத்தாலும்; ஏற்றமிகு கொள்கையாலும சிறப்பு பெறுகின்றன. சிலுவையும ஒரு காலத்தில பழிக்கும சின்னமாகத்தான் காட்சி அளித்தும கருதப்பட்டும் வந்தது.

உரோமானியர் காலத்தில தவறு செய்தவர்களைத் தண்டிப்பதற்குப பண்டைத் தமிழர்கள் உபயோகித்த கழு மரத்தைப போலச் சிலுவையும பயன்படுத்தப்பட்டு வந்தது ஒருவன குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டு விட்டானுல் அக் குற்றவாளியே சிலுவையைத தோளின் மேல சுமக்கு மாறு செய்து, வீதி வீதியாகச் சுற்ற வைத்துக் கடைசியில் அச் சிலுவையிலேயே ஆணிகளால அறைந்து தண்டனையை நிறைவேற்றப் பயன்படுத்தப்பட்டு வந்த அவமானச்சின்னமாக இருந்தது.

அவமானச் சின்னமாகிய அச் சிலுவை, உலக மக்களின் மத்தியிலே சீரும் சிறப்பும் பெற்ற ஒரு தெய்வீகச் சின்னமாகக் காட்சி அளிப்பதின் மகிமை என்ன' முதலில கூறியது போலக் கொடுமைக்குரிய சின்னமானுலும் கொண்டாள்வோர் தன்மை

யையும், மேன்மையையும் பொருத்துக் கொடுமைக்குரிய 'சின்னமும்' பூவுலகம் போற்றும் புண்ணியச் சின்னமாக மாறிவிடும். அப்படித்தான் உலகப் பாவங்களைப் போக்க, தமக்குத்தாமே பலியாகிக்கொண்ட கிறிஸ்துநாதரின் தூய உடலைச் சிலுவை தாங்கியதால், அதனைப் புகழ உலகெங்கும் பெருமைப்படத்தக்க நிலையை எய்திவிட்டது.

இயேசு கிறிஸ்து உலக மக்களின் பாவங்களுக்காகத் தம்மைத்தாமே பலியாக்கிக் கொண்டார். மன்னிப்பு என்பது அவர் வாயிலாகத்தான் உலகுக்கு அறிமுகமாக்கப்பட்டது. தவறு செய்கிற மனிதன் அவனது பாவத்தை உணர்ந்து அதற்காகக் கழுவாய் தேடிக்கொள்வானேயானால், அப்போதுதான் அவன் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும். ஆனால் பிராயசித்தம் தேடாத மாந்தரின் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்கு யார்தான் முன் வருவார்? வந்தார் ஒருவர். அவர்தான் இறைவனின் திருக்குமாரனான இயேசுகிறிஸ்து. பிணியாளர்களை குணமாக்கினார். குஷ்டரோகிகளைக் குணப்படுத்தினார்; மரித்தவர்களை உயிர் பெற்றெழச் செய்தார், குருடர்களுக்குப் பார்வை அளித்தார். சப்பாணிகளை நடக்கச் செய்தார்; ஊமைகளைப் பேசவைத்தார்; செவிடர்களை ஒலியறிய அருள்புரிந்தார்; குற்றம் செய்தவன் மேல் கோபிப்பதைவிட்டுப் புன்சிரிப்போடு அவனுக்கு அறிவுரை வழங்கினார்; எல்லாரிடத்தும் அன்பாயிருந்தார். அடிமைக் குடியானவர்களின் வாரிசாகப் பிறந்தார். அடிமைத்தளையில் ஆழ்ந்து அழுந்தி அழிந்துகொண்டு வந்த யூதர்களின் அடிமைத் தளைகளைத் தகர்த்தெறிந்து, அறிவுக் கண்களைத் திறந்து வைத்தார். கருணையே வடிவாகக் காட்சி அளித்தார். அதைக்கண்ட உரோமானியர் அந்த நல்லாயனை, மற்றவர்களுக்குத் தொண்டு செய்த தேவக் குமாரனை-ஏசுவைக் குற்றவாளியெனக் குற்றம் சாட்டினார்கள். குற்றங்கள் அத்தனையும் அவர் செய்ததாகச் சொல்லவில்லை. மற்றவர்களின் குற்றங்களைக் குறைபாடுகளை நீக்கியதுதான் கிறிஸ்துசெய்த குற்றம். அதற்காகக் கிடைத்த தண்டனை மரணம். அதையும் அவர் சுலபத்தில் அடையவில்லை. சிலுவையிலே அறையப்பட்டு இரத்தம் சிந்தி மரித்தார்.

*விசித்திரமான மனிதர்!*

செய்தக் கொலையையே தான் செய்யவில்லை என்று மறுத்து நீதிமன்றத்திலே வழக்கறிஞர்களைக் கொண்டு வாதாடித் "தான் குற்றவாளி அல்லன்" என்று நிரூபித்துத் தப்பித்து விடுகிறோம். ஆனால், மற்றவர்கள் செய்த குற்றங்களைத் தானே ஏற்றுக்கொள்ளும் ஒரு புனிதத் தன்மை யாருக்கு வரும்? அந்த ஒரே மனிதர், இரட்சண்ய பிதா, பாவந் தீர்க்கும் குருபரன். மற்றவர்களின் குற்றங்களுக்காகத் தான் ஒருவரே தண்டனை அடைந்தவர் ஏசுநாதரே.

மாறாத அன்பு :

"பிறர் குற்றங்களைத் தன் குற்றங்களாக ஏற்றுக்கொள்பவனே என்னைப் பின்பற்ற முடியும்." என்று மிகத் தெளிவாகக் கிறிஸ்துப் பெருமான் பகர்ந்திருக்கிறார்.

> "ஒருவன் என் பின்னே வர விரும்பினால் அவன்
> தன்னைத் தான் வெறுத்துத் தன் சிலுவையை எடுத்
> துக்கொண்டு என்னைப் பின்பற்றக் கடவன்"
>
> —மார்க், 8-34

என்று ஜனங்களையும் சீடர்களையும் பார்த்துச் சொல்லுகிறார். அவரைப் பின்பற்றுபவர்கள் இன்பத்தை எதிர்நோக்கிக் கொண்டு இருக்கக்கூடாது; இருக்கவும் முடியாது என்பதை ஆண்டவர் எவ்வளவு தெளிவாகக் கூறியிருக்கிறார்! சிந்தித்துப் பாருங்கள்.

அதுமட்டுமல்ல, சீமோன் அளித்த விருந்தின்போது, சீமோனின் இல்லத்திற்கு வந்து, தன்னைப் பணிந்துகொண்ட பாவியான பருவப்பெண்ணுக்கு "உன் பாவங்கள் மன்னிக்கப் பட்டன" என்று ஏசுகிறிஸ்து சொன்னாரென்றால் அந்தகைய கூற்றுக்கு மூலப்பொருள் எது, அன்புதானே.

> "அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
> இன்புற்றார் எய்துஞ் சிறப்பு"

என்கிறார் தமிழ்வேதத் தந்தை. ஆம்; உலகத்திலுள்ள எல்லா இன்பங்களையும் அடைந்து, இல்லை என்ற சொல்லே தன் இல் வாழ்க்கையில் இல்லை என்ற பெருவாழ்வு வாழ்ந்தாலும்

அத்தகையோரிடம் அன்பு என்ற அப் பெருங்குணம் இல்லை யாயின் அப் பெருமக்களின் வாழ்வே சிறுமைதரும் வாழ் வாகவே மாறிவிடும்; மாறிவிடும் எனபது வள்ளுவர் வாக்கு.

1942ஆம் ஆண்டு ஆகஸ்டு ஒன்பதில் நடந்த ஆகஸ்டுப் புரட்சியிலே சுதந்திரத் தாகங்கொண்ட இந்தியநாட்டு மக்கள் புரட்சியிலே ஈடுபட்டுத் தபால் நிலையங்களைக் கொளுத்தியும், தந்திக் கம்பிகளைத் துண்டித்தும், அரசாங்க அலுவலகங்களின் தஸ்தாவேஜுகளைத் தீக்கிரையாக்கியும், தங்கள் விடுதலை வேட்கையைத் தீர்த்துக்கொண்டார்கள். அபபோது அவர்கள் ஆவேசம தீர்ந்தபாடிலலை. மேலும் மேலும் பலாத்காரத்தில் ஈடுபட்டார்கள் அபபோது காந்திஅடிகள் நாட்டு மக்களுக்கு எச்சரிக்கை ஒன்று விடுத்தார்.

'இப்படிபபட்ட அராஜகம் நிகழ்வதை நான ஏறறுக்கொள்ள மாட்டேன. இந்த நிலை மேலும் நீடிக்குமானல் போராட்டத்திற்கு நான் தலைமை தாங்க தகுதியற்றவனுக ஆகிவிடுவேன."

என்று நாட்டு மக்களுக்கு எச்சரிக்கை செய்ததுமல்லாமல

"இப்போது நடந்த புரட்சிக்கும், தேசத்திற்கும் மக்கள் பொருபபாளிகள் அல்ல. அதறகு முழுப் பொருப்பும நானேதான."

என்று பகிரங்கமாக அறிக்கை விடுத்தார் காந்தி அடிகள். இது எதைக் காட்டுகிறது. நாட்டு மக்களினமேல, தான வைத் திருக்கும் மதிப்பையும் அன்பையும் காட்டுகிறது அன்றோ!

காந்தி அடிகளைப் போற்றுகின்ற நாம்—அவர் காட்டிய வழிகளைக் கடைபிடித்து நடக்கிற நாம் — காந்தி அடிக ளாலேயே போறறப்படுகின்ற கிறிஸ்து பெருமானும் அன்பையே ஆயுதமாகக் கொண்டு மக்களின் பாவங்களுக்குப் பரிகாரம் தேடினர் எனபதை உணர்தலும் மிகமிக அவசியம் ஆம்; காந்தி அடிகள் நாட்டு விடுதலைக்கு அன்பைச் செலுத்தினர் கிறிஸ்துபிரான் உலகமக்களின் அறியாத் தன்மையைப் போக்க அன்பைச் செலுத்தினர்.

தூய அன்பு :

அன்பு என்று சொல்லப்படுபவை எல்லாம் அன்பு என்னும் சிறப்பைப் பெற்றுவிடுமா? காதலன் ஒருவன் தன காதலுக் குரியாளையே ஏமாற்றுவதற்கு நடிப்பதும் அன்புதான். தகப்பன் சொத்தை மகன் அபகரிப்பதற்குப் போலிப் பாசத்தைக் காட்டு வதும் அன்புதான். பட்டுப்புடவையும் பகட்டான அணிகளும் தன்னிடம் வந்து சேரும்வரை மனைவி கணவனிடம் குழைவதும் அன்புதான். வீட்டில் வளர்க்கும் நாய்கூட அன்றுட வயிற்றுப் பசியை நீக்கிக் கொள்வதற்காக வாலைக் குழைத்து ஆட்டு வதும் அன்புதான். காந்தி அடிகள்,

> "மனிதவர்க்கம் ஒப்புரவினல் மேம்பாடு அடைந்து வருகிறது. முன்னேற்றம் பெறச்செய்யும சக்தி அன்பேயாகும். அன்பே மனிதனைக் காக்கும சக்தியும் உயர்த்தும் சக்தியும ஆகும். நமமையும் அறி யாமல மனிதவர்க்கத்திலுள்ள இந்த ஒப்புரவு வேலை செய்து வருகிறது. மனிதசாதி உயிருடன் இருப்பதே ஒன்றைப பிரித்து விலகும வேகங்களைக் காட்டிலும், ஒன்று சேர்க்கும் அனபு வேகமே அதிக சக்தி வாய்ந்தது எனபதற்கு அத்தாட்சியாகும்.
>
> —யங் இந்தியா, 12-11-31

ஆம் ; அன்பு அவ்வளவு சக்திவாய்ந்ததுதான்.

நான் ஒரு கிணற்றில் விழுந்து மூழ்கிச் சாகும் நிலையில் இருக்கிறேன். அந்த நேரத்தில் என் நண்பன கிணற்றில் குதித்து என்னைக் காப்பாற்றிவிட்டான். ஆனல் அவன பரிதாபமாக இறக்கவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. என்ருல் அதுதான் உண்மையான அன்பு: தூய அன்பு ஆனல வேறுவிதமாக, நான் ஒரு புலியிடமோ அல்லது காட்டு விலங் கிடமோ அகப்பட்டு அவதிப்படும்போது நிச்சயம் என நண்பன் என்னைக் காப்பாற்றக் கூடாது; காப்பாற்ற முடியாது அப்படி அவன் காப்பாற்ற முயற்சித்து அதன் விளைவாக அவனுக்கு மரணம் ஏற்பட்டால் அது அன்பாகாது.

ஏசுநாதர் சிலுவையிலே மரித்தார் என்பதற்காக நம் பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டுவிடும் என்று கருத

முடியுமா? அப்படிக் கருதுவோமாயின் அது உண்மை மன்னிப்பாகக் கூடுமா? பாவ மன்னிப்புக்கும் ஒரு வரையறை உண்டு என்பதை நாம் மறக்கக்கூடாது.

ஒரு குடும்பத்தலைவன் தன் மைந்தர்களை அழைத்து 'இனிமேல் உங்கள் இஷ்டப்படி நடக்கலாம்: இதற்கு முன்னால் நீங்கள் செய்த தவறுகளை எல்லாம் மன்னித்துவிட்டேன். இனி எல்லாத் தவறுகளை எல்லாம் மன்னித்து விட்டேன். இனி எல்லாத் தவறுகளும் மன்னிக்கப்படும்'' என்று சொல்லி விடுவானேயானால், அந்த குடும்பத்தின் எதிர்காலம் என்ன வாகும் என்பதைச் சற்றுச் சிந்தித்துப் பாருங்கள் அத்தன்மை போலத்தான் மற்றெல்லாச் செயல்களும் மதிக்கப்படும்

''கிறிஸ்து நாதர் நமக்காகச் சிலுவையிலே உயிர் நீத்தார். அதன காரணமாக நாம் செய்கிற பாவங்கள் எலலாம் மனனிக்கப்பட்டன'' என்று நாம் நினைத்தால் நம்மைவிடப் பயித்தியக்காரர்கள் வேறுயாரும் இருக்க முடியாது. 'நான்படும் வேதனைகளைப் பார்த்தாவது, சிலுவையிலே ஆணிகளால் அடிக்கப்பட்டுத் தொங்கிக் கொண்டிருக்கும் எனது துன்பக் காட்சியைக் கண்டாவது, இனிமேல் பாவம் என்பதை. செய்யாதீர்கள்'' என்று நமக்குச் சொல்லாமலே சொல்லிவைத்தார் கிறிஸ்து நாதர்.

> ''நான் உனக்குப் போதித்து, நீ நடத்த வேண்டிய வழியை உனக்குக் காட்டுவேன். உனமேல் என கண்களை வைத்து உனக்கு ஆலோசனை சொல்லுவேன்'' (சங்கீதம் 32-8)

நமக்குப் போதிப்பவரும், வழிகாட்டியும், நாம் தீய வழியில் செல்லாமல் பாதுகாக்கும் காவலரும், ''நாம் இப்படித்தான் நடக்கவேண்டும்'' என்று அதிகாரம் செய்யாமல் ஆலோசனை சொல்பவராகவும், நமக்குத் தேவன் துணை புரிகிறார். அப போதனைகளையும் நன்னெறிகளையும் அகற்றிவிட்டு நாம் போகும் காட்டுப் பாதையில் களியாட்ட நடை நடந்து நம் போக்கிலே போனால் அது யார் குற்றம்? ஆண்டவருடைய குற்றமா அல்லது நம் குற்றமா? சிந்தித்துப் பாருங்கள்!

நல்லதும் கெட்டதும்

"இது நல்லது இது கெட்டது" என்று அறிந்த நாம் வாழ்க்கையில், பெரும்பாலும் கெட்டவைகளுக்கே முதலிடம் அளிக்கிறோம். ஐம்புலன்களைப் பயன்படுத்தி, ஆகாத அவலச் செயல்களை ஆடம்பரத்தோடு செய்து முடிக்கிறோம். பழுதாகும் பொருள்களுக்கெல்லாம் முலாம்பூசி பளபளப்போடு மின்னவைத்து மகிழ்ச்சி அடைகிறோம். அடைய முடியாத வற்றை எல்லாம் அடைந்துவிட்டதாக எண்ணி அக மிக மகிழ்கிறோம். அகில உலகத்தில யாரும் குறியாதனவற்றைக் குறித்துச் சொலலிவிட்டதாக எண்ணி வீண் வம்பை விலைக்கு வாஙகுகிறோம். துர்நாறமம வீசும் கழிவுப பொருட்களை, அத்தர், புனுகு, சவ்வாது என்று மிகைப்படுத்தி மக்களை நாபுபபடி செய்கிறோம். பெரியவர்கள், விசுவாசிகள், தெய்வச் சாட்சிகள, குருவானவர்கள ஆகியோரா சொலலுகினற அத்தனை அறிவாறறல மிகுந்த அனபு உபதேசங்களை-ஆண்டவரின ஆறறல மிக்க செய்திகளை—ஏக பரனின எழுச்சி மிக்க தீஞ் சுவை வேத வாக்கியங்களைக் கேட்காமல, நாம் கேட்டது தான் எலலா வகையிலும் சிறந்தது-சிலாக்கியமானது-செல் வாக்குடையது எனறு திமிர் வாதம் பேசி, வரட்டுக் கூச்சல போடுகிறோம்.

அது மட்டுமா! நம் ஊண் உயிரையும்கூட அதன் வழி விட்டு பேயாட்டம் ஆடுகிறோம். இவை யாவும் நம்மால் தோன்றும் குற்றங்கள் அல்லவா! இவைகளை எல்லாம் ஆண்டவர் மன்னிக்கவேண்டும். அவரால் மன்னிக்கப்பட்டு விடும் என்று நாம் எண்ணுவது சரியாகுமா? அதுதான் முறை யாகுமா?

> "உன் நாவைப் பொல்லாப்புக்கும், உன் உதடு களையும் காட்டு வசனிப்புக்கும் விலகிக் காத்துக் கொள். தீமையை விட்டு விலகி நன்மை செய்; சமா தானத்தை தேடி அதைத் தொடர்ந்துகொள்".
>
> (சங்கீதம் 34. 13—14)

ஆகையால் மன்னிப்பு என்பதை நாமே பாதுகாத்துக் கொள்ளவேண்டும். அதற்காகத்தான் சிலுவை நமக்குக்

காட்சி அளிக்கிறது. அதன் காட்சியைக் கண்டு தீயவழியில் செல்லாமல் நம்மை நாமே பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

சிலுவையின் கோலம் வெறும் பாவ மன்னிப்புக்கு மட்டும் ஏற்பட்டதன்று அப்பரிசுத்த சின்னம் நியாயத் தீர்ப்புக்கு வழிகாட்டியாகிய இராஜ பாதையுமாகும். நாம் செய்கின்ற பழி பாவங்கள், பல்வகைக் கேடுகள் அத்தனைக்கும் கடைசிக் காலத்தில் நியாயந் தீர்க்கும் சின்னமாகவும் சிலுவை காட்சி அளிக்கிறது எனபதை அறிஞர் தாமஸ் அ கெம்பிஸ் சொல்லுகிறார்

> ஆண்டவர் உலகத்தை நியாயந் தீர்க்க வரும் போது. பரலோகத்தில் சிலுவையின அடையாளம் காணப்படும். பூலோகத்தில் தங்கள் உயிரோடு இருக்கும போது சிலுவையில அறையுண்ட கிறிஸ்துவுக்கு அடங்கியிருந்த சிலுவையின் ஊழியர் தங்கள் நீதிபதியாகிய அவரிடம் மிகுந்த தைரியத்தோடு வருவார்கள்.”

(கிறிஸ்துநாதர் அனுசாரம்)

அறிஞர் கெம்பிஸ் கூறுவது போல அண்டசராசரங்களையும அடக்கியாளும அரசனாக இருக்கட்டும் அலலது அங்குல நிலமிலலாத ஆண்டியாக இருக்கட்டும். அவர்கள் யாவரும் ஆண்டவருள அடக்கமானவர்களே அத்தனைப பேருக்கும் நியாயந்தீர்க்கும பொதுச் சினனம் சிலுவையே!

அந்தப் பரிசுத்தச் சின்னம் இதோ நம் முன்னே காட்சி அளிக்கிறது. அதை நெருங்குவதற்கு நாம் ஏன் பயப்பட வேண்டும்? இப பரந்த உலகத்திலே நமது கடைசிக் காலத்தில யார் துணை இருக்கப் போகிறார்கள். துணை நிற்பது ஒன்றே ஒன்றுதான். நமமைக் கட்டி அணைத்துப் பாவங்களை மனனித்து நமக்கு நித்திய இளைபபாறுதல் அளிக்கப்போவது சிலுவைதானே!

ஆறுதலின அடைககலம

பணத்தைக் கொடுத்து நிலத்தை வாங்கி, நிலத்தை நம்பி வீடு கட்டி, கட்டின வீட்டை வாடகைக்கு விட்டு, வாடகைப்

பணத்தை வட்டிக்கு விட்டு, வட்டிப் பணத்தில் ஆடம்பரமான அலங்காரங்களைப் புனைந்து அழகு பார்க்கிறோமே அந்தப் பணமும் நிலமும் வீடும் நகையும் உயிர் போகும் அந்திக் காலத்தில் ஆறுதல் அளிக்குமா? மறையப் போகும் அல்லது மற்றவர்களிடம் மாறிப்போகும் பொருள்களை நம்பி என்னென்னமோ ஆசைக் கோட்டைகளைக் கட்டும் நாம் நமக்காக நமது பாவங்களுக்காக-எப்போதும் காத்துக் கொண்டிருக்கும் நியாயத் தீர்ப்புச் சின்னமான சிலுவையை மட்டும் மறந்து விடலாமா!

நமது ஆன்மாவிற்குப் பாது காவலும் ஜீவியத்திற்கு வழி காட்டியும் இரட்சண்யத்தின் பீடமும், விரோதிகளிடமிருந்து காப்பாற்றும் கோட்டையும், சோர்வுக்கு ஊக்கமும், சோம்பலுக்கு சுறுசுறுப்பும் பலவீனத்திற்கு வீரமும் துன்பத்திற்கு இன்பமும் உறக்கத்திற்கு விழிப்பும் ஆகிய எல்லாவற்றிற்கும் எல்லாமாகத் துணைபுரியும் தெய்வீகச் சின்னமாம் சிலுவையை மறந்து நாம் எங்கே போய் வாழ முடியும்! நம் பாவங்களைச் சுமந்து கொண்டு எங்கே ஓடினாலும் அங்கே சிலுவை தானே காட்சி அளிக்கும். மரணத்திற்குப் பயந்து பயந்து பதுங்கினாலும், அங்கே பகிங்கரமாகச் சிலுவையே நிற்கும். எங்கே நோக்கினாலும் அங்கும் இங்கும் எங்கும், சர்வ உலகமும் காட்சி அளிக்கும் நீதியின் சின்னம் சிலுவையே!

தாயின் வயிற்றிலிருந்து நாம் மண்ணிலே விழுகின்றபோது எதையும் நம்முடன் கொண்டு பிறந்ததில்லை. ஆனால் நாம் வளர்ந்து படித்துப் பட்டம் பெற்று, பதவிகளையும் ஏற்று பெரு வாழ்வு வாழ்ந்து மகிழ்கின்ற போது உடம்பில் சுமக்கும் பாரம் கொஞ்சமா! கடும் வெயில் காலமாக இருந்தாலும் மேல் நாட்டு பாணியில் உடை அணிந்து உடம்பில் காற்றுக்கூட நுழைய முடியாமல் கழுத்தை வேறு இறுக்கிக்கட்டிக் கழுத்துப்பட்டையை (டை) அணிந்து "காற்று வீசவில்லையே" என்று கவலையும் படுகிறோம். அப்போதும் கௌரவம் குறைந்து விடுமே என்ற பெருமையின் காரணமாக உஷ்ணத்தையும் தாங்கி அவற்றைச் சுமந்து கொள்ளுகிறோம்; பண்டிகை நாட்களிலே துணிமணிகளை வாங்கிக் கொண்டு சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு வருகிறோம் அவைகளை எல்லாம் பாரமாக நாம் நினைப்பதில்லை. நிலையாகாத சுமைகளைத் தாங்

திக் கொள்ள சக்தியும் சந்தோஷமும் அடைகிறோம் ஆனால் என்றும் எப்போதும் துணை நிற்கும் தூய சிலுவையை மட்டும் சுமக்க நாம் ஏன் பின்னடைகிறோம்! ஏன் பின்னடைய வேண்டும் ?

'சிலுவையைச் சுமக்க நமக்கு என்ன தலைவிதி: அதை சுமக்காவிட்டால் என்ன தீமைகள் நேர்ந்துவிடுமா?" என்று நாம எண்ணிவிடலாம். நாம எண்ணுவது போல் நடந்துவிட்டால் தெய்வம் என்று ஒன்று இருப்பது ஏது! ஆம பாரம் குறைவாக இருக்கும் சிலுவை சுமக்க இப்போது நாம தவறிவிட்டால மிகப பெருமபாரமான சிலுவையைக் கட்டாயம் சுமக்க வேண்டிவரும் எனபதை நாம மறந்து விடக் கூடாது. அலுவலகத்திலே அன்றுடம சரி பார்க்காத காகிதக்கட்டுகள் நாளடைவில தேங்கிக் குவிந்து பெரும் கோபுரமாக இருப்பதுபோல ;நமது பாவங்கள் பெரும் பாரமான சிலுவையாக மாறும் போது அதை எப்படிச் சுமக்க முடியும்?

சிலுவையின பாரத்தைத் தூக்க முடியாத விசுவாசியோ போதகரோ அல்லது குருவானவரோ இருக்க முடியாது.

"கிறிஸது பாடுபடவும், மூன்றும் நாளில மரித்
தோரிலிருந்து, எழுந்திருக்கவும வேண்டியதாயிற்று"

லூக்கா 24·26

என்று வேதம் கூறுகிறது அப்படி ஆண்டவரே சிலுவையைச் சுமந்து வேதனைகளை அனுபவித்தாரென்றால நாம என்ன! இதோ சிலுவைதான முதலும முடிவும் எனபதை அறிஞர் தாமஸ் அ. கெமபிஸ் சொல்லுவதைக் கேட்போம்.

'கிறிஸ்துவின் ஜீவிதம முழுவதும், சிலுவையும் மரணமுமாயிருக்க, நீ இளைப் பாறுதலையும் இனபத்தை யும நாடுகிறாயோ உபத்திரவங்களை அனுபவிப்பதைத் தவிர வேறெதையும் நீ தேடுவாயானால நீ மோசம் போவாய்; பூலோகம் ஜீவித முழுவதும் சஞ்சலங்கள் நிறைந்தது. எப்பக்கத்திலும் சிலுவையைத் தவிர வேறே கிடையாது"

(கிறிஸ்து நாதர் அனுசாரம்)

கேட்டோமல்லவா! இனி நாம் என்ன செய்யப் போகிறோம்?

## இட்டாருக்கு இட்ட பலன்

உலக வாழ்க்கையிலே நாம் எத்தனையோ அனுபவங்களைக் காண்கிறோம். இட்டாருக்கு இட்டபலன் என்று சொல்லுவார்கள். அவரவர்கள் செய்த நன்மை தீமைகள் அவரவர்களுக்கு மீண்டும் வந்து சேரும். நாம் ஒருவருக்கு ஒரு சிறு உபகாரம் செய்தால், நாளை அந்த நல்ல மனிதர் நமக்குப் பெரிய உபகாரத்தைச் செய்வதைக் காத்துக் கிடப்பார். நாம் செய்த நன்றி நம்மை வந்து எந்நாளும் நாம் காத்திருக்க வேண்டியதில்லை

"நன்று ஒருவருக்குச் செய்தக்கால் அந்நன்று
என்று தருங்கொல் எனவேண்டா-நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தாந்தருத லால்!!

என்று தமிழ் மூதாட்டி ஔவையின் வாக்கு நமக்கு எடுத்துக் காட்டுகிறது அதுபோல நாம் எதை அவமானம் என்று கருதி அதை நமது வாழ்க்கையிலிருந்து தவிர்த்து விடுகிறோமோ அதே அவமானம் எதிர்பாராத விதமாக மீண்டும் நம்மையே நாடி வந்து சேரும் என்பதை மறந்து விடவும் கூடாது.

ஒரு பெரிய பணக்காரர் இருந்தார் பணக்காரர் என்றால், அவர் பங்களாவும் தோட்டமும், செலவாக்கும் எப்படி இருக்கும் என்பதைச் சொல்லித்தானா தெரிய வேண்டும்!

அவர் தம் பெற்றோர்களோடும் ஒரே குமாரனோடும் சுக வாழ்வு வாழ்ந்து வந்தார் ஒரு நாள் தனவந்தரின் பெருமதிப்பிற்குரிய நண்பர் ஒருவர் வீட்டிற்கு வந்திருந்தார் தனவந்தர் தாய் தந்தையரோடும் மகனோடும் பேசி மகிழ்ந்து கொண்டிருந்தார். நண்பரும் பல விஷயங்களைப் பேசிவிட்டுப் போகும் போது தனவந்தரின் பெற்றோர்களைப் பார்த்து "இந்தக்குரங்குகள் யாவர்?" என்று தனது பாட்டன் மொழியான ஆங்கிலத்தில் கேட்டார் அது மட்டுமல்ல "இந்த அழகான பங்களாவில், அதிலும் பளபளப்பான சோபாவில உன்பெற்றோர்கள் அமர்ந்திருப்பது பங்களாவின் அழகையே கெடுத்து விடு

கிறது." என்று அதையும் அந்நிய மொழிக்குத் தன் மூளையை அடகு வைத்தவர் ஆங்கிலத்திலே சொன்னார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே தனவந்தர், ஆவேசங்கொண்டு சோபாவிலிருந்து குதித்தெழுந்து நண்பரின் கன்னத்தில் ஓங்கி இரண்டு அறை அறைந்து, மடையனே என்னைப் பெற்று வளர்த்துப் பாலூட்டிச் சீராட்டிப் பேரிட்டு வளர்த்த பெற்றோர்களை, நான் வணங்கும் தெய்வங்களையா குரங்கிற்கு ஒப்பிட்டுப் பேசினாய்! மரியாதை தெரியாதவன் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பதை மறந்து விட்டாயா? மூர்க்கனே மரியாதையாக இங்கிருந்து போய் விடு" என்று தன் நண்பனைப் பார்த்துத் துடி துடிக்கக் கேட்டிருப்பார் என்று நினைக்கின்றீர்களா? ஆம்; நமது உள்ளம் அப்படித்தான் எண்ணுகிறது. ஆனால் தாய்மொழியை மறந்து வேற்று மொழியைக் கற்று அறிந்த அறிவல்லவா! அப்படி ஒன்றும் நாம நினைப்பது போல நடந்துவிடவில்லை.

அன்புக்குரிய நண்பர் வந்துபோன மறுநாளே பங்களாவுக்குப் பின்புறமுள்ள தோட்டத்திலிருக்கும், பழைய சாமான் போட்டுவைத்திருந்த அறையைச் சுத்தம்செய்து, அதில் தன் பெற்றோர்களை இருக்கவைத்து ஒரு மணியை அவர்களிடம் கொடுத்து "உங்களுக்குத் தேவையான பொருள்களைக் கேட்க இந்த மணியை அடித்தால் ஆட்கள் கொண்டுவந்து கொடுப்பார்கள்" என்று சொல்லி அறைக்குள் விட்டுப் பூட்டிவிட்டு வந்தார் தனவந்தர் அப்பாடி! பெரிய காரியத்தைச் செய்து முடித்துத் தனக்கு நேர இருந்த பெரிய அவமானத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டார் பரிதாபத்திற்குரியவர்.

நாட்கள் பல கழிந்தோடின. உலகத்திலே எத்தனையோ அதிசயங்கள் நடந்து விடுகின்றன. அந்த அதிசயங்களிலே ஓர் அதிசயம் தனவந்தர் வீட்டிலேயே நடந்துவிட்டது. தனவந்தர் வெளியே போய் மாலை வீடுவந்தவுடன் வேலையாட்கள் வந்து "ஐயா, காலை ஒருவேளை தான் மணியோசை கேட்டது, ஆனால், இதுவரை கேட்கவே இல்லை" என்று சொல்ல, தனவந்தர் பெற்றோர் இருக்கும் அறையைத் திறந்து பார்க்க இருவரும் சோர்ந்து படுத்திருந்தனர். தனவந்தருக்கு விஷயம்

## இட்டாருக்கு இட்ட பலன்

உலக வாழ்க்கையிலே நாம் எத்தனையோ அனுபவங்களைக் காண்கிறோம். இட்டாருக்கு இட்டபலன் என்று சொல்லுவார்கள் அவரவர்கள் செய்த நன்மை தீமைகள் அவரவர்களுக்கு மீண்டும் வந்து சேரும். நாம் ஒருவருக்கு ஒரு சிறு உபகாரம் செய்தால், நாளை அந்த நல்ல மனிதர் நமக்குப் பெரிய உபகாரத்தைச் செய்வதற்குக் காத்துக் கிடப்பார். நாம் செய்த நன்றி நாளை வரும் என்றும் நாம் காத்திருக்க வேண்டியதில்லை

"நன்று ஒருவருக்குச் செய்தக்கால் அந்நன்று
என்று தருங்கொல் எனவேண்டா - நின்று
தளரா வளர்தெங்கு, தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்!!

என்று தமிழ் மூதாட்டி ஔவையின் வாக்கு நமக்கு எடுத்துக் காட்டுகிறது. அதுபோல நாம் ஏதோ அவமானம் என்று கருதி அதை நமது வாழ்க்கையிலிருந்து தவிர்த்து விடுகிறோமோ அதே அவமானம் எதிர்பாராத விதமாக மீண்டும் நம்மையே நாடி வந்து சேரும் என்பதை மறந்து விடவும் கூடாது.

ஒரு பெரிய பணக்காரர் இருந்தார் பணக்காரர் என்றால், அவர் பங்களாவும் தோட்டமும், செலவாக்கும் எப்படி இருக்கும் என்பதைச் சொல்லித்தானா தெரிய வேண்டும்!

அவர் தம் பெற்றோர்களோடும் ஒரே குமாரனோடும் சுக வாழ்வு வாழ்ந்து வந்தார் ஒரு நாள் தனவந்தரின் பெருமதிப்பிற்குரிய நண்பர் ஒருவர் வீட்டிற்கு வந்திருந்தார் தனவந்தர் தாய் தந்தையரோடும் மகனோடும் பேசி மகிழ்ந்து கொண்டிருந்தார். நண்பரும் பல விஷயங்களைப் பேசிவிட்டுப் போகும் போது தனவந்தரின் பெற்றோர்களைப் பார்த்து, "இந்தக்குரங்குகள் யாவர்?" என்று தனது பாட்டன் மொழியான ஆங்கிலத்தில் கேட்டார் அது மட்டுமல்ல "இந்த அழகான பங்களாவில், அதிலும் பளபளப்பான சோபாவில் உன்பெற்றோர்கள் அமர்ந்திருப்பது பங்களாவின் அழகையே கெடுத்து விடு

றது." என்று அதையும் அந்நிய மொழிக்குத் தன் மூளையை அடகு வைத்தவர் ஆங்கிலத்திலே சொன்னார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே தனவந்தர், ஆவேசங்கொண்டு சோபாவிலிருந்து குதித்தெழுந்து நண்பரின் கன்னத்தில் ஓங்கி இரண்டு அறை அறைந்து, மடையனே என்னைப் பெற்று வளர்த்துப் பாலூட்டிச் சீராட்டிப பேரிட்டு வளர்த்த பெற்றோர்களை, நான் வணங்கும் தெய்வங்களையா குரங்கிற்கு ஒப்பிட்டுப் பேசினாய்! மறியாதை தெரியாதவன் அன்னையும் பிதாவும் முன்னேறி தெய்வம் என்பதை மறந்து விட்டாயா? மூர்க்கனே மரியாதையாக இங்கிருந்து போய் விடு" என்று தன நண்பனைப் பார்த்துத் துடி துடிக்கக் கேட்டிருப்பார் என்று நினைக்கின்றீர்களா? ஆம்; நமது உள்ளம் அப்படித்தான் எண்ணுகிறது. ஆனால தாய்மொழியை மறந்து வேற்று மொழியைக் கற்று அறிந்த அறிவாளலவா! அப்படி ஒன்றும் நாம நினைப்பது போல நடந்துவிடவில்லை.

அன்புக்குரிய நண்பர் வந்துபோன மறுநாளே பங்களாவுக்குப் பின்புறமுள்ள தோட்டத்திலிருக்கும், பழைய சாமான போட்டுவைத்திருந்த அறையைச் சுத்தமசெய்து, அதில் தன் பெற்றோர்களை இருக்கவைத்து ஒரு மணியை அவர்களிடம் கொடுத்து "உங்களுக்குத் தேவையான பொருள்களைக் கேட்க இந்த மணியை அடித்தால ஆட்கள கொண்டுவந்து கொடுப்பார்கள்" என்று சொல்லி அறைக்குள் விட்டுப பூட்டிவிட்டு வந்தார் தனவந்தர் அப்பாடி! பெரிய காரியத்தைச் செய்து முடித்துத் தனக்கு நேர இருந்த பெரிய அவமானத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டார் பரிதாபத்திற் குரியவர்.

நாட்கள் பல கழிந்தோடின. உலகத்திலே எத்தனையோ அதிசயங்கள் நடந்து விடுகின்றன அந்த அதிசயங்களிலே ஓர் அதிசயம் தனவந்தர் வீட்டிலேயே நடந்துவிட்டது. தனவந்தர் வெளியே போய் மாலை வீடுவந்தவுடன வேலையாட்கள் வந்து, "ஐயா, காலை ஒருவேளை தான் மணியோசை கேட்டது, ஆனால், இதுவரை கேட்கவே இல்லை" என்று சொல்ல, தனவந்தர் பெற்றோர் இருக்கும் அறையைத் திறந்து பார்க்க இருவரும் சோர்ந்து படுத்திருந்தனர். தனவந்தருக்கு விஷயம்

இட்டாருக்கு இட்ட பலன்

உலக வாழ்க்கையிலே நாம் எத்தனையோ அனுபவங்களைக் காண்கிறோம். இட்டாருக்கு இட்டபலன் என்று சொல்லுவார்கள். அவரவர்கள் செய்த நன்மை தீமைகள் அவரவர்களுக்கு மீண்டும் வந்து சேரும். நாம் ஒருவருக்கு ஒரு சிறு உபகாரம் செய்தால், நாளை அந்த நல்ல மனிதர் நமக்குப் பெரிய உபகாரத்தைச் செய்வதற்குக் காத்துக் கிடப்பார். நாம் செய்த நன்றி நன்றாக வரும் என்றும் நாம் காத்திருக்க வேண்டியதில்லை.

"நன்றி ஒருவருக்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா - நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தாந்தருத லால்!!

என்று தமிழ் மூதாட்டி ஔவையின் வாக்கு நமக்கு எடுத்துக் காட்டுகிறது. அதுபோல நாம் எதை அவமானம் என்று கருதி அதை நமது வாழ்க்கையிலிருந்து தவிர்த்து விடுகிறோமோ அதே அவமானம் எதிர்பாராத விதமாக மீண்டும் நம்மையே நாடி வந்து சேரும் என்பதை மறந்து விடவும் கூடாது.

ஒரு பெரிய பணக்காரர் இருந்தார். பணக்காரர் என்றால், அவர் பங்களாவும் தோட்டமும், செலவாக்கும் எப்படி இருக்கும் என்பதைச் சொல்லித்தானா தெரிய வேண்டும்!

அவர் தம் பெற்றோர்களோடும் ஒரே குமாரனோடும் சுக வாழ்வு வாழ்ந்து வந்தார். ஒரு நாள் தனவந்தரின் பெருமதிப்பிற்குரிய நண்பர் ஒருவர் வீட்டிற்கு வந்திருந்தார். தனவந்தர் தாய் தந்தையரோடும் மகனோடும் பேசி மகிழ்ந்து கொண்டிருந்தார். நண்பரும் பல விஷயங்களைப் பேசிவிட்டுப் போகும் போது தனவந்தரின் பெற்றோர்களைப் பார்த்து. "இந்தக்குரங்குகள் யாவர்?" என்று தனது பாட்டன் மொழியான ஆங்கிலத்தில் கேட்டார். அது மட்டுமல்ல "இந்த அழகான பங்களாவில், அதிலும் பளபளப்பான சோபாவில உன்பெற்றோர்கள் அமர்ந்திருப்பது பங்களாவின் அழகையே கெடுத்து விடு

கிறது.'' என்று அதையும் அந்நிய மொழிக்குத் தன் மூளையை அடகு வைத்தவர் ஆங்கிலத்திலே சொன்னார்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே தனவந்தர், ஆவேசங்கொண்டு சோபாவிலிருந்து குதித்தெழுந்து நண்பரின் கன்னத்தில் ஓங்கி இரண்டு அறை அறைந்து, மடையனே என்னைப் பெற்று வளர்த்துப் பாலூட்டிச் சீராட்டிப் பேரிட்டு வளர்த்த பெற்றோர்களை, நான் வணங்கும் தெய்வங்களையா குரங்கிற்கு ஒப்பிட்டுப் பேசினாய்! மரியாதை தெரியாதவன் அன்னையும் பிதாவும் முன்னேறி தெய்வம் என்பதை மறந்து விட்டாயா? மூர்க்கனே மரியாதையாக இங்கிருந்து போய் விடு'' என்று தன் நண்பனைப் பார்த்துத் துடி துடிக்கக் கேட்டிருப்பார் என்று நினைக்கின்றீர்களா? ஆம்; நமது உள்ளம் அப்படித்தான் எண்ணுகிறது. ஆனால் தாய்மொழியை மறந்து வேற்று மொழியைக் கற்று அறிந்த அறிவல்லவா! அப்படி ஒன்றும் நாம நினைப்பது போல நடந்துவிடவில்லை.

அன்புக்குரிய நண்பர் வந்துபோன மறுநாளே பங்களாவுக்குப் பின்புறமுள்ள தோட்டத்திலிருக்கும், பழைய சாமான் போட்டுவைத்திருந்த அறையைச் சுத்தம செய்து, அதில் தன் பெற்றோர்களை இருக்கவைத்து ஒரு மணியை அவர்களிடம் கொடுத்து ''உங்களுக்குத் தேவையான பொருள்களைக் கேட்க இந்த மணியை அடித்தால் ஆட்கள் கொண்டுவந்து கொடுப்பார்கள்'' என்று சொல்லி அறைக்குள் விட்டுப பூட்டிவிட்டு வந்தார் தனவந்தர் அப்பாடி! பெரிய காரியத்தைச் செய்து முடித்துத் தனக்கு நேர இருந்த பெரிய அவமானத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டார் பரிதாபத்திற குரியவர்.

நாட்கள் பல கழிந்தோடின உலகத்திலே எத்தனையோ அதிசயங்கள் நடந்து விடுகின்றன. அந்த அதிசயங்களிலே ஓர் அதிசயம் தனவந்தர் வீட்டிலேயே நடந்துவிட்டது. தனவந்தர் வெளியே போய் மாலை வீடுவந்தவுடன் வேலையாட்கள் வந்து, ''ஐயா, காலை ஒருவேளை தான் மணியோசை கேட்டது, ஆனால், இதுவரை கேட்கவே இல்லை'' என்று சொல்ல, தனவந்தர் பெற்றோர் இருக்கும் அறையைத் திறந்து பார்க்க இருவரும் சோர்ந்து படுத்திருந்தனர். தனவந்தருக்கு விஷயம்

புரிந்துவிட்டது. அதாவது மணியைக் காணவில்லை. எல்லாரையும் அழைத்துக் கேட்டார். எல்லாரும் தெரியாது என்று சொல்லிவிட்டார்கள். கடைசியாகத் தன மகனைக் கூப்பிட்டுக் கேட்டார். அவன் சொன்னான்: "ஆம் அப்பா, நான்தான் அந்த மணியை எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன். ஏனென்றால் நீங்களும் அம்மாவும் கிழவர்களாகிவிட்டால் உங்களையும் அறையில் போட்டு மணியைக் கொடுக்க வேண்டாமா! அதற்காகத்தான பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன" என்று சொன்னான

**தனவந்தர் தலை கவிழ்ந்தார்**

அந்த நிமிஷத்திலிருந்தே தன பெற்றோர்களை முன்னைவிட அதிகப் பாசத்தோடும் பரிவோடும் அவர்கள் இறக்கும் வரைக்கும் அன்பு காட்டி ஆதரித்து வந்தார்.

ஆகையால் வாழ்க்கையில நாம் அதிகக் கவனத்தோடு நடத்து கொள்ளவேணடும். வாழ்க்கையில் கஷ்டம் செலுத்துகிற நாம், அந்த வாழ்க்கையில ஏறபடும் இன்பதுன்பங்களுக்கு நமக்காகச் சிலுவையிலே மாண்ட கிறிஸ்துவுக்கு மட்டும துரோகம செயயலாமா? அவர் தூக்கிச் சுமந்த சிலுவையை நாம சுமக்கவேண்டாமா? இபபோது சுமபபதை அவமானம எனறு கருதினால், நாளை தாமாகவே அந்த அவமானம் நாடிவரும்போது ஓடி ஒளிந்துகொள்ள முடியுமா?

**சிலுவைக் கோலம்:**

ஆண்டவரின சிலுவைக்கோலம நம சிந்தையைத் தூய்மைப் படுத்துவதாகும நமது ஆசைகள் பலபல. அதில ஒரு பகுதியைச் சிலுவைக்காக ஒதுக்குவோம. நோக்கங்கள் அநேகம அதில ஒரு சந்தர்பபத்தைச் சிலுவைக்காக அளிப்போம. நியாயந்தீர்க்கும கடைசி நாளில், நாம குற்றமறறவர்களாக ஆண்டவரின் நல்ல பிள்ளைகளாகச் சிலுவையைச் சுமந்து, சுமந்து பழக்கபபட்ட பக்தர்களாக இருக்க நம்மை நாமே ஆயத்தம் செய்துகொள்ள வேண்டாமா?

உலக மகான்களின் மதகுருக்களின் — கடவுள்களின் வரலாறுகளைப் பார்க்கினறபோது பக்தர்கள்தான் பாரம் சுமந்து

அவர்கள் வழிபடும் கடவுள்களை அடைந்தார்கள் என்பது வேதங்கள் கூறும் செய்தி. ஆனால், கிறிஸ்துவைப் பொருத்த மட்டில் நாம் அவரை அடைய பாரம் சுமக்கவில்லை. நமக்காக அவர் சிலுவைப்பாரம் சுமந்தார். என்னே கிறிஸ்து வின் தியாகம்!

நியாயந்தீர்க்கும் நாளில் குற்றவாளிகளைப் போல் ஓடி ஒளிந்துகொள்ளாமல் ஆண்டவரின் அருகில் அன்புக்கரம் பற்றி ஆனந்தமாக இருக்கவேண்டாமா? அதற்குச் சிலுவை யின கோலம நமது இதயங்களிலே பதியவேண்டாமா? சிலு வையின நிழல நம் உடல் முழுதும பரவிப் பரிசுத்தம் பெற வேண்டாமா?

தமிழ்த் தென்றல் திரு வி. க. சிலுவையின் மாட்சியை நமக்குக் காட்சிப படுத்திக் காட்டுகிறார்.

"தரையினில உதித்த கோலம்
 தையலகை வளர்ந்த கோலம
வரையினில இவர்ந்த கோலம்
 வனத்தினில நடந்த கோலம்
திரைகடல் கடந்த கோலம்
 சிலுவையில பொலிந்த கோலம்
உறைமனைய ஜெபத்தால் பெற்றேன
 உத்தம! போற்றி போற்றி"

—கிறிஸ்துவின் அருள் வேட்டல்.

சிலுவைக் கோலம் சாதாரணமானதா? இந்த மண்ணிலே, மங்கையின கையிலே, மலையிலே, கானகத்திலே, அலைகட லிலே, பூமியில் பிறந்து, தாய்மடியில் வளர்ந்து, மலைகளில் திரிந்து, கானகத்தில் நடந்து, கடலைக் கடந்து, கடைசியில் சிலுவையில நமக்காக உதிரக் காட்சி அளிக்கும் கோல மல்லவா! அந்தக் கோலத்தைச் சாதாரணமாகப் பார்க்க முடியுமா? அலலது அந்தச் சேதியைக் கேட்கத்தான் முடியுமா? முடியும்! எப்போது முடியும்? ஜெபித்து, ஜெபித்து, உள்ளம் உருகி உருகி அழவேண்டும். அப்படித்தான்.

"விளக்கறியா இருட்டறையில் கவிழ்ந்து கிடந்தழுது
விம்முகின்ற குழவியினு மிகப்பெரிதுஞ் சிறியேன்.
அளக்கறியாத் துயர்க்கடலில் விழுந்து நெடுங்காலம்
அலைந்தலைந்து மெலிந்த துரும்பதனின் மிகத்துரும்பேன்.
கிளக்கறியாக் கொடுமையெலாங் கிளைத்த பழுமரத்தேன்;
கெடுமதியேன் கடுமையினேன் கிறிபேசும் வெறியேன்
களங்கறியாப் புவியிடை நாணேன் பிறந்தேனந்தோ,
கருணை நடத்தரசே நின்கருத்தை யறியேனே."

என்று மனம் உருகி உருகி அழுதார் இராமலிங்க அடிகள். அப்படி நாமும் அழவேண்டாமா?

எளிய குடும்பத்தில் பிறந்து, தச்சுத் தொழிலாளியாகப் பணிபுரிந்து, பன்னிரண்டு வயதில் தேவாலயத்தில் காணாமற் போய்விட்டு யாருக்கும் தெரியாமல் தெய்வ வரப்பிரசாதத்தால் வளர்ந்து, முப்பது வயதிலே மக்களின் கண்களுக்குக் காட்சி அளித்து மக்களின் துயரைப் போக்க, பாவிகளின் பாவத்தைப் போக்க சிலுவையைச் சுமந்த சிலுவைநேசனை மறக்கலாமா! அவர் சுமந்த சிலுவையை மறக்கலாமா!

அநேக இன்பங்களினால் மகிழ்வதைக்காட்டிலும் கிறிஸ்து நாதருக்காகக் கஷ்டங்களை அனுபவிப்பதே நமக்குப் பிரியமானதாயும், நாமாகவே தெரிந்துகொள்வதாகவும் இருக்க வேண்டும். அப்போதுதான் நாம் கிறிஸ்துநாதரின் கருணையைப் பெற்றுப் பரிசுத்தவான்களின் சாயலாகத் தெரியப்படுவோம். நம்முடைய மேன்மையையும், தேர்ச்சியையும், இன்பங்களையும், ஆறுதல்களையும், அனுபவிப்பது பெரிதன்று. கடுமையான தொல்லைகளையும், பாடுகளையும் சகிப்பதில் அடங்கி இருக்கிறது

பாடுகளைவிட மேலானதும், மனிதனுடைய ஆன்மீக இரட்சிப்புக்கு அநுகூலமானதுமான வேறு ஏதாவது அதிசயிக்கத்தக்கப் பொருள் இந்த அவனியில் இருக்குமானால், கிறிஸ்துப்பெருமான் கட்டாயம் அதைத் தம்முடைய உபதேசத்திலும், நடக்கையிலும் நமக்கு வெளிப்படுத்தி யிருப்பாரே! ஆனால், அவரோ தம்மைப் பின்பற்றின தம்முடைய சீடர்களுக்கும், நம்மைப் பின்பற்ற விரும்பும் எல்லாருக்கும்,

"ஒருவன் என் பின்னே வர விரும்பினால், அவன் தன்னைத் தான் வெறுத்து, தன் சிலுவையை அனுதினமும் எடுத்துக்கொண்டு என்னைப் பின்பற்ற வேண்டும்."

(லூக்கா, 9-23)

என்ற ஆணையை அளிக்கிறார் ஆண்டவர். அதை மிக நன்றாக உணர்ந்த நாம் சிலுவையே கதியாக—அதன் நிழலே இருப்பிடமாக அதன் துணையே நமக்கு ஜீவியாக இருக்கவேண்டும்.

அன்று எல்லாத் துன்பங்களுக்கும் பொறுத்திருந்தார் கிறிஸ்து. அதன் விளைவு அவர் புகழ் உலகம் முழுவதும் பேரொளி வீசிப் பரவி விட்டது ஆம் ;

"ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்"

என்று வள்ளுவப் பெருந்தகை கூறினாரே அது பொய்யாகுமா? அப்படி நாமும் துன்பங்களைத் துச்சமாக மதித்து துயரங்களைத் தூக்கி எறிந்து எதிரேவரும் இடர்களை எட்டித் தள்ளி ஏறு நடை போட்டுப பாரமிகு சிலுவையை வீர மனத்தோடு தூக்கிச் செல்ல வேண்டுவது நமது கடமையல்லவா! கிறிஸ்துபிரான் சுமந்த சிலுவை உலக அரங்கிலே அன்பின் சின்னமாக—ஆராதிக்கும் சின்னமாக —உலகப் பொதுச் சின்னமாகக் காட்சி அளிக்கிறதல்லவா '

வலலமையின் வாரிசு

- o சிலுவை ; அது ஜீவஊற்றின் பெரும் பகுதி!
- o சிலுவை . அது துயர்தீர்க்கும் அருமருந்து!
- o சிலுவை ; அது போற்றிப் பணியும் புவிச்சின்னம்!
- o சிலுவை ; அது எல்லா உண்மைகளையும்

நியாயத் தீர்ப்பையும் அளிக்கும் நீதிமன்றம்! சிலுவை நேசன் நமக்கு எல்லாவித வலலமையையும் அன்பையும் அளிப்பார். அதற்காகத் தேவன தமது திருக்குமாரனைச் சிலுவையில் காட்சிப் படுத்தினார். அந்தக் காட்சியைக் கண்டவுடன் தீமைகள் அகலும், சக்திகள் மீண்டும்வரும்.

நமது தேவைகள் தேவ ஆசீர்வாதத்தால் நிறைவேற்றப்பட்டு அணைத்துக்கொள்ளும் என்பதை கவிஞர் ஜே. பி. தாயர் (J. B. Thayer) அவர்கள்,

All Evidence we need to know
Is that our God was loved us so
He gave his son upon the cross
To save us from eternel loss

(God speak to Modren Man)

என்று சிலுவையின் தனிப்பெருமையைப் புகழ்ந்திருக்கிறார். ஆகையால் நாம் எங்கே இருந்தாலும் சிலுவைதான் நமக்குக் கதி. நாம் எங்கே ஓடி மறைந்து கொண்டாலும் இந்த ஆக்கினைகள் நம்மைவிட்டு அகலாது. அப்படி இருப்பது தான் நீதியும் நியாய முமாகும். இன்னல்களும் இடுக்கண்களும் வரும்போது அவைகளைப் பொறுமையுடன் சகிக்க வேண்டுமே தவிர, வேறு நெறி இல்லை என்பதை நாம் உறுதியுடன் அறிந்து கொள்ளவேண்டும். ஆகவே நாம் சிலுவையின் மேல்வைத்த அன்புக்குப் பக்திக்கு பெருமை தரக் கூடியதாகும் அதுவே நமது ஆன்ம இன்பமாறுதலுமாகும்.

"முறையோடு அரசாண்ட முடியரசருந் தாம்
முழுமை நெறி தழைப்பத் தறகே சின்னங் கண்டார்
குறையான கொள்கைவழி செல்வோர் கூட
குழிகாணும் கொடிநாட்டி குழப்பம் செய்தார்.
மறைவான பலவழிகள் தாங்காட்டி மக்கள்
மனத்திடையே மாறுதல்கள் கண்டார் நொந்தார்
நிறைவொன்றும் வரவில்லை நினைத்தால் போதும்
நிமலனது சிலுவையே நிலையா குமமே!"

(அருமை)

# புவிக்கோர் பொதுமறை

நாம் வாழ்ந்துகொண்டிருப்பது விஞ்ஞான யுகம் என்று கூறுவது மிகையாகாது. நிமிடத்திற்கு நிமிடம் வியக்கத் தக்க பல அரிய உண்மைகளும் விதவிதமான கண்டுபிடிப்புகளும் நாளுக்குநாள் காட்சிப்படுத்தப்படுகின்றன. பேராற்றல் படைத்த படைப்புகள் பலப்பல தடையின்றி தோன்றுமாறு செய்யும் சுறுசுறுப்பான உலகில் நாம் உயிர் வாழ்ந்துகொண்டிருக்கிறோம்.

கண்மூடிக் கண்திறப்பதற்குள் கண்ணுக்கெட்டாத தூரம் பிரயாணம் செய்யக் கூடிய போக்குவரத்துச் சாதனங்கள், உலகத்தையே பன்முறை சுற்றிவரக்கூடிய வானவெளிக் கப்பல்கள், ஆள் இல்லாமலேயே சுற்றிவருமான ஊர்திகள், சாப்பிடாமலே பசியைப் போக்கக் கூடிய ஊசி மருந்துகள், உறக்கமே வராமல் தடுப்பதற்கும், உறக்கம் அற்றவர் அயர்ந்து உறங்குவதற்கும், மிஞ்சினால் என்றென்றைக்கும் நித்தியத் தூக்கமாகத் தூங்குவதற்குமான மாத்திரைகள், இன்னபிற எத்தனையோ அரிய பெரிய பொருள்கள் பலவாம் மனிதன் தன் அற்புதத்திறத்தால்—ஆற்றலால் இந்த அவனியில் ஆக்கி முடித்துவிட்டான்; ஆக்கியும் வருகிறான். முடிவாகக் கூறுவதாயின் உலகத்தில் மனிதனால் ஆக்கச் சக்தியனைத்தும் பெருகி வருகின்றன என்றுங்கூட கூறிவிடலாம். ஆக்க சக்திகளுக்கும் அறிவுச் சக்திகளுக்கும் மனிதனே மூலமும் முடிவுமாக இருக்கிறான் என்ற எண்ணத்தை மனிதன் உலகில் பரப்பி வருகிறான் என்று கூறுவதாயின் அது மிகையும் ஆகாது. மேற்கூறிய எண்ணம் எவ்வளவு உண்மை என்பதை உலகம் போகின்ற போக்கைக் கூர்ந்து கவனிப்போமாயின் நமக்குள் நாம் ஒவ்வொன்றாக விளங்கிக் கொள்ளக்கூடும்.

தன்னுடைய சக்திக்கு மீறிய அல்லது தன் நிலைக்கு அப்பாற்பட்ட ஒரு செயலை—பெருநிலையை மனிதன் செய்தும் அடைந்தும்விட்டால் "தன்னைவிட ஆற்றல் படைத்த ஒருவன்

இவ்வுலகில் இல்லை இருக்கவும் முடியாது; இருக்கவும் கூடாது" என்ற மனநிலை அப்பாவி மனிதனுக்கு ஏற்பட்டு விடுகிறது. அவ்வாறே முன்னைவனைவிட அதிகச் சக்தி பெற்ற பின்னவனும் நினைக்கிறான். ஆனால் அவையாவும் வீண் துன்பங்களே என்பதை மனிதன் சிறிதேனும் சிந்திப்பதே இல்லை.

இயற்கையின பயனை இயற்கையின் வாயிலாக நுகர்ந்து இன்பந் துய்ப்பதற்கும், இயற்கையின் இயலபோடு பொருந் தியோ—அலலது இயற்கையின் இயக்கத்தை மாற்றி யமைத்தோ மனிதன தனக்குத் தேவைப்படும பயனை நுகர் வதால் எத்துணைச் சீர்கேடுகள் அவனுக்கு உண்டாகின்றன எனபதையும காண்கிறோம். ஒரு பொருளால் நாம் "எதிர் நோக்கும் நன்மையைப் போலவே அப்பொருளால் தீமையும் உள் தோன்றுகிறது எனபதை நாம் அறவே மறந்து விடுகிறோம்.

மனிதனுடைய ஆக்கச் சக்திகள் தன நிலையைக் க அவற்றின உண்மை உருவங்கள வெளிப்பட்டு, அவற்ற அவ னுக்கும் மற்றவர்களுக்கும் கேடுகள் விளைகின்றபோதுதான், தன் சுய உணர் பெறுப் பாத்திரமாகிறான அப்போது அவன் புரிந்து கொளவது என்ன? தனனுடைய சகதிகளுக்கும் சாதனைகளுக்கும் அப்பாறபட்ட ஒரு மாபெரும சக்தி நம்மால் அறியக்கூடாத அளப்பரிய ஒரு சக்தி இருப்பதாகக் கருது கிறான கருதிய காலத்தும், அது ஓர் அற்புதச் சக்தி அச் சக்தியே மனம், வாக்கு காயமாகிய முக்கரணங்களுக்கும் எட்டாத ஒரு சக்தி, உலகையும் உலக உயிர்களையும் இயக்கு விக்கும ஒரு சூத்ரதாரி. மண்ணுக்கும் விண்ணுக்கும எட்டாத உன்னதமான இடத்தில் இருந்து அருளாட்சி புரிகிறான்; அங் கும் இங்கும் எங்கும் நிலைத்து நின்று நித்திய பரிபூரணமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான்; எவ்வுயிர்க்கும, எப்பொரு ளுக்கும் எத்திசைக்கும் அவனே வாழ்வும் வழிகாட்டியும். வகையாளனுமாக இருக்கிறான்; ஓடும் நதியின் வேகத்திலும் வீசும் காற்றின் தன்மையிலும் எரியும் நெருப்பின் ஒளியினிலும், உண்மையுமாய், காற்றாய், புனலாய்க் கனலாய்க்காட்சி அளிக் கிறான் என்பதை மறந்தே விடுகிறான்.

மனிதன் தான் கட்டிய வீடு, சேர்த்த பணம், ஆக்கிய பொருள்கள், காடு கழனி-மாடு மனை அத்துணைக்கும் ஏகச் சக்ராதியாகக் காட்சி அளிக்கும் அவன், "எல்லாவற்றிற்கும் காரண கர்த்தாவாகத் தானுகை இருக்கும் போது தன்னை யார் என்ன செய்துவிட முடியும்?" என்ற ஆணவம் மனத்துள் நிலைக்கும் போது, பிறிதொரு சக்தி இருப்பதாகவோ அதுவே தனனை இவ்வாறு இயக்குவதாகவோ அவன் உள்ளம் ஒப்புக் கொள்ளவதில்லை

இவ்வாறு நினைக்கின்ற மாந்தர்கள் பெருகி, அவர்களுடைய ஏதேச்சாதிகாரத்தனம் பரவி, அதன் விளைவாக மானிட உயிர்களுக்கும் உடைமைகளுக்கும் பேராபத்து விளைகின்ற போது தான் மனிதன், தான செய்த தவறுகளை நினைக்கின்ருன அப்படி நினைக்கக்கூடிய ஒரு சந்தர்ப்பத்தைச் சமயத்தை நினைவு படுத்தி அறப மனிதனை அழிவு பாதையிலிருந்து விலக்கி ஆண்டவரின அன்பு வழியிலே அழைத்துச் செல்வதே வேதம்.

தன அந்திய காலத்தில்தான் மனிதன் வேதத்தை தேடுகிருன அப்போதுதான, தனக்கு மேலும் ஒரு சக்தி இருப்பதாகவும் நம்புகிருன அத்தகைய மனிதர்களை விலக்கி இனி வரும மக்கள் சமுதாயததிற்கு வழிகாட்டுகிருர் திரு. வி க.

> "அறத்தின இயலையும அன்பின் இயலையும் ஆய்ந்தளந்தேன்
> திறத்தைத் தெளிகிலேன் சிறறக் கொலைஞரின் தீச் செயலைப்
> பொருத்தருள செய்த புனிதம நினைவில் புகப புகவும
> அறத்தனபு நீ யெனறறிந்தேன் கிறிஸ்து என் ஆருயிரே"
>
> (கிறிஸ்துவின அருள் வேட்டல்)

எனனதான் அறத்தையும் அன்பையும் ஆராய்ந்து ஆராய்ந்து அறிவு தெளிந்தாலும, அதற்கென்று ஒரு திறமை இருப்பதை மறந்து விடுகிறோம. கள்ளருக்கும், கடுஞ்சொற்காரர்களுக்கும் கோபக் குரல கொடுத்துக் கொடுமை வழி அவனை அனுப்ப ஆவேசம கொள்ளுகிறோம். அது நனறு? ஆனுல் மனனிக்கும் தனமைபெற்ற கிறஸ்து நாதரின அறத்தின் திறத்தைக் கண்ட

பிறகும் நாம் மனம் திருந்தாமல், உண்மை அறத்தையும், அன்பையும் கடைப் பிடிக்காமல் இருக்க முடியவில்லை என்றால் நாம் ஜீவித்து என்ன பயன்?

பாவங்களின் தொகுதி அடங்காப் பிடாரியைப் போன்று தலைவிரிகோலம் கொண்டு கட்டு மீறி ஆடி, ஆற்றல் அடங்கிச் சுருங்கும் காலத்து நம் வாழ்நாளின் இறுதி நெருங்கும் போது தானா நமது அறியாமைகளுக்கு ஆணையிட்டு, ஆன்ம உணர்வு நம்முள் பெருக ஓர் அழிவில்லாத அரசாட்சி நடத்தும் ஓரே சக்தி தேவன் என்பதைப் புரிந்துகொள்ள அறிவு சாமதிக்கிறது. அதனைப் புரிந்து கொள்வதற்கு முன்னால் நாம் எந்நிலையில் வாழ்கிறோம்? சிந்தித்து உணர்ந்தோமா? தென்னாட்டு காந்தி திரு வி. க. விளக்குகிறார்.

‘ கள்கொலை காமம் களவு பொய்தீய குறை கழிந்து
தள்ளும வழிகளைச் சுற்றினர் பலபேர் துணியிலே
பள்ளிய படியபாய பரவின வாழ்வில் படிவதற்குக்
கொள்ளு மனமே கொலைஞரை மன்னித்த கோவடியே”
(கிறிஸ்துவின் அருள் வேட்டல்)

வேதம என்று சொல்லுகின்ற போது நம மனக் கண் முன் நிற்பன பெருமபாலும சமயஙகளும் அவற்றைப் பரவச் செய்த ஆசாரியர்களின உருவங்களுமேயாம். உலகில தோன்றி வளர்ந்து, பரந்து, மக்கள் பலராலும் பாராட்டபபட்டு வநத சமயங்களும் அவற்றின கொள்கைகளும அவற்றுள் தோனறிய வேதங்களும பல ஆயினும், அவற்றுள் பெரும்பாலானவை இன்று போற்று வாரின்றி மறைந்தொழிந்தன என்றுங் கூறலாம். அச்சமயங்களைத் தோற்றுவித்த சமயாச்சாரியர்களின் தோற்றமும் முடிவும் வரலாறுகளும் பிறவும் ஓரளவு நமக்குக் கிடைக்கினறனவே யன்றித் திட்ட வட்டமாக அவற்றை அறிய முடிவதில்லை.

பழங்காலத்து நிகழ்ச்சிகளை எழுதிய குறிப்புகளைச் சீர் தூக்கிப் பார்க்கின்றபோது எந்த வேதமும்—எந்த மதமும்—எந்த மதக் குருவின் வரலாறும் நம் ஆராய்ச்சிகளுக்குத் தெளிவுபெற அகப்படுவதில்லை என்றே கூறலாம் ஆனால் கிறிஸ்து வேதத்தை உண்மையான கண் கொண்டு பரந்த நோக்கத்

தோடு, நீதியே உருவான எண்ணத்தோடு பார்க்கின்றபோது பல உண்மைகள் ஆதாரத்தோடும் ஆரம்பித்து, இற்றை நாள் வரை நிகழும் ஆண்டு குறிப்புகளோடும் நமக்கு வரையறுத்து கூறப்பட்டிருக்கின்றன அந்தச் சரித்திரச் சம்பவங்களைப் படித்தும் — நினைத்தும பார்க்கினறபோது, வந்த — வளர்ந்த — இருக்கின்ற வேதங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றபோது, காட்சிப் படுத்தக்கூடிய நிலைகளை நெஞ்சத்திலவைத்து, நீதி யின் பாதையிலே நேர்மையோடு வழி நடத்திச் செல்லும் வேதங்களின் முன்னணியில் காட்சி அளிபபது கிறிஸ்து வேதமே எனபதை உலக அறிஞர்கள் ஒப்புக் கொள்ளு கிறார்கள்.

சரித்திரத்தைப படைத்த சகாப்தம்

சரித்திரம எனபது வரலாறறுச் சிறபபுகள், அன்று நடந்த அதிசய நிகழ்ச்சிகள், தோனறிய மகானகள் அரசர் களின ஆரம்ப முடிவுக் காலங்கள் ஆகிய இவைகளையும் எதிர்கால நாட்டு மக்களுக்கு உணரவைப்பதே ஆகும. வர லாறு அல்லது சரித்திரச்சிறப்புகளின் விளக்கங்களை ஓர் ஆட்சி யின், அரசரின், ஆரம்பத்திலிருந்தோ அல்லது அந்நாட்டில் நடந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற நிகழ்ச்சிகளின், ஆரம்பத்தி லிருந்தோ மதக் குருக்களின் பிறப்பிலிருந்தோ, மகான்கள் தோன்றிய காலத்திலிருந்தோ உலக சகாப்தங்களை கணக்கிட்டு வந்திருக்கிறார்கள் சரித்திர ஆசிரியர்கள்.

உரோமானிய நாட்டு வரலாற்றை நாம் படிக்கின்றபோது அவர்கள் கணக்கிட்ட ஆண்டு உரோமானிய நகரைத் தோற்றுவித்த ஆண்டிலிருந்தே தொடங்குவதை உணரலாம். வரலாறறு ஆசிரியர்கள் குறிப்பிட்டிருப்பதுபோல் உரோமானிய நகரைத் தோறறுவித்த கி. மு. 753ஆம் ஆண்டிலிருந்து தங்கள் சகாம்தத்தை ஆரமபிததிருக்கிறார்கள் என்பது தெளிவு

கிரேக்க வரலாற்றை எடுத்துக் கொண்டால் நம் கண் முன்னே காட்சி அளிக்கும் ஒரே உருவம் மாவீரன் அலெக் ஸாணடர். கிரேக்க சாம்ராஜ்யத்தை விரிவு படுத்துவதற்காக அவன் மேற்கொண்ட முயற்சிகள் சீரும் சிறப்பும் பெற்றவை. கிரேக்க நாட்டின் எதிர்கால வாழ்விற்கு அம் மாவீரன் பட்ட

துன்பங்கள் ஏற்றுக்கொண்ட இன்னல்கள் எண்ணி முடியாதன.

இருபதுவயதே கொண்ட தன் குமாரனை அலெக்ஸாண்டரைப் பிலிப்ஸ் மன்னன் கிரேக்க நாட்டின் வாழ்விற்காகப் போர்முனைக்கு அர்ப்பணம் செய்தான்; அரிஸ்டாட்டிலை கல்வியில் ஆசானாகக் கொண்ட பிலிபஸ் கி. மு 324ஆம் ஆண்டு, அலெக்ஸாண்டர் முப்பதாயிரம் போர் வீரர்களுடனும், ஐயாயிரம் இராணுவத் தளவாடங்களுடனும் ஆசியாக் கண்டத்திற்குள் நுழைந்தான். பல நாடுகளை வெற்றி கண்டான். அலெக்ஸாண்டரின் உள்ளத்தில் எகிப்தையும் பிடித்து இந்தியாவிலேயே நுழைந்துவிட வேண்டும் என்ற பேரவா உண்டாயிற்று அந்த ஆசையும் பூர்த்தியாயிற்று இந்திய எல்லையோரமாகவும் அலெக்ஸாண்டிரியா என்ற பட்டணத்தையும் ஏற்படுத்தினான் ஆனால், அந்த மாவீரனின் நிலை என்ன?

'With Egypt now his Vassal Alexander the great was ready to proceed with his chief objective to complete the conquest of the Persian empire, for several years he was busy in fulfilling his dream, conquering all that lay before him, beyond the easternmost reaches of Cyrus' empire, his army even penetrated distant and mysterious India but, far from home and caught in a rainy season, his troops refused to go any further and he was forced to turn back. The year was 324 B. C. He did not however give up his hopes of further couquests. The following year at Babylone, while he was busily making plans for transporting his troops by sea around the Arabian peninsula, he fell sick of a fever and died, aged but thirty-two years."

(The Story of the Bible World)

"உலகம கண்டு வியக்கவேண்டும" என்று எண்ணங் கொண்ட அலெக்ஸாண்டர் மாவீரன தன் கனவை நனவாக்க

முடிந்ததா? எகிப்தின் வெற்றிக்கு அப்பால் இந்தியப் பெரு நாட்டையும் அடிமை கொள்ளவேண்டும் என்று எண்ணினான். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை இவை மூன்றும் யாரை விட்டது! வெற்றியின் பிரயாணத்தை மேலும் தொடருமாறு தன் வீரர்களுக்குக் கட்டளை யிட்டான். வீரர்கள் தொடர்ந்து போக மறுத்துவிட்டனர். ஆகவே வீரர்களின் ஒத்துழைப்பின்றி பிரயாணம் செய்ய முடியாது என்று அறிந்த அலெக்ஸாண்டர், கிரேக்க நாட்டிற்கே திரும்பிவிட முடிவு செய்தான். ஆனால், நடந்ததென்ன? அராபியக் கடலிலே பாபிலோன் என்ற நகரிலே தன்னுடைய முப்பத்திரெண்டு வயதே கொண்ட இளம் பிராயத்திலே கி. மு 24 ஆம் ஆண்டில் சிறு காய்ச்சலின் காரணமாகத் தன் இன்னுயிரைத் துறந்தான் அவ்வீரன்; என்றாலும் கிரேக்கர்கள் இன்று உலகெங்கும் புகழ்பெற்று விளங்கும் ஒலிம்பிக் பந்தயம் துவங்கிய கி. மு 776ஆம் ஆண்டின் கணக்கையே ஒப்பிட்டு வந்தார்கள்.

இஸ்லாமிய மதத்தினர் தங்கள் சமயக் குருவான முகம்மது நபி அவர்கள் மெக்காவிலிருந்து மதீனாவுக்குச் சென்ற நாளைக் கணக்கிட்டு 'ஹிஜ்ரா' என்ற முகம்மதிய சகாப்தத்தைத் தொடங்கினார்கள் இதனுடைய ஆரம்பம் கி. பி. 622ஆம் ஆண்டு ஜூலை 16ஆம் நாளாகும்.

அப்படியே இந்திய நாட்டில் "சக சகாப்தம்" என்று கனிஷ்கரது ஆட்சிக் காலத்திலிருந்து கி பி. 78ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்கினார்கள்.

மேற்குறிப்பிட்ட அத்தனைச் சரித்திரச் சகாப்தங்களையும் சிந்தனை செய்து பார்க்கின்றபோது அவையாவும் ஒரு நாட்டிற்கு, ஒரு மதத்திற்குக் குறிப்பிட்ட ஒருமக்கள் சமுதாயத்திற்கு மட்டுமே உபயோகப்படுத்தப் பட்டனவாக இருக்கின்றனவே யன்றி அகில உலகுக்கும் பொதுவான ஒரு சகாப்தமாக இருக்கின்றன என்று சொல்லுவதற்கில்லை.

ஆனால், உலகச் சரித்திரங்கள், உலகத்தில் அதிசயம் பிறந்த காலங்கள், உலகத்தில் சரித்திரப் பிரசித்திபெற்ற நிகழ்ச்சிகள் அத்தனையும் எந்தக் காலத்தைக் கணக்கிட்டோ,

எந்த மகான்களின் பிறப்பு இறப்பைக் கணக்கிட்டோ, ஆண்டுகளைக் கணக்கிட்டோ சொல்லவில்லை. ஆம்; கி. மு., கி. பி. என்றுதான் அதாவது கிறிஸ்துவுக்கு முன் (Before Christ) கிறிஸ்துவுக்குப்பின் (Anna Domini-In the year of the Lord.) என்றுதான் எந்நாட்டினரும், எம் மதத்தினரும் கணக்கிட்டுச் சொல்லுகிறார்கள். ஆகையால் கிறிஸ்துவுக்கு முற்காலமும் உண்டு; பிற்காலமும் உண்டு என்பது இதிலிருந்தே தெளிவாகிறது. எனவே, கிறிஸ்து ஒருவருக்குத்தான் இப்படிப்பட்ட ஓர் உலகப் பெருமை வாய்ந்த சரித்திரம் இருக்கிறது. இது கிறிஸ்து ஒருவருக்கு மட்டுமே ஏற்பட்ட சிறப்பு நிலையாகும். உலகத்தில் பிறந்த எந்த மகானுக்கும், வர்களுக்கு 'முன, பின' என்று சொல்லிப் பாருங்கள்! அது அவ்வளவு மன நிறைவு ஏற்படாது! வராது!

இந்தப் பெருமை வாய்ந்த கால அளவை, யார் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் கிறிஸ்து ஒருவரைத் தவிர வேறு யாருக்கும் பொருந்தாது. இந்த உலகம் முடிகின்ற வரைக்கும், இல்லை, மனிதசமுதாயம் இருக்கின்ற, வாழ்கின்ற வரைக்கும் கிறிஸ்துவுக்கு முன் கிறிஸ்துவுக்குப் பின் (கி. மு., கி. பி.) என்ற சரித்திர பிரசித்தி பெற்ற கால நிர்ணயம் இருந்தே தீரும். வேறொன்று வருவதற்கும் வழியில்லை; வரலாறு இல்லை; வரையறுத்துக் கூற யாருமில்லை.

பேரரசன் நெப்போலியன்,

> "கிறிஸ்துவினுடைய செங்கோன்மை என்னும் சக்கரம் கால அளவைக் கடந்து நித்தியத்துக்கும் விரைந்து செல்லுகிறது. இறந்த காலமும் எதிர்கால மும அவருக்கு ஒன்றுதான்"

என்கிறார். கிறிஸ்துவினுடைய எதிர்காலமும் இவ்வளவு நாள்தான் நீடிக்கும் என்று சொல்ல முடியாத அளவிலே அவருடைய மேன்மைகள், உயர்ந்த இலட்சியங்கள் உலகம் முடிகின்றமட்டும் தொடர்ந்து, அதற்கு மேலும் ஓர் உலகம் உண்டாயின் அங்கும் தொடரும் என்பது மட்டுமல்ல, கிறிஸ்துவின் சகாப்தத்தை மறுக்கின்ற உலகமே கிடையாது என்பது தான் முடிவு.

எதிர்பார்த்த எம்பிரான்,

"மேதைகள், மகான்கள், ஏன் தெய்வங்கள்" என்று சொல்லப்படுபவர்கள் கூட பிறந்த பிறகுதான், அவர்களுடைய வரலாறுகள் செய்த சித்துக்கள், மேற்கொண்ட தியாகங்கள், ஏற்று அனுபவித்த துன்பங்கள் ஆகிய அனைத்தும் வரலாற்று ஆசிரியர்களாலேயோ, மத தீர்க்கதரிசிகளாலேயோ, குறிப்புகள் சொல்லப்பட்டும், எழுதப்பட்டும் குவலயத்திற்குத் தரப்படுகின்றன. ஆனால் கிறிஸ்துவின் வருகை அப்படியன்று. அவர் பிறப்பதற்கு முன் ஒரு வாழ்க்கை இருந்தது; அது தெய்வ வாழ்க்கை. அவர் பிறந்த பிறகும் ஒரு வாழ்க்கை இருந்தது; அது மனித வாழ்க்கை. அவர் மறைந்துவிட்ட பிறகும் ஒரு வாழ்க்கை இருக்கிறது; அது மக்களால் மனிதத் தெய்வமாக வணங்கப்படும் மேலான அமர வாழ்க்கை,

தெய்வத்துள் தெய்வமாக இருந்த அவர், மனிதருள் மனிதராகவும் உலகில் வந்தார் என்பதிலிருந்து, அவர் பிறப்பதற்கு முன்னும் ஒரு வாழ்க்கை—தெய்வீக வாழ்க்கையாக பரிமளித்தது என்பதைப் பல தீர்க்கதரிசிகள் உறுதியாகக் கூறிய வார்த்தைகளிலிருந்து நமக்குப் புலனாகிறது.

உலகில் எத்தனையோ மனிதர்கள் பிறக்கிறார்கள் ஆனால் அவர்கள்தான் இவர்கள் என்பதை நாம் அறியக்கூட முடியாது. ஏன்? நமக்கே பிறக்கப் போகும் குழந்தையைக் கூட ஆணா பெண்ணா என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல முடிவதில்லை. மனிதன் பூமியில் பிறந்து வளர்ந்து, அவன் செய்கின்ற செய்கை, நடக்கும் நடத்தை, ஏற்படுத்தும் கொள்கை இவைகளைப் பொருத்தே அவனுடைய எதிர்காலத்தை நிர்ணயிக்க முடியும். ஆனால் பிறப்பதற்கு முன்பே ஒரு மனிதனை எந்தவிதத்தில் கணிக்க முடியும்? அந்த நிலையில் கணிக்கக் கூடிய ஒரே மனிதராகத் தெய்வப்பிறவியாகக் கிறிஸ்து ஒருவர்தான் இருக்க முடிந்தது. இத்தகைய பெருமை வேறு எந்த ஞானியருக்கும், ஏன்? எந்த கடவுளருக்கும் இருந்ததில்லை இருக்கவும் முடியாது என்று துணிந்து கூறலாம்.

கிறிஸ்து பிறப்பதற்கு நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன் மக்கள் தங்கள் நிலைமறந்து தீயகாரியங்களைச் செய்யத் தொடங்கினார்கள். பாவங்களும், பழிகளும் கணக்கின்றிப்பெருக ஆரம்பித்தன. அந்தப் பாவங்களையும் பழிகளையும் போக்கி, உலகைப் பரிசுத்தப்படுத்துவதற்கு ஒரு சமாதானப பிரபு பாவ மன்னிப்பைத் தரும் பரம இரட்சகர் ஒருவர் அவசியம் தேவை என்பதை பரம பிதா உணர்ந்து தன் அன்புக்கு மிகவும் பாத்திரமான ஆபிரகாமை அழைத்து, உலகம் உய்வதற்கு—மனிதர் குலம் தழைப்பதற்கு அவர்கள் ஆன்மா பரிசுத்தம் அடைவதற்குத் தகுந்த காலமும் நேரமும் வந்துவிட்டது. ஆகையால் உனது வம்சா வழியிலேயே அந்த உத்தமப் புருஷனைப் பிறக்குமாறு செய்யப்போகிறேன். அந்தக் குமாரனால் உலகின் சகல மக்களும் ஆசீர்வதிக்கப்படுவார்கள்” என்று சொன்னார்.

பூமியில் பிறக்கின்ற மகான்கள் அனைவரும் தாங்கள் தோற்றுவித்த சமயத்தை உபதேசங்களைக் குறிப்பிட்ட அந்த மதத்தினரே போற்றிப் புகழும் நிலை உண்டாகியிருப்பதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். ஆனால் யூதகுலத்தில் பிறந்த கிறிஸ்து, யூதக்குலத்திற்கு மட்டுமல்லாமல் உலகச் சமயங்கள் அனைத்தும் போற்றிப் புகழும் மகா உன்னத நிலையில் இருப்பதைப் பார்க்கிறோம். பொதுவாக மனிதக் குலத்தின் மீட்சிக்காகத் தன் மாட்சிமை பொருந்திய தியாகத்தை மனிதக் குலத்திற்கு அளித்த மகான் கிறிஸ்துநாதரே யாவார்.

ஆபிரகாமுக்கு அளித்த செய்தியைக் கடவுள் ஆபிரகாமின் மகன் ஈசாக்குக்கும், பேரப்பிள்ளையான யாக்கோபுக்கும் கூறினார். யகோபு தன் பன்னிரு மக்களுள் ஒருவனான யூதாவின் வம்சத்தின் ஆளுகையின் கடைசிக்காலம் தீர்ந்து நீங்கிய பின்னரே இந்த உலகம் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் இரட்சகர் வருவார் என்று கி.மு. 3700 ஆண்டுகளுக்கு முன்னரே அறிவித்தார்.

கிறிஸ்துநாதர், குறிப்பிட்ட பல துன்பங்களை அனுபவிப்பார் என்றும், அத்துன்பங்களின் காரணமாக அவர் மரிப்பார். மூன்றாம்நாள் கல்லறையிலிருந்து மகிமையோடு உயிர்த்தெழு

வார் என்பதையும் தீர்க்கதரிசியான தாவீது அரசர் கி.மு 1000 ஆண்டுகளுக்கு முன்னரே அறிவித்தார். கிறிஸ்து பிறப்பதற்கு 700 ஆண்டுகளுக்கு முன்,

"நமக்கு ஒரு பாலகன் பிறந்தார். நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார். கர்த்தத்துவம் அவர் தோளின்மேல் இருக்கும். அவர் நாமம் அதிசயமானவர். ஆலோசனைக் கர்த்தர். வல்லமையுள்ள தேவன், நித்தியபிதா, சமாதானப் பிரபு எனப்படும்.

(ஏசாயா. 9-6)

என்று ஏசாயா என்ற தீர்க்கதரிசி சொல்லி யிருக்கிறார்.

"அவருடைய அன்னை கன்னியாகவே இருப்பார். சொல்லொணா வேதனைகளை ஏற்றுக்கொள்வார். அந்த அன்னையால் அவனிக்கே ஓர் ஆறுதல் கிடைக்கும்"

என்றும் எழுதி வைத்தார்.

கி.மு. ஆறும் நூற்றாண்டில இருந்த சகரியா என்ற தீர்க்கதரிசி, கிறிஸ்துநாதர் கழுதை மீதேறி ஜெருசலேமில் நுழைந்ததைக் குறித்து எழுதி வைத்திருக்கிறார் அதுமட்டுமன்று.

"சீயோன் குமாரத்தியே மிகவும் களிகூர். எருசலேம் குமாரத்தியே கெம்பீரி; இதோ, உன ராஜா உன்னிடத்தில வருகிறார்; அவர் நீதியுள்ளவரும் இரட்சிக்கிறவரும் தாழ்மையுள்ளவரும், கழுதை மேலும், கழுதை குட்டியாகிய மறியின மேலும ஏறி வருகிறவருமா யிருக்கிறார்."

(சகரியா. 9-9)

என்றும் கிறிஸ்துவின் வரவைத் தீர்க்க தரிசனமாக எழுதி வைத்தார் அவர்.

"மனிதப் பாவங்களைப் போக்க கிறிஸ்துநாதர் பெத்லகேமில பிறக்கப் போகிறார்" என்று மிக்கேயா என்ற தீர்க்கதரிசி கி.மு. 7ஆம் நூற்றாண்டில கூறி யிருக்கிறார்

உலக நாடுகளின மத்தியிலே இமயமலை போல் சிறந்து விளங்கும் வேதத்தைப் பற்றி எழுதுவதென்பது கடினமே என்ருலும் ஆண்டவர் எனக் களித்த சிற்றறிவின் ஆற்றலைக் கொண்டே எழுதுகிறேன். என்ன எழுதினுலும் எப்படி எழுதினுலும் கிறிஸ்து நாதரின் அருமைப் பெருமைகளை எழுத இந்த ஏடுதான் இடங் கொள்ளுமா? என் இதயந்தான் தாங்குமா?

நம்முடைய நீண்ட பெரும் வல்லமையை—படித்த மேதைக் குணத்தைப பாரம்பரியத் திறமையை, உலக ஞான மென்னும உணர்ச்சியை, செய்ய முடியும என்ற வைராக்கியத்தை எல்லாம் ஒன்று திரட்டி, அவைகளை எழுதுகோலால் உருவங் கொடுத்து, விரிந்து பரந்து கிடக்கும நீலப் பெருங் கடலை ஏடாகப் பயன் படுத்திக் கிறிஸ்துவினுடைய வல்லமைகளை, அன்பை அகிம்சைத தத்துவத்தை எழுதினுலும் கடல் அளவு மையும வற்றிப் போகுமேயன்றி ஆண்டவரின் மகிமை வற்ருது: எழுத்துள் அடங்காது. அந்த உன்னதப் பெருமைகள் வானத்தையும் கடந்து ஒளிவீசும் பேராற்றல உடையது என்பதை நான சொன்னுல சுவைக்குமா? இதோ:—

"Could we with ink the ocean fill
and were the role of parchmant made;
were very stalk on earth a quill
And every man a scrible by trade;
To write the love of god above
would drain the ocean dry
Nor could the scroll contain the whole
Though stretch from sky to sky"
(God Speak to Modern Man)

என்று "மேர்பென் ஐசாக் நாரெய்" என்ற ஆங்கிலக் கவிஞர் எழுதியிருக்கிருர்.

ஆண்டவரின் சிறப்பு அவ்வகைப்பட்டதாக ஆன்ருேர்கள் நமக்கு அறிவித்திருக்கிருர்கள். அறிவித்த அந்த அறிவுரைகளைச் சிரமேற் கொண்டு நாம் வழிபட வில்லை என்ருல் பல கற்றும் நாம் கல்லாதவர்தளே. நாம் படித்து அறிந்ததன் பயன்

என்ன? அறிஞர்களுக்கெல்லாம் அறிஞராக விளங்கும் ஆண்டவரின் பாதங்களை வணங்காத அறிவு எதற்கும் பயன்படாத ஒன்று என்பதை,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
 னற்றாள் தொழாஅ ரெனின்."

என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார். ஒரு மறைக்க முடியாத உண்மையை மானிடக் குலத்திற்கு அறிவிக்கிறார். "ஆண்டவனின் பாதத்தைத் தொழாத அறிவு அறிவாகாது" என்று சொல்லுகின்றபோது, நாம் வணங்க வேண்டிய ஆண்டவனுக்கு உருவமும் இருக்கிறது என்பதை நமக்குத் தெள்ளத் தெளிய காட்டுகிறார். அதுமட்டுமன்று, அந்த உருவம், அந்த வடிவம் எல்லா ஞானியருக்கும் பொதுவானதே. மற்றொருவரின் கூற்றையும் இங்குக் காண்போம்.

"சிறந்த மெய்ப் பொருளை அழிவிலா மணியைத்
 தெரிந்துமுக் காலமு முணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
 தொடரின்ப துன்பமற் றவனைப்
பிறந்த பல் லுயிரின் மனத்தள வுறைந்து
 பிறப்பிறப் பென்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையும் மறந்து
 மண்ணினில மதிமறந் தவரே.

(சீறாப்புராணம்)

என்பதே அக்கூற்று அங்கிங்கு எனாதபடி எங்கும் பரந்து விளங்கும் பரம்பொருளாய் அழிவற்ற சிறந்த பேரொளிச் சுடராய் விளங்குபவன்—உலகப் பற்றைத் துறந்த ஞானியரின் உளக் கோயில்களே தனக்கிருப்பிடமாகக் கொண்டவன்—இன்ப துன்பம் ஆகிய இவற்றுக்கு அப்பாற் பட்டவன். உலக உயிர்கள் அனைத்தின் மனங்களில் என்றும் பொருந்தி உறைபவன். தோற்றமும் அழிவுங் கொண்ட உயிர்களின் உளக் கோயில்களில் உறைபவனேயாயினும் தான் அப்பிறப்பில்லாத நிலைபெற்ற நீங்காத பேரின்பத் தன்மை யுடையவன். அத்தகையோனை—இறைவனை வணங்க மறந்தவர் மோட்ச

[illegible]

அது மட்டுமா! அகிலத்தையும் உலகப் பொருள்களையும் படைத்த ஆண்டவனை இல்லை என்று சொல்லுகின்றவர்களைப் பற்றி வள்ளுவப் பெருந்தகை நமக்கு அறிவுறுத்துகிறார்.

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்."

மேதைகள் நல்லறிவாளர்கள், ஆன்றோர்கள், சான்றோர்கள், பெருந்தகையாளர்கள், பேரன்பு கொண்டவர்கள் ஆகியோர் களால் 'இருக்கிறது' என்று சொல்லப்படும் பேருண்மையை இல்லை என்று சொல்லுகின்ற ஒருசில அறிவிலிகள் இந்த மாநிலத்தில் மனிதர்களாக மதிக்கப்பட மாட்டார்கள். அவர் கள் யாவரும் பேய்களாகவே கருதப்படுவார்கள் "என்று வள்ளுவனார் தெளிவாகக் கூறுகின்றார்.

இன்றைய உலகம அப்படித்தானே இருக்கிறது தன்னு டைய கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள, பெரிய மனிதன என்று மற்றவர்கள் தன்னை மதிக்க, ஏதோ தான் அப்படிப பட்டவன இப்படிப்பட்டவன் என்று பிறர் நமப வேண்டும என்ற நோக்கத்திற்காக, இப்படித்தான இருக்கும் என்பதை மாற்றி, எப்படியும்இருக்கலாம் ஏன்! இல்லாமலும் இருக்கலாம. என்றும் சொல்லும் அளவுக்குத் தன்னை ஆளாக்கிக் கொள்ளும நிலையில் இருக்கின்ற இன்றைய மனிதனை, வள்ளுவர் எவ் வளவு நகைச் சுவையோடு சாடுகிறார் என்பதையும இங்குக் காண்போம.

வள்ளுவரிடம ஒரு சிறுவன வந்து 'பேய்' என்று சொல்லு கின்றார்களே அது எப்படியிருக்கும் ? பேய்க்குக் கால்கள் தரையில் படாதாமே" என்று கேட்டானும். அதற்கு வள்ளுவர் "தம்பி நீ சொல்லுவது போல இன்றை பேய்களுக்குக் கால கள் தரையில் நிலையா! அவை ஆகாயத்தில நடமாடுவதாகத் தமக்குள்ளேயே கருதிக் கொள்கின்றன. பேய் என்று தனி உருவம ஏதும் இல்லை தம்பி! மனித உருவிலதான் நடமாடிக் கொண்டிருக்கின்றன. முடிவாகக் கூறுவதானல மனிதன் தான் பேய்" என்று கூறுனாராம். மறைந்த அம்மா மேதை இருந்திருந்தால் அப்படித்தான் சொல்லியிருப்பார். நல்ல வேளை அவர் உலகில் இல்லை; என்றோ மறைந்து விட்டார். இன்று

நம்மிடையே அவர் வாழ்வாரானால் இன்றைய சமுதாயம் அவரையே பேய் என்று சொல்லிப பழித்திருக்கும்.

ஆகவே கிறிஸ்து நாதர் இரட்சிப்பின் சிகரமாக மனித உருவில் பிறந்து மகான் உருவில வளர்ந்து, தெய்வ நிலையை அடைந்தார். அந்தப் புனிதப் பெருமானின உலக இரட்சகரின, எவ்வுயிர்க்கும் ஏகப்பிரதி நிதியாக ஏகாந்த நாயகராக விளங்கும் கிறிஸ்துநாதரின சிறப்பை எழுத என சிந்தைக்கு வலிமை உண்டா!

கிறிஸதுவின வேதாந்தத்தைப பறறி போற்றிப புகழாதோர் இந்த உலகத்திலேயே இருக்க மாட்டார்கள் எனறே சொலல வேணடும். ஆனால கிறிஸ்து வேதத்தைப பொருததமட்டில் உலகததின் மூலை முடுக்குகளிலுள்ள பேரறிஞர அனைவரும புகழ்ந்துரைததது மட்டுமலலாமல, உண்மையான தெய்வம கிறிஸ்துதான எனபதை அழுததந்திருத்தமாகவும கூறியிருக்கிறார்கள். அவர்கள மட்டும தானா பாராட்டினார்கள் !

அமெரிக்கா, ரஷ்யா, பிரான்ஸ், இந்தியா முதலிய நாடுகளிலுள்ள கடவுள் நமபிக்கையற்ற பகுததறிவாளர்கள, நாத்திகர்கள் கூட கிறிஸ்து நாதர், உண்மையான கண் கண்ட தெய்வம எனறும, கிறிஸ்துவின வேதமே தலைசிறந்த வேதம் எனறும ஒபபுக் கொண்டிருக்கிறார்கள்.

அயர்லாநது நாட்டைச் சேர்ந்த விலலியம் லெக்கி என்பவர் சிறந்த தத்துவ ஆசிரியர் அரசியல அறிஞர். அவர் 65 ஆண்டுகளுக்கு முன அதாவது 1903 ஆம் ஆண்டில இம் மாவுலத்தைவிட்டு மறைந்துவிட்டார். அக்காலத்தில் கிறிஸ்துவ மதத்தை நமபாதவர்களின முதல வரிசையில் நினறவர்களில லெக்கியும ஒருவர். மனிதனால ஆகாதது அவனியிலே ஒன்றும கிடையாது. "எல்லாம் மனிதனே" என்ற அசைக்க முடியாத வைராக்கியம் கொண்டவர் அவர். கிறிஸ்து வேதத்தைப் பற்றியும் கிறிஸ்துவைப் பற்றியும கூறும்போது,

"உயர்ந்த குறிக்கோளையுடைய தனிச் சிறப்பான ஒருவரை உலகுக்கு அளித்தது கிறிஸ்துவின் மதம் ஒன்றே! பதினெண் நூற்றாண்டுகளின் மாறுதலகளுக்கெல்லாம் மதியாமல தன்னுடைய உள்ளத்திலே

ஆர்வமிக்க அன்புச்சுடர் கொளுவி வருபவர் அவரே' எக்காலங்களிலும், எல்லா நாடுகளிலும் எல்லா வகைப்பட்ட உணர்ச்சி உடையர்களிடத்தும், எல்லா வகையான சூழ்நிலையிலும் இயல்பாக நடத்தும் ஆற்றல் தமக்கு உண்டென்று காட்டியுள்ளவர் அவரே. தலை சிறந்த நறகுண நற்செயல் உள்ளவர் கள் இன்னின்னவாறு நடக்க வேண்டுமென்று, தெளிவாய் அறிவுறுத்தி இருப்பதோடு அத் தகைய நறகுண நறசெயல் உள்ளவர்களாய் மக்கள் வாழ்வதற்கு இணையாற தூண்டுகோலாக விளங்கி வருபவரும் அவரே அவருடைய செல்வாக்கு மிகவும் ஆழப் பதிந்துள்ளது. ஆதலால், மூனறே மூன்று ஆண்டுகளில் அவர் செய்த முயற்சிகளையும் அவரது வாழ்க்கையையும் பற்றிச் சாதாரணமாக எழுதி வைத்த ஒரு நூல், சித்தாந்திகளின் ஆராய்ச்சிக்கட் டுரைகளும் அற நெறியாளர்களின் அறிவு கொளுத் தும் பேருரைகளும ஆகியவை யாவும் செய்ய இய லாத அளவு உலகமக்களுக்குப் புததுயிரூட்டி, அவர்கள் நெஞ்சத்தில் இரக்கத்தை வளர்த்துள்ளது. எனறு மெய்யாகவே செல்லலாம்.''

என்றும் தாம் எழுதிய ஐரோப்பிய சரித்திர அறிவுரைகள் (History of European Morals) எனற நூலிலே எழுதியிருக் கிறார்.

1800 ஆண்டு காலமாக என்னென்ன மாறுதலகள், அதா வது, ஆத்திக, நாத்திகப் பிரசாரங்கள், தனி மனிதர்கள் செருக் கும் செல்வாக்கும் குறைந்து விடுமே என்ற காரணத்தின் எதி ரொலியிலே ஏறபட்ட விருபபு வெறுபபுப பிரசாரங்கள், உண் மையைத் தெள்ளத் தெளிய உணர்ந்தும் அதை மறைக்க மக் களைக் காசுக்கும் பதவிக்கும் தூண்டிவிட்ட கொடுமைகளை முதலிய யாவற்றையும் தட்டித்தகர்த்தெறிந்து, நற்குணம், நற செய்கை இவறறை மேற்கொள்ள மக்களை நலவழிப் படுத்தி எழுதி, ஏவல் செய்து வந்த சித்தாந்தங்கள், ஆராய்ச்சிகள், அறவழிப் பேருரைகள் ஆகிய அனைத்தையும் பின் தள்ளித் தா

சொன்னவை, செய்தவை, தெளிவுபடுத்தியவைகளே உண்மை யானவை, போற்றத்தக்கவை என்று உலகுக்குக் காட்டிய இரக்கத்தின் இருப்பிடமான கிறிஸ்துவை அல்லாது வேறு யாரும் இருக்க முடியாது', என்று கிறிஸ்துவின் காலத்தைக் கணக்கிட்டு ஆராய்ந்து கூறுமிடத்து அயர்லாந்து நாட்டுப் பேரறிஞர் லெக்கி கூறுகின்றார்.

தூயமையின் சிகரம்

ரூஸ்ஸோ! இந்தப் பெயரை அறியாத அறிஞர்கள் உலகத்தில் குறிப்பாக இந்திய நாட்டிலுங்கூட இலலை என்றே சொல்லலாம். பிரானஸ் நாட்டின சரித்திர ஏடுகளிலே இடம் பெறற பேரறிஞர் ரூஸ்ஸோ எனபவர். கிறிஸ்துவ சமயம் தலை சிறந்து விளங்கியகாலத்தில பிரானசு நாட்டிலே அதறகென்று எதிர்ப்பியக்கம் கண்டு கிறிஸ்துவ சமயத்தை இழித்தும், பழித்தும் கூறியது மடடாமல், சமய வளர்ச்சிக்குப பல இன்னல்களை விளைவித்தவர் ரூஸ்ஸோ தம் பேச்சாலும, கட்டுரை வாயிலாகவும் கிறிஸ்துவ சமயத்தின தூயத்தன்மைக்கு எதிராகத் தீய பிரசாரம் செய்தவர் அப்பெரியார். அவர் வேதாகமத்தைப் பற்றியும், கிறிஸதுவைப் பறறியும் விமர்ச்சிக்கின்றபோது,

> "வேதாகமத்தின் (விவிலிய நூலின்) சிறப்பு எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. சுவிசேஷத்தின் தூய்மை என் நெஞ்சததைத் தன வயப் படுத்துகிறது. விஞ்ஞானிகளின் நூலையும் அவற றின் பெருமையையும் நோக்குங்கால் அவை இந்த சுவிசேஷத்தின முனனிலையில அற்பமானவையாய்த் தோன்றுகின்றன! இவ்வளவு உயர்ந்தும், அதே சமயத்தில் இவ்வளவு பெரியதும், நேர்மையானதுமான ஒரு நூல் சாதாரண மனிதர்களால ஆனதாக இருக்க முடியுமோ. அந்நூல யாரைப் பற்றிக் கூறுகின்றதோ, அவரும் சாதாரண மனிதப பிறவியாய் மட்டும் இருக்க முடியுமா? விஞேதப் பிரியன், அல்லது அதிகாரப்பிரிய முடையவனின வார்த்தைகளா இவை? என்ன சாந்தம்! நடையுடை பாவனை

யில் என்ன பரிசுத்தம். அதில் (சுவிசேஷத்தில்) காணும் அறிவுரைகளில் என்ன அருள்! அதன் கோட்பாடுகளில் எவ்வளவு மேன்மை! அதன் விரிவுரைகளில் எவ்வளவு ஆழ்ந்த ஞானம்! என்ன மன அமைதி! கேள்விகளுக்குப் பதில் கூறும்போது எவ்வளவு அழுத்தம். எவ்வளவு திருத்தம! மன ஆசைகளை அடக்கியாள்வதில் எவ்வளவு திறமை! பலவீனமின்றி, வீண் டம்பமின்றிச் செயல் புரியவும், தன்னுறவும், உயர்ந்து நிறக்கவும் அறிந்த மனிதனை ஞானியோ யார்? எல்லாவிதமான அவமானங்களிடையிலும் புண்ணியத்தையே கடைப்பிடிக்கக் கூடியதொரு நீதிமானைக் கற்பனை பண்ணிக் கண்டவை ஏசுகிறிஸ்துவிடம் முற்றிலும் நிறைவேறியது என்பதை இந்தத் திருச்சபையின் பிதாக்களே சொல்லியிருக்கிறார்கள்"

என்று கூறியிருக்கிறார். ஆம், "பெரியோரெல்லாம் பெரியருமல்லர் சிறியோரெல்லாம் சிறியருமல்லர்" என்பது முதுமொழி. அதேபோல எழுதி முடித்த அச்சானவெல்லாம் நூல்கள் என்று சொல்லிவிட முடியுமா? எண்ணிக்கையைப் பெருக்கி. ஏராளமான பணத்தைத் திரட்டிக் கொடுக்கும் நூல்கள். எண்ணிக்கையையும், பணத்தையும் கொடுப்பதைப்போல மக்களின் எண்ணத்தையும் இல்லற வாழ்வையும் கெடுத்துக் கொண்டுவருவதை நாம் அன்றாட வாழ்வில் பார்க்கிறோம்; என்றாலும், மனித சமுதாயத்தின் உயர்வுக்கும், ஏங்கிக்கிடக்கும் இதயபாரத்தின் துன்பத்தைப்போக்கித் தூய நெறியில் மனிதர்களை அழைத்துச் செல்லப் பயன்படும் நூல்களும் இல்லாமல் இல்லை. அவைகள் அத்தனையும், பொதுவாக அஞ்ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் வளர்த்து, மனித சாதியின் தாழ்வுக்கும் வாழ்வுக்கும் பயன்படுகின்றன. ஆனால், உலக மக்களின் ஆன்மவளர்ச்சிக்காகப் பாவத்தைப்போக்கிப்பரிசுத்த வழியை மக்கள் பின்பற்றுவதற்காக, அகில உலகமெல்லாம். போற்றி பெருமைபெற வல்ல ஓர் உயர்ந்த எழுத்துப் பொக்கிஷமாக விளங்குவது கிறிஸ்துவின் சுவிசேஷமாகும் அதனால் தான் அது யார் வேண்டுமானாலும், எத்தகைய பண்

பாடு பழக்க வழக்கங்கள் உடையோராக இருப்பினும், அவர்கள் எல்லாரும் விரும்பி போற்றத்தக்க ஒரு வேதநூல் சுவிசேஷமாகும்.

பிளாட்டோவின் நீதிமான

நீதிமான் என்பவன் யார்? அவனுடைய சரித்திரம் எவ்வாறு படைக்கப்பட்டிருக்கவேண்டும்? பிறருக்குப் புத்தி புகட்டும் புண்ணியப் புருஷர்கள் உலக அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ்ஞானப்பாதையைச் செப்பனிடும் மேதைகளின் முடிவு எப்படியிருக்கவேண்டும்? என்பதைப பல அறிஞர்கள் விளக்கமாகவும், விரிவாகவும் எடுத்து இயம்பி இருக்கிறார்கள் மக்களில ஒரு சாரார் அந்த நீதிமானைப பார்த்து அயோக்கியன், ஆணவக்காரன, மக்களை மயக்கும மாயாவி, மனித சமுதாயததிறகே மாசு கறபிக்கும் மாபாதகன் எனறெலலாம் சபிக்க வேண்டும அவனைக் கல்லால அடித்து உதிரம் சொட்டச் சொட்ட இழுத்து வந்து கழுமரத்தில ஏற்றிச் சாகும் வரை அம்மரத்திலேயே கொடுமையை அனுபவிக்க விட்டுவிட வேண்டும். இவ்வளவு கொடுமைகளையும் எந்தவிதக் கசப்புமினறி அந்த நீதிமான அமைதியான உள்ளத்தோடு காட்சி தந்து இறக்கவேண்டும். அவனே உண்மையான நீதிமான் ஆவன் கிரேக்க நாட்டுப் பேரறிஞர் தத்துவமேதை-உலக எழுத்தாளர் வரிசையிலே முனனணியில வைத்துப புகழபபடும் அறிவுச்சுடர் கிரேக்க நாட்டின வளர்ச்சிக்கும், வாழவிற்கும் தன வாழ் நாளெலலாம் தியாகம் செயத நாட்டுக் காவலன பிளாட்டோ.

"முதல் முதல் அவனைப்பற்றிக் கொண்டிருக்கும் நலலெண்ணத்தை அவன இழந்து விட வேண்டும், பினனர் அநீதியான எக்காரியத்தையும அவன் செய்யாதிருந்தும் எலலாரும் பெருத்த அக்ரமன எனறு அவனை இழிவு படுத்தவேண்டும். பெரும் அவதூறுகளாலும் அவனுக்கு ஏறபடக் கூடிய எத்துன்பத்தாலும் அவன தன மன அமைதியை எவ்விதத்திலும் இழத்தல் கூடாது. மரண

மட்டும் இந்த அமைதியைச் சற்றும் குறைவு படாமல் காப்பாற்றவேண்டும். உண்மையில நீதி மானயிருந்தும் தன் வாழ் நாளெல்லாம் மற்றவர்கள் தன்னை அக்ரமன் என்று நினைக்க விட்டுவிட வேண்டும். இறுதியாய்ச் சாட்டைகளால் அடிக்கபபட்டு, வேதனையுற்று, 'விலங்கிடபபட்டுத தன பகைவர் கண்களையும் தோண்டி எடுத்து விடுமபடி பொறுமையாயிருக்க வேண்டும இவ்வளவையும பொறுத்துக்கொண்ட பினனர் சிலுவையில அறை யுண்டு கண்ட துண்டமாக வெட்டபபடல வேண்டும இத்தகைய துனபங்களையும எவ்விதமான எதிர்பபு மினறி ஆவலுடன் சந்தித்த பினனரே அவன் பூரண நீதிமான் என்று முடிவு கட்ட வேண்டும ?"

என்று கிறிஸ்துவைப பறறி எழுதுகினறபோது கூறுகிறார். பிளாட்டோ சொனன அவ்வளவு விளக்கங்களும் கிறிஸ்து வுக்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கினறன. எனபதை நோக்குங்கள் அந்தபபேருண்மையை இனறைய நூற்றாண்டின் இணையறற கவிஞன அமரகவி பாரதி

" உண்மை யெனற சிலுவையிற கட்டி
 உணர்வை ஆணித்தவங் கொண்டடித்தால்
வனமைப பேருயிர் யேசு கிறிஸ்து ;
 வான மேனியில் அங்கு விளங்கும!
பெண்மை காண் மரியா மத்தலேனு
 பேணும நலலறம் யேசுகிறிஸ்து ;
துண்மை கொண்ட பொருளிது கண்டீர்
 நொடியிலிஃது பயினறிட லாகும்.

என்று உள்ளெத்திலெழுந்த உணர்ச்சியோடு ஓர் உத்தமனின் நிலையை எபபடிச் சுட்டிக்காட்ட வேண்டுமோ. அவ்வகையில் கிறிஸ்துவின தியாகத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார்

கிறிஸ்துவுக்கு முனனும் பின்னும் மகானகள் பலர் தோன்றி மறைந்தார்கள். வாழ்ந்தும் மறைந்தார்கள். எனறாலும் கிறிஸ்துவைபபோல உலக மக்களின பாவத்திறகாகச் சிலுவை யைச்சுமந்து, மனிதருள் மனிதராய், தெய்வத்துள் தெய்வ

மாய்த் திகழ்ந்த ஓர் அற்புத வரலாறு உலகச் சரித்திரத்தில் யாருக்கும் இருந்ததாகத் தெரியவில்லை

மனிதன் எங்கே ?

கிரேக்க நாட்டு வீதியிலே ஒரு நாள் கதிரவன் தன் பொற் கிரணங்களால் ஒய்யாரமாக வீசிக்கொண்டிருந்தான். மக்கள் அவரவர் வேலைகளைக் கவனிக்கச் சென்றுகொண்டிருந்தனர் அவர்கள் மத்தியிலே ஒரு பெரியவர் விளக்கைக் கரங்களில் ஏந்தி எதையோ தேடிக்கொண்டிருந்தார் ஆச்சரியமாக இருக்கிறதல்லவா! பட்டப் பகலிலே யாராவது விளக் கொளியை நாடுவார்களா! எல்லாரும் அந்தப் பகல் பைத்தியக் காரனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் அந்தப் பெரியார் மிகவும் தீவிரமாகத் தேடிக்கொண்டே யிருந்தார் அவர் செயலை ஊன்றிக் கவனித்த வழிப்போக்கருள் ஒருவர், பெரியவரை அணுகி, "ஐயா இந்தப் பட்டப்பகலில் கரங்களில் விளக்கை ஏந்தி. எதைத் தேடுகிறீர்?" என்று கேட்டார். அதற்கு அந்தப் பெரியவர் சொன்ன பதில்' கேட்டவரின் உள்ளத்தையே ஓர் உலுக்கு உலுக்கியிருக்க வேண்டும் ஆம்; பெரியவர் சொன்ன பதில் இது தான், "இந்தக் கிரேக்க வீதியிலே மனிதன் யாராவது இருக்கிறானா "என்று தான் தேடிக்கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார். நாகரிகம் படைத்த கிரேக்க நாட்டில் மனிதன் இல்லை. ஆம கிரேக்க ஞானிக்கு மனிதன் அகப்படவில்லை. ஆனால் நம் தமிழகத்திலே தான் அந்தக் கிரேக்க ஞானி தேடிய மனிதன் இருந்தான். யார் அந்த மனிதன் ?

மறைந்து போன — இல்லை மறைக்கப்பட்டிருந்த — இல்லை இல்லை எடுத்துச் சொல்ல ஆள் இல்லாத அந்த அற்புத நிகழ்ச்சியை திரு. ம.பொ.சி. அவர்கள் சொல்லுகிறார் கேட் போம்.

"மனித உடல் பெற்றவரெல்லாம் மனிதப் பண்பு உடையவராகி விடுவதில்லை. மனிதப் பண்பு பெற்ற வரே மனிதர். அவரே தெய்வத்தின் திருவருளைப் பெறுவதற்குப் பாத்திரராவார். அடிகளாரை (வள்ள லாரை) பார்த்த ஞானி ஒருவர், "இதோ உத்தம

மனிதன போகிருன்" என்ருராம். இந்த நிகழ்ச்சி பறறிய கதை வருமாறு;

"நம்பெருமான் எப்பொழுதும திருவொற்றியூருக்குக் கீழண்டை மாட வீதி வழியாகச் செலலாது ஆங்குள்ள நெல் லிக்காய் பண்டாரச் சந்து வழியாகச் செலவது வழக்கம். ஒருநாள் மட்டும் வழக்கததிற்கு மாருகத் தேரடி வழியாகச் செனறுகொண்டிருந்தார். அந்தத் தெருவிலிருந்த திண்ணையொனறிலிருந்த நிர்வான சந்நியாசி ஒருவர் அபபக்கம போகிறவர்களை யெலலாம "கழுதை போகிறது, மாடு போகிறது" எனறே சொலலுவது வழக்கம அச்சந்நியாசி, அன்று தம வழக்கததிறகு மாருக நம பெருமான போவதைக் கணடு 'இதோ உததம மனிதன் போகிருன' எனறு உள்ளங்களி சிறக்க உரைத்தார். அததுடன தம உடம்பினையும கரங்கொண்டு மூடிக் கொணடார். அதைக் கேடட நம பெருமான அவர் பககத்தில செனறு ஏதோ சில உரைகளைக் கூற அனறிரவே அச்சந்நியாசி அவ்விடத்தைவிடடு அகனருர் "

(வள்ளலார் கண்ட ஒருமைபபாடு)

கிரேக்க நாட்டு மக்களின நல்வாழ்விறகாக, மனித சமுதாயத் திற்கு ஏறபடும இனனலகளுக்கெலலாம மூலகாரணததைக் கண்டுபிடித்து, அதறகாக ஒரு முடிவைத்தேட, மூடபபழக்க வழக்கங்களில் மூழ்கி அனருடம அலலலபட்டுக் கொண் டிருக்கும் மக்களின அவல நிலைமையைப போக்க அருமபாடு பட்ட சமூகச் சீர்திருத்தச் செமமல.

மற்றவர்களின வாழ்விறகாகத் தன் இன்னுயிரையே பலி யாக்கிக்கொணட தியாக வளளல.

சமுதாயததிலே ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கி, இருள் சூழ்ந்த மனித வாழ்க்கையிலே ஒப்பறற சீர்திருத்தச் சுட ரொளியை உண்டாக்கிய பேரறிவாளன.

மடமையில ஆழந்து கிடந்த மக்களின் மனத்திலே மனச் சாநதியை ஏறபடுததிய மாமேதை.

மாக்கள் நிலையில் முடங்கிக் கிடந்த மனிதர்களை மக்கள் நிலையில் வாழ வழிவகுத்துக் கொடுத்து, அத்தகைய குற்றங் களுக்காகவே சிறையில் அடைக்கப்பட்ட வீரர்.

"மரணம் இன்று வருமோ, நாளை வருமோ, இன்னும் சற்று நேரத்தில் வருமோ" என்று எண்ணி விடை காணுமல் தத்தளித்துக் கொண்டிருக்கும் நேரத்தில், மரணம் வந்துவிட்டது. இதோ, என் கரங்களிலே கொடுக்கப்பட் டிருக்கும் நஞ்சு என் வாழ்விறகு முடிவுகட்டும் மரணசாசனம்" என்று உரைத்த மாவீரன், காராகிருகத்திலே கலநெஞ்சக் காரர்களால் தம் கரங்களிலே கொடுக்கப்பெற்ற நச்சுக் கோப்பையோடு நின்றிருக்கிருர்; அந்த ஞானி. அந்தநேரத்தில் சிறை அதிகாரி பெரியவரை நோக்கி "ஐயா நீங்கள் இறப் பதறகு முன்னுல் உமக்கு விருப்பமானதைக் கேளுங்கள்" என்று கேட்கிருன்.

பெரியவர் அதிகாரியைப் பார்த்து புனமுறுவல பூத்து "எனக்கு ஒன்றும வேண்டாம" ஆனுல என் உள்ளத்தின அடித்தளத்திலே கொந்தளித்துக் கொண்டிருக்கும் உணர்ச்சி யின ஏக்க எழுச்சியைமட்டும் வாய்விட்டுச் சொல்லி விடு கிறேன். அதுவே என கடைசி ஆசை. அதுவே எனது இறுதிக் கோரிக்கை!

கிரேக்க ஞானியின கண்களிலே நீர்த்தேக்கம்!

'கிரேக்க நாட்டு மக்களே நான இறந்துவிடுவதற்காகக் கவலைபபடவிலலை மனிதனுக்குப் பிறபபு என்று ஒன்று ஏறபடு மானுல இறபபு என்பதும ஒருநாள் ஏறபடுவது உறுதி. இதனை எவரும தடுக்கவும முடியாது" மரணத்தைக் கண்டு அஞ்ச விலலை மரணம் எனனை அரவணைதது அனபுமுத்தம் அளிக் கும் அருமருந்து" என்பதை நான நன்ருக அறிவேன ஆனுல என் கவலை எலலாம் ஒன்றே ஒன்றுதான. ஏதென்ஸ் நாட்டு மக்களை இருள் சூழ்ந்த அஞ்ஞானக் காட்டிலே இருந்து விலக்கி மெய்ஞ்ஞான மாளிகைக்கு அழைத்துச் செலலாமல விட்டுப் போகிறேனே, அதற்காகத்தான் கவலைப்படுகிறேன். இதுவேதான் எனது இறுதிநாளில் நிறைவேற்றபபடாமல்

இருக்கும் ஆசை என்று சொன்னார் சீர்திருத்தச் செம்மல் சாக்ரடீஸ்.

அது மட்டுமன்று நச்சுக்கோப்பையைக் கரங்களிலே ஏந்தி நிற்கும் சாக்ரடீஸைப் பார்த்து அவருடைய நண்பன் நிகேடார் கேட்கிறான். "பேரறிஞனே! சீர்திருத்தச் செம்மலே எளியவர்களின ஏந்தலே, மடமையைப் போக்க வந்த மாவீரனே! நீ சாகப போவது நிச்சயம். ஆகையால இன்னும் சற்றுநேரங் கழித்து நஞ்சைப் பருகக் கூடாதா! இன்னும் சிறிதுநேரம் என்னோடு பேசிக்கொண்டிருக்கக் கூடாதா" என்று கேட்கிறான்

நண்பனை ஏளனமாக நோக்கிப் புன்னகைத்த சாக்ரடீஸ் "நண்பனே உனக்கு ஏன் இத்தகைய பைத்தியக்காரனைப் போன்ற எண்ணம் தோன்றியது! மனிதன் வாழ்வு நிலை யானதா? நான் குடிப்பதற்காக என் கரங்களில் அளிக்கப் பட்ட இந்த நஞ்சை நான் குடிப்பதற்குள்ளாக ஒரு வேளை இறந்து விடுவேனானால் என்னை நஞ்சைப் பருகி இறக்கும்படி ஆணையிட்ட அரசாங்கத்திற்கு என்ன மதிப்பு ஏற்படும்? எனக்குப் நஞ்சைப் பருக அஞ்சி, அதைப் பருகுவதற்கு முன்பே இறந்த கோழை என்ற அபவாதச் சொல்லும் ஏற்படும் அன்றோ? அதனால் எனது உயரிய எண்ணங்கள், கோட் பாடுகள் அவற்றை விளக்கிக் கூறும் நல்லுரைகள் இவை யாவும் பயனற்றவாகிவிடும் அன்றோ? மரணத்தை எண்ணி அஞ்சுகின்ற எவனும் தினமும் செத்துச் செத்தே வாழ் கின்றான். கோழை ஒருவன் என்றும் இறந்தே மீண்டும் பிழைக் கிறான், மரணத்தை துரும்பென்று மதிக்கும் எவனும் ஒருநாள் இறந்தே அழிந்தாலும் இவ்வுலகில் என்றும் நிலையாக வாழ் கிறான்" என்று கூறியபின் அந்நஞ்சைப் பருகிப் புன்முறுவ லோடு தன் இன்னுயிரைச் சிறைச்சாலைக்குக் காணிக்கை யாக்கினார்.

அந்த மாவீரனின் மரணமும் போற்றுவதற் குரியதே. ஆயினும், அந்த இறப்பு தெய்வீகத் தன்மைக்கு ஒப்பாகாது என்று கூறலாம். இக் கருத்தை புரட்சி வீரன் ரூசோ.

"சோப்ரோனிஸ்குஸ் மகனுக்கும் (சாக்ரடீஸ்) மரியம்மையின் மகனுக்கும் (இயேசு கிறிஸ்து) இடையே ஒப்புவமை காண்போர். பெரிய குருட ராயத்தான் இருக்கக்கூடும் இருவருக்கும் இடையே உள்ள தூரம் கொஞ்சநஞ்சமன்று இருவரையும் ஒப்பிட்டுப் பார்ப்பது மிக மிக அறிவீனமாகும். அது நேர்மையற்ற செய்கையுமாகும். தம் வாழ்நாளில் ஒழுகி, மக்களுக்கு உணர்த்திய மிக விழுமிய ஒழுக் கங்களை அவர் மக்களிடையே கண்டதுண்டா? மிக இழிந்த மனம் கொண்டோர் இடையேதான் மிக மிக உயர்ந்த ஞானக்கொழுந்து தோன்றுகிறது. லௌகீக மனமுடையோரிடையேதான் ஆன்மீகத்தின் கொடு முடி எழுகின்றது. தம் நண்பரோடு அமைதியாகத் தத்துவம் பேசிக்கொண்டே தம் மரணத்தைத் தழு விக்கொண்ட சாக்ரடீசின் இறுதிக்கும், மக்களின் பாவநீக்கத்தின் பொருட்டு—அவர்களின் துன்பங்கள் அழிந்து ஒழியும் பொருட்டுத் தம்மையே ஒப்புக் கொடுத்துச் சிலுவையில் அறையப் பெற்றுப் பல கொடுந்துன்பங்களுக்கு ஆளாகித் தம்மைத் துன்புறுத் தியவர்களின் குற்றங்களுக்காக இறைவனிடம் பாவ மன்னிப்பை இரந்துவேண்டி, தம் வாழ்நாள் இறுதி யைத் தழுவிய இயேசுவின் மரணத்துக்கும் இடையே யுற்ற ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்ந்தால், சாக்ர டீஸின் மரணம் இயேசு கிறிஸ்துவின் மரணத்தைப் போன்று அத்துணைத் துன்பங்கள் நிரம்பியது அன்று என்பது புலனாகும். தம் மக்கள் பலரால் அவமதிக்கப் பட்டு—ஏளனமாகப் பேசப்பட்டு—அனைவரின் சாபங் களையும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டு — கட லினும் மிகப் பெரிய வேதனைகளைப் பொறுமையோடு தாங்கிக்கொண்டு மரணத்தைத் தழுவிக்கொண்ட இயேசு கிறிஸ்துவின் மரணத்தைப் போன்றது அன்று—பயங்கரமானதன்று சாக்ரடீஸின் மரணம். சாக்ரடீஸ் பெற்ற வாழ்வும் முடிவும், ஒரு ஞானிக்கு ஏற்படக்கூடிய வாழ்வுக்கும் முடிவுக்கும் நிகரானது

என்று வலியுறுத்திக் கூறவந்தவர் "ஆகுல நீர பிற" என்றார் பிறரால் தான் அறியப்பட்டு அவரால்தான் போற்றப்பட வேண்டும், அல்லது புகழப்பட வேண்டும் என்னும் கருத்தை உள்ளத்தே கொண்டு, ஆரவாரத் தன்மையுடைய பேச்சாலும் நடிப்பாலும் தன்னைக் காட்சிப் படுத்திக்கொள்ள ஒருவன் விரும்புவானேயானால், அது அறநெறியாகாது என்று இடித்துரைத்தார் அப்படி யென்றால் மனத்தைத் தூய்மைப் படுத்துவது எவ்வாறு? இவ்வினாவிற்கும் விடை கண்டார் வள்ளுவப் பெருந்தகை.

"அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்"

என்று அறத்திற்கு இலக்கணம் வகுத்து, இந் நான்கு தீமைகளும் மனம், வாக்கு காயம் ஆகிய மூன்று கரணங்களாலும் உண்டாகும் வாக்கினாலும், காயத்தினாலும், உண்டாகும் தீமைகளுக்கும் மனமே மூலமாகும். மனத்தால் தீமைகள் நேராவண்ணம் காத்துக் கொள்ள வேண்டுமானால், அழுக்காறு, அவா, வெகுளி, கொடுஞ்சொல் ஆகிய நான்கு தீமைகளில் இருந்து தன் மனத்தைத் தடுத்துக் காத்துக்கொள்ள வேண்டும் என்றார்.

உள்ளத்தால் நிகழும் தீமைகளில் முதன்மையானது அழுக்காறு. அதாவது பொறாமை என்பது. பிறருடைய நல்வாழ்வு கண்டு அவரது முன்னேற்றத்தைக் கண்டு அதனைப் பொறுமல் தன்னுள் மனம் புழுங்குவது தான் பொறாமை எனப்படும். மனிதன், தன் வாழ்நாளில் புரியும் அத்தனைத் தீமைகளுக்கும் தலையானதாக விளங்குவது பொறாமை. பொறாமையின் காரணமாக அவா, வெகுளி, இன்னாச் சொல் இவை நான்கும் கூடவே தோன்றுகின்றன. மெய், வாய், கண் மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளின் வாயிலாக ஏற்படும், உணர்வு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை, ஆகிய ஐந்து புலன்களின் காரணமாக ஏற்படும் ஆசா பாசங்கள் இன்பங்கள் முதலிய வற்றின் மேல் மனத்தைச் செலுத்தி விடுவதால் இக் குற்றங்கள் இயல்பாகவே தோன்றுகின்றன நல்லுணர்வு, நற்செயல், நற்காட்சி, நன்னாற்றம் நற்சொற் கேட்டல் ஆகிய

நன்னெறிகளைக் கடைப் பிடித்து. வாழ்வோரைக் கண்டால் அவரிடம் வெறுப்புக் கொள்வதும்: அவ்வெறுப்பின் காரண மாக அவர் மேல் கடுஞ்சொறகளை வீசுதலும ஆகிய தீமைகள். யாவும், தூய்மையற்ற மனத்தாரிடையே தோன்றி விடுகின்றன மனம, வாக்கு, காயம் ஆகியவைகளால உண்டாகும் குற்றங் களாகிய (அழுக்காறு, அவா, வெகுளி. இன்னுச் சொல்) இவை நான்கையும் அறவே அகற்றி தூய்மையான வாழ்வை— துயரற்ற வாழ்வை நடத்தும்படி அறிவுறுத்துவதே வேதங்கள்.

மனத்தைத் தன்னைத் தானே தூய்மைப படுத்திக் கொள் ளாத எவனும—தூய்மைப படுத்திக் கொள்ள முயலாத எவனும் அறநெறியில தனனை நிலைநிறுத்திக் கொள்ள இயலாத எவனும் உலகத்தில் சிறந்தவனுகக் கருதப்பட மாட்டான். இவவுண் மையை நுட்பமாக எடுத்துக் காட்டிய வள்ளுவப பெருந்தகை; "மனத்துக் கண் மாசிலனுதல் அறம்" என்றும "அழுக்காறு, அவா, வெகுளி, இன்னுச் சொல ஆகிய நான்கு குற்றங்களை யும் மனத்துள்ளிருந்து நீக்குவதே அறம்" என்றும "அவற்றை நீக்காது சொல்லலாலும, வேட்டதாலும, நடிப்பன வெல்லாம. ஆரவாரத் தன்மை யுடையன என்றும் விளக்கினுர்

இந்து சமயத்தார் போற்றிப புகழ்ந்து வழங்கிவரும வேதங் கள் நான்கினுள் முதலில் நிற்பது 'இருக்கு' வேதமே அவ் வேதத்தில் "இரத்தம சிந்தாமல யாரும முனிவர் வரிசையில நிற்பதற்கு அருகதை யுடையவர்கள அல்லர்" என்று கூறுவ தோடு, பத்துவகைத் தியாகங்களை நூ புரிவதற்குத் தம்மைத் தாமே ஆளாக்கிக் கொணடு, அல்லல்கள அனைத்தையும மன வேதனையின்றி இன்பம என்று ஏற்று அநுபவிக்க வேண்டும்; அத்தகைய மன உறுதி கொண்டவனே ஆண்டவனை ஆரா திக்கும தகுதி உடையவன ஆவன்; ஆலயம அமைத்து வழி படத் தக்கவன ஆவன, அத்தகைய மகான ஆட்டுக் குட்டி யைப போன்று தனனைத் தானே பலி கொடுத்துக் கொள்ளச் சித்தமாய் இருத்தல வேண்டும" என்று கூறுகிறது.

அவ் வேதத்தில கூறப்பட்ட பத்து வகைத் தியாகங்களா வன.

1. "அந்த ஆட்டுக் குட்டி பழுதற்றதா யிருக்க வேண்டும்.

2. உலகத்தின் சாபத்தைச் சுமந்து தீர்ப்பதற்கு அடையாளமாக, அந்த ஆட்டுக் குட்டியின் தலையில் முட்செடி சூட்டப்பட வேண்டும்!

3. பலி மரத்தோடு சேர்ந்து அப்பலி ஆடு கட்டப்பட வேண்டும்!

4. நான்கு கால்களிலும் ஆணிகள் கடாவப்பட்டு இரத்தம் சிந்தப் படவேண்டும்!

5 ஆட்டின் மீது போர்த்தப்பட்டுள்ள துணி பிறரால் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும!

6. அந்த ஆட்டின எலும்புகளில ஒனறு கூட முறியப படக்கூடாது

7. அந்த ஆட்டுக்குட்டிக்குச் சோமபானம கொடுக்கப படவேண்டும் !

8. அந்த ஆட்டின மாமிசம் உண்ணபபட வேண் ‛ '

9 அந்த ஆடு கொல்லப்பட்டப்பின் உயிரோடு வர வேண்டும்.

10. இரத்தம் சிந்தத் தக்கதாகத் தெய்வம் மனிதனாக அவதரிக்கவேண்டும் !"

இவைகள் 'இருக்கு' வேதத்தின் சித்தாந்தம. அந்தச் சித்தாந்தத்தினபடி சித்திரித்துக் காட்டவேண்டிய மூல புருஷர் யாராக இருக்க முடியும். நமது நாட்டிலுள்ள எந்த அவதாரப் புருஷர்களாவது மேற கண்ட 'இருக்கு' வேதத்தின் நிபந்தனைகளை நிறைவேற்றி மானிடக்குலத்தின பாவங்களைச் சுமந்து தீர்க்கின்ற தேவ ஆட்டுக் குட்டியைபபோன்று பலியிடப்பட்டு அமரவாழ்வு அடைந்த மகானகளைப பறறி நாட்டு வரலாறறுப புராண இதிகாசங்களில் கண்டதில்லை. ஆனால் நானிலத்தின் மத்தியப் பகுதியான பாலஸ்தீன நாட்டில இன்றைக்கு 1969 ஆண்டுகளுக்கு முனனர், அவதரித்துள்ள ஒரு மகான், புனிதன தேவன மனிதக்குலத்தில் பிறந்து, இருக்கு வேதத்தில் கூறப்பட்டுள்ள அனைத்துத் தியாகங்களையும் புரிந்து உலகத்தின் சாபத்தையும் பாவத்தையும் தானே சுமந்து தீர்க்கின்

தேவாட்டுக்குட்டியைப்போல பலியிடப்பட்டார். என்று அந் நாட்டுச் சரித்திரமும்; வேதமும் இயம்புகின்றன 'இருக்கு' வேதத்தில சூத்தப் படலத்தில் கூறியதுபோல

1. அவர் மாசற்றவராக இருந்தார். அவரிடத்தில் பாவம் இருந்ததில்லை. அவர் பரிசுத்தத் தெய்வமாக இருந்தார்!
2. அவரது தலைமீது முள் முடி சூட்டப்பட்டது!
3. சிலுவை மரத்தோடு அறையப்பட்டார்!
4. சிலுவை மரத்தில நான்கு இடங்களில மூன்று ஆணி களால் அடிக்கபபட்டு, மானிடச் சமுதாயத்தின பாவ மன்னிப்பிற்காக இரத்தம சிந்தினர்!
5. அவருடைய ஆடைகள் பிறரால் பகிஷ்கரிக்கப பட்டன!
6 அவருடைய எலும்புகளில ஒன்றும் முறியடிக்கபபட வில்லை!
7. அவருக்குச் சோமபானத்திற்குப் பதில் அதற்குச் சமமான காடி கொடுக்கப்பட்டது!
8. அவருடைய இறைச்சியைப் புசித்து இரத்தத்தைப பானம் பண்ணுவதற்கு அடையாளமாகப புனித நற கருணை என்னும் திவ்யபோஜனம் அவரால் ஏற்படுத் தப்பட்டு அவரது அடியார்களால் இன்றளவும் அநு சரிக்கப்பட்டு வருகிறது.
9. அவர் உலகத்தின் பாவங்களின இரட்சிப்புத் தன் மைக்காகச் சிலுவையில் ஓர் ஆட்டைப்போல கொல் லப்பட்டு இரத்தம் சிந்தி அடக்கம் செய்யப்பட்ட பின மூன்றும் நாள் உயிரோடு எழுந்தார்.
10. அவர் தம்மை விசுவாசிக்கின்ற புத்திமான்களின் பாவங்களைபபோக்கி, அவர்களின் இதயங்களில் கொலுவிருந்து அவர்களைப் பரிசுத்தவான்களாக்கிப் பரலோகச் சாம்ராஜ்யத்திற்கு அதிபதிகளாக்கினர்.

இப்போது சொல்லுங்கள் யார் அந்தப் புண்ணியப் புருஷர்! மானிட உருவில் உலாவிய தெய்வம்! பரிசுத்த தேவ அவதாரம்! எல்லாம் கிறிஸ்துவே! கிறிஸ்துவே!! கிறிஸ்துவே தான்!!!

"வெள்ளாட்டுக்கடா, இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய சொந்த இரத்தத்தினால் நித்திய மீட்பை உண்டு பண்ணினார்.

(எபிரேயர் 9 12)

ஆண்டவர் மற்ற மிருகங்களையோ மற்றும் பிற பிராணிகளையோ பலி கேட்கவில்லை தம்மைத்தாமே பலியாக்கிக்கொண்டார். ஆனால் நாம் எதை எதையோ பலி கொடுப்பதாக நினைத்துக் கொலைத்தொழில் புரிந்து அந்த அக்ரமச் செய்கைகளின் காரணமாகப் பாவங்களைப் பெருக்கி நரகக் குழியில் விழுந்து தத்தளிக்கிறோம். அப்படிப்பட்ட நம்முடைய பாவங்களைச் சுமந்து இரட்சிப்பைத் தருகின்ற தேவாட்டுக் குட்டியாகத் தம்மைத் தாமே சிலுவையில் பலியிட்டுக்கொண்ட பரிசுத்தத் தெய்வ அவதாரமாகிய இயேசு கிறிஸ்துவின் தனித்தன்மையில் அல்லாமல் வேறு எவ் வழியிலும் ஒருவன் முக்தி அடைய முடியாது

ஆகவேதான் கிறிஸ்துவின் புனிதவாக்கு இன்று புவிக்கோர் ஞான விளக்காக ஒளி வீசிக்கொண்டிருக்கிறது

மகிமையின் பாரம்

உலக வரலாற்றினை நாம் ஆழ்ந்து படிக்கின்றபோது எத்தனையோ பேரரசர்கள், வீரர்கள், இராஜ தந்திரிகள், அரசியல் வித்தகர்கள் ஆகிய பலர் நம் உள்ளங்களிலே வந்து அமர்ந்து பின் மறைந்து விடுகிறார்கள் ஆம் நேற்று இரவு உணவோடு கலந்து உண்ட பதார்த்தங்களை இன்று மறந்து விடுகிறோம். அத்தகைய மறதிக்குணம் படைத்த நாம் நமக்காக, நமது மானிடக் குலத்தின் நல் வாழ்விற்காகக் கொடுந்துன்பங்களை அனுபவித்து, தம்மைத்தாமே பலியாக்கிக் கொண்ட கிறிஸ்து பெருமானை மறப்பது என்பதும் இயல்பே

யாகும். ஆனால் அத்தகைய பெருந்தகையாளரை மறந்தவர் யாரும் உய்வுகாண கூடாதவர்கள் என்பது உறுதி உறுதி உறுதியேயாகும்.

' எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு''

என்ற வள்ளுவரின் குறளைப் படித்திருந்தும். அதையும் காலப் போக்கில் மறந்து விடுகிறோம் அது மட்டுமா இந்த நாட்டிற்குச் சுதந்திரம வாங்கித்தந்த காந்தி அடிகளை எத்தனைபேர் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறோம் சாமபார் மணமாக இருக்க வேண்டுமென்று சேர்க்கபபட்ட கறிவேபபிலையை உணவு உட்கொள்ளும்போது தனியாக எடுத்து எறிந்து விட்டு, அதன சேர்க்கையின நன்மையையே மறந்து. உணவை உண்டு முடித்து விடுவதுபோல, நமது தேவைக்கு அவசியமானபோது, அந்த மோகனதாஸ கரம சந்த காந்தியின் பெயரைப் பயன படுத்திக் கொள்ளுகிறோம் பிறகு அவர் சொன்ன எலலா அறிவுரைகளையும கடலில் கலக்கபபெறற ஆற்று நீரெனப் பாழ்படுத்தி விடுகிறோம்.

இரத்தம் சிந்தாமல் எந்த நாடும விடுதலை அடைய முடியாது. பெறற விடுதலையை இரத்தம் சிந்தாமல காப்பாற்றிக்கொள்ளவும முடியாது. விடுதலையை அடைந்த பின்பு ஒரு நாடு தனனுடைய இலட்சியத்தையும ஈடேற்றிக் கொள்ள முயறசிக்கவேண்டும. அதற்கு ஒரு பேரியக்கமே தேவையாகும். அந்த இயக்கம எபபடிபபட்ட சக்திவாய்ந்ததாக இருக்கவேண்டும்? அந்தச் சக்திகளை எப்போது? எபபடி? எந்தவகையில் பயனபடுத்தவேண்டும் எனபனவற்றைச் சிலம்புச்செல்வர் ம பொ. சி. அவர்கள் கூறும்போது.

''இலட்சியத்திற்காக ஒரு தனி மனிதன் தன் உயிரையே தியாகம செயதுவிடத் துணிவதுபோல ஓர் இயக்கமும் கூடத் தன இலட்சியத்தின் வெற்றிக்காகத் தன்னைத் தியாகம் செய்யவேண்டிய அவசியம நேர்ந்தால அதையும் செய்யும் துணிவு அந்த இயக்கத்திற்கு இருக்கவேண்டும் உயர்ந்த இலட்சியங்களுக்காகத்தான ஓர் இயக்கம் தோன்றுகிறது

அந்த இலட்சியங்களின் வெற்றிக்காகத் தான் அந்த இயக்கம் வாழ்கின்றது. ஒரு நாளைக்கு வெற்றியின் ஒளியிலேயே அந்த இயக்கம் இரண்டறக் கலந்து விடுவதும தவிர்க்க முடியாததாகி விடலாம்''

(செங்கோல் 13-8-67)

என்று ஒரு தெளிவான அரசியல விமர்சனம செய்கிறார் அவ் வழியேதான நெப்போலியனை கடைப்பிடித்து, மனித சக்தியே மேம்பட்டது என நினைத்து மனிதனே எல்லா வெற்றியிலும் சக்தி வாய்ந்தவன் என்று மனிதனை உயர்த்தி, அவனைப் படைத்த ஆண்டவனின ஆற்றலையும் அலட்சியம் செய்த பேரரசர்களில முதலிடம் வகித்தவனாக விளங்கினான

இரத்த ஆறு கரைபுரண்டு, அவ்வெள்ளத்தில் மனிதப் பிணங்களை மிதக்கவிட்டு, அதையே பார்த்துப பார்த்து ரசித்த மன்னர்களின முதல வரிசையிலே வைத்துப பார்க்கத்தக்கவன் நெப்போலியன்.

அவனுடைய வாழ்க்கை வரலாற்று ஏடுகளைச் சற்றே புரட்டிப பார்ப்போமேயானால, ஈட்டி, அம்பு, கேடயம், பீரங்கி, குத்து, வெட்டு, இரத்தம இவைகளே வரிக்கு வரி காணப் படும் அதுவே அவன சரித்திரம! அதுவே அவனது முடிவு மாகவும் இருந்தது. அத்தகைய பேரரசனான நெப்போலியன் உலகாளும கிறிஸ்துவைப்பற்றிக் கூறும்போது,

''இயேசு கிறிஸ்துவின பிறப்பும் வாழ்க்கையும் அவரது வரலாறும மர்மத்தை ஓரளவு. வெளிப்படுத் தும் அவருடைய ஆழ்ந்த ஞானம் மிக்க படிப்பினை களும அவருடைய விசேஷமான குணங்களும் அவ ருடைய திருவுருவத்தின் தோற்றமும் அவரது சொல் லரிய இணையில்லாத் தன்மையும், மக்களுடைய நெஞ்சில, அவர் செலுத்தும் ஆன்மீக அரசாட்சியும், நாடுகளினூடும், யுகங்களினூடும், அவர் பவனி வருகின்ற மகிமையும் என்னால் விளங்கிக் கொள்ளக் கூடாத ஒரு பெரும் இரகசியமாகவே இருக்கின்றது! இந்த உண்மையை என்னால் மறக்கவே முடியாது. இதில் மனிதனுக்குரியது ஒன்றையும் காணேன்.

எவ்வளவுக்கெவ்வளவு, அவரை நான ஆராய்கின
றேனே அவ்வளவுக்கவ்வளவு அவரிடத்திலுள்ளவை
யெல்லாம் எனக்கு மேற்பட்டதாய்க் காணபபடு
கின்றன. அவரது மகிமையின் பாரம் என்னை அப
படியே நசுக்கி விடுவதுபோல இருக்கிறது''

என்று எடுத்துரைத்தான். அவ்வளவு ஆழ்ந்த கருத்தோடு கூறியுள்ளான அந்தப் பேரரசன்!

அந்நிய நாட்டு அரசர்களின் ஆயுதப் பலத்தின் பாரம்—இராணுவ அரங்கிலே அடுக்கி வைத்திருக்கும ஆயுதங்களின பாரம்—நாட்டு மக்களின அனறாடத் தேவைகள் நிதத நிததம தடைபபட்டுக்கொண்டு, அவை தீர்க்க முடியாத பிரச்சனை களாகிவிட்ட பெரும்பாரம், அரசர்களின் பகைக்குணங்கள் பெருகப பெருக அவறறை அழிக்க முடியாமல பொதிந்து கிடக்கும பொலலாத பாரம—சூதும் வஞ்சகமும, நிறைந்த அரசப்பீடத்தில் அடுக்கடுக்காகத் துனபங்களும துயரஙகளும் மலிந்து கிடக்கினற ஆட்சியின பாரம—இதறகிடையிலே, தனக்குப பினனை யார் அரசுரிமையை ஏறபது எனற கவலை யின தீராத பாரம- பல கட்சிகள தோனறிச் சிக்கலினமேல சிக்கலைத தோறறுவிக்கும ஆபத்தான பாரம்—இவ்வளவு பாரங்களையும் துரும்பென மதித்துத் தூக்கி எறிந்து, சிறிதும் கவலையினறி ஆட்சி செலுத்திய பேரரசன நெப்போலியனுக்குக் கிறிஸ்துவின மகிமையாகிய பாரத்தைச் சுமக்கக் கூடிய வலிமை இலலை எனறு சொல்லும அளவுக்குக் கிறிஸ்துவின மகிமைப பாரம் அவ்வளவு சகதியுடையதா? அபபடிப்பட்ட அரிய அதிசயம நிரமபியதா! ஆம! எலலாம நிறைந்த சக்தி தான கிறிஸ்துவின சகதி.

''ஆக்கிவைப்பானு மழித்து வைபபானு மென்னுபத் தெல்லா
நீக்கி வைப்பானு நிலைதது வைபபானு நினைத்தபடி
தாக்கி வைபபானுந் தடுத்து வைபபானுந் தருங்கடனிற்
பாக்கி வைப்பானும் வையானு மொன்முன பராபரனே!''
(பராபரன் மாலை)

என்று கிறிஸ்துவின் வல்லமையை வேதநாயகம் சாஸ்திரி பாடியுள்ளார்.

நம்மைவிட அறிவும் ஆற்றலும் நிறைந்த பெரியோர்களின் தன்மையை நாம் எண்ணிப் பார்க்கின்றபோது, நம்முடைய செய்கைகள் எவ்வளவு சிறு பிள்ளைத்தனமாகவும் சிறு துரும்புக்கு நிகராகவும் காணப்படும் அப்படித்தான் நெப்போலியனுக்கும் தெரிந்தது; அப்படித்தான தெரியும்; தெரியவும வேண்டும். மறைந்து மண்ணோடு மண்ணாக மடியக்கூடிய சாதாரண மனித வர்க்கத்தில தோன்றிய சாமானிய அறிஞர்களிடமே நாம் இபபடிப்பட்ட பக்தியையும் விசுவாசத்தையும மரியாதையையும் செலுத்துகிறோமென்ருல, மனிதக் குலத்திறகே மனுவாய் உதித்த மகாதேவனிடம் எவ்வாறு நாம் பக்தி செலுத்த வேண்டும்! அறிஞர் தாமஸ்-அ - கெம்பிஸ் கூறுகிருர்.

"உமமை (கிறிஸ்துவை) நேசித்து நனமைகளை ருசித்தவனுக்கு உமது சித்தம தனனில நிறைவேறுகிறதினுலும், நீர் அவனை நித்தியத்திறகென்று தெரிந்து கொணடதினுலும் உண்டாகிற சந்தோஷத்திற்கு மிஞ்சின சந்தோஷம் வேறெதுவும் கிடையாது. இதனுல அவனுக்கு ஆறுதலும் மனத்திருபதியும் உண்டாகிறதினுல எலலாரிலும் பெரியவனென றெண்ணப்படுவது எபபடி மறறவர்களுக்குப் பிரியமோ, அபபடியே எலலாரிலும் சிறியவனென றெண்ணபபடுவது அவனுக்குப் பிரியம எலலாவறறிலும மேலான இடத்தில மறறவர்கள் அடையும மனச்சமாதானமும் திருபதியும் இவனுக்கு எல்லாவறறிலும கீழான இடத்தில உண்டு; மறறவர்களைவிட அந்தஸ்திலும கனத்திலும் பெரியவர்களெனறு எண்ணப்படுவதில அவர்களுக்கு எவவளவு சந்தோஷமுண்டோ, அவ்வளவு சந்தோஷம அறபனெனறும, நீசனென்றும் உலகத்தின் எந்தவிதப் பேர்ப பிரஸ்தாபமும அற்றவனென்றும் எண்ணபபடுவதில அவனுக்குண்டு.

உமது சித்தமும், உமது மகிமைப் பிரதாபத்தைப்பற்றிய வாஞ்சையுமே எலலாவற்றிற்கும் மேலாக எண்ணப்பட வேண்டும் நாங்கள் பெறுகிறதும், பெறப் போகிறதுமான எந்த ஈவுகளைப் பார்க்கி

லும், அதுவே எங்களுக்கு விசேஷித்த ஆறுதலையும் சந்தோஷத்தையும் அளிக்கும்"

(கிறிஸ்துநாதர் அனுசாரம்)

ஆம்! ஆறுதலையும், சந்தோஷமும் அடையும் ஒரே இடம் இயேசுவின் பொற்பாதமே

ஆய்வின் முடிவு

சமுதாயச் சீர்திருத்த மென்பது இன்றைய நாளில் சர்வ சாதாரணமாகி விட்டது காரணம் சீர்திருத்தம் என்ற பெயரால் பல சீரழிவுகள் நடந்துகொண்டு வருவதை நாம் நன்றாக அறிவோம். சீரழிவுகள் மட்டுமன்றி, சிறுகச் சிறுக செல்வத்தைச் சேர்த்துச் சீரும் சிறப்புமாக வாழுகின்ற பல சீர்திருத்த வாதிகளையும் நாம் பார்க்கிறோம். நாட்டிலே பழமையின் கோட்பாடுகள் ஆலென ஓங்கி வளர்ந்து, ஆறெனப் பரந்து ஓடி, அரணெனச்சூழ்ந்துவிட்டிருந்த அந்தக் காலத்திலும் பல சீர்திருத்தச் செம்மல்கள் தோன்றினார்கள். திரு தயானந்தர் இராமகிருஷ்ணர். இராசாராம் மோகனராய் இராமலிங்க அடிகள் முதலிய பெரியார்கள் தோன்றினார்கள். அவர்களின் சொல்லும் செயலும் மனிதச் சமுதாயத்தின் அழிவை மாற்றி அற்புத அருள் நெறியை வளர்த்திட்ட அரும் பெரும் ஞானமார்க்கங்களாகத் திகழ்ந்தன. அவைகளில் பிரம்ம சமாஜம் என்ற ஞான சபையை ஏற்படுத்தி அதை உலக நாடுகளிலெல்லாம் பரவச் செய்தனர் அன்று வாழ்ந்து வந்த சான்றோர்கள். அப்போதிருந்த நிலையை தலைவர் ம. பொ சி அவர்கள் விளக்குகையில்,

> "இந்துக்களிடையே நிலவிய மூட நம்பிக்கைகள், சாதி வழிப்பட்ட உயர்வு-தாழ்வு மனப்பான்மைகளை, அடியோடு அழிக்கவும் புரட்சிகரமான சீர்திருத்த வாதிகள் தேவைப்பட்டனர்.
>
> இந்துக்களின் குருமார்களாகிய வைதிக அந்தணர்கள், புறச்சமயங்களுக்கு எதிராக இந்துக்களிடையே போர் வெறியைத் தூண்டிவளர்த்தனர். அதற்கு மேல் இந்து மக்களிடையே சமத்துவத்தை

ஏற்படுத்தவோ, சமரச மனோபாவத்தை வளர்க்கவோ தத்துவச் சண்டைகளைத் தவிர்க்கவோ. அவர்கள் துணியவில்லை. சுருங்கச்சொன்னால் சமயங்களும் சமயாச்சாரியர்களும் கால மாறுதலை உணர்ந்து செயற்பட முன் வரவில்லை. இந்து மதத்தில மறு மலர்ச்சியைக் காணச் சந்தர்ப்பம் அவர்களை நிர்பந்தப் படுத்தியும், புரோகிதர்களும் குருமார்களும் மன மாற்றம் அடையவில்லை புறத்தேயிருந்து, வந்த அந்நியமத ஆதிக்கத்தை, அது விளைத்த அநீதி களைக்கண்டு ஆத்திரங்கொண்டு அவற்றிற்கு எதி ராகப் போர்புரிய மக்களைத் தூண்டிவிட்டனர்; இந்து மன்னர்களும் மதவாதிகளும், ஆனால் தங்கள் மக் கள் மீதே தாங்கள் செலுத்திவரும் ஆதிக்கத்தை ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அவர்களுக்கு இழைத்து வரும் அநீதிகளை விட்டுத்தொலைக்க அவர்கள் விரும் பினாரல்லர் ”

(வ-க-ஒருமைப்பாடு)

எனபதாக நமக்குத் தெரியபபடுத்துகிறார். அப்படிப்பட்ட சூழ்நிலையில இராஜாராம மோகனராய் அவர் வாழ்ந்த 19-ஆம் நூற்றாண்டின துவக்கத்தில வங்க நாட்டில மூடபபழக்க வழக்கங்களும சமுதாயக்கொடுமைகளும தலைவிரித்தாடிக் கொண்டிருந்தன. அவற்றைக கண்ட இராஜாராம் மோகன் ராயின உளளம கொதித்தது. மிகத தீவிரமாக வங்கத்தில் நடந்த சமுதாயக் கொடுமைகளை எதிர்த்துச் சாடினார். அவர் முழு மூச்சோடு போராடிககொண்டிருந்த காரணத்தினாலும் அவருடைய கொளகைகள பல வெற்றி அடைந்தன. அந்தச் செயதியையும சிலமபுச செலவா ம. பொ சியே கூறுகையில்.

“ இராஜாராம மோகனராயின பிரம்மசமாஜ இயக்கம வங்காளததிலிருந்த படித்த மக்களிடையே நலல செல்வாக்குப பெற்றிருந்தது. தனனைப 'பிரம்ம சமாஜி' என்று சொல்லிக்கொள்வதில் படித்தவர் களிலே ஒவவொருவரும பெருமை கொண்டனர். பாரதத்தில மட்டுமனறி அயல் நாடுகளிலும் பிரம்ம சமாஜத்தின் கொளகைகள் பரவி இராம்மோகனரின்

சீடர்களுடைய எண்ணிக்கை வளர்ந்தது. கல்வித் துறையிலும் சமய-சமூகத்துறைகளிலும் மகத்தான மாறுதல்களை ஏற்படுத்த பிரம்ம சமாஜத்தால் முடிந்தது.

குறிப்பாகக் கணவன் இறந்தவுடனே மனைவியை உடன் கட்டை ஏற்றிக்கொல்லும் கொடுமையை ஒழிக்கும் சட்டம் தோன்றியதற்கு இராஜாராம் மோகன்ராய் அவர்களுடைய பெரு முயற்சியே காரணமாகும். இன்று பாரதத்திலோ வங்க மாநிலத்திலோ, பிரம்மசமாஜம் போதிய வலுவுடன் இயங்கவில்லை எனினும் பாரதத்தின் வரலாற்றில் பிரம்ம சமாஜம் மதிப்பிற்குரிய இடத்தைப் பெற்றுவிட்டதை யாரும் மறுப்பதற்கில்லை.

(வ. க. ஒருமைப்பாடு)

பத்தொன்பதாம நூற்றாண்டின வரலாற்றில் பிரம்ம சமாஜத்தின நாயகரான இராம் மோகனரின புகழ் திக்கெட்டும் பரவி நின்றது. அத்தகைய சீர்திருத்தத்தை மதத்திலும் நுழைத்து ஒரு மாபெரும் புரட்சியை உண்டாக்கிய இராஜாராம் மோகன்ராய் அவர்கள் கிறிஸ்துவைப பற்றிக் கூறும்போது.

"மத உண்மையைபபற்றிய எனது நீண்ட நாளைய ஆராய்ச்சியின பலன் யாதெனில், எனது அறிவிற்குட்பட்ட வரையில் மற்ற எல்லாப் போதங்களையும் விட இயேசு நாதருடைய போதங்கள் நன்னடத்தைக்கு உதவுவனவாகவும் பகுத்தறிவு படைத்த மக்களுக்குப் பொருந்துவனவாகவும உள்ளன. என்ற உண்மையை நான கண்டு கொண்டதுதான.

இந்தத் தூய்மையான சட்டங்கள் அடங்கிய மதமும் சன்மார்க்கமுமானது மக்களுடைய எண்ணங்களை ஒரே கடவுளிடம் திருப்பிவிடும் முறையில் மிக நேர்த்தியாக வரையறுக்கப்பட்டுள்ளது. மேலும் மனித சமுதாயமானது கடவுளுக்கும் தங்களுக்கும் பிறருக்கும் செலுத்த வேண்டிய கடமைகளை நிறைவேற்றி, நல நடத்தையை ஒழுங்கு படுத்த இயேசு

நாதரின் போதகங்கள் மிகவும் பொருத்தமாக உள்ளன."

(பாரதத்தின் தற்போதைய மத இயக்கங்கள்)

என்று தம் உள்ளத்தில் எழுந்த உண்மை எழுச்சியை ஒளிவு மறைவின்றி எழுதியிருக்கிறார். அவருடைய அறிவுக்குப் பொருந்திய வரையில் எல்லாப போதங்களையும் விடக் கிறிஸ்து வின் போதகங்களும் ஒழுக்கமானகொள்கைகளும மக்களுக்குத் தேவைப்படுவனவும் பொருத்தமானவையுமாகும். என்று அழுத்தந்திருத்தமாகச் சொல்லுகிறார் அவர் போற்றிக் கடைபிடித்த இந்து மதத்தையும் உள்ளிட்டே அப்படிச் சொலலுகிறார். அது மட்டு மனறு,

"ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி
அலையும் அறிவிலி காள்-பல்
லாயிரம் வேதம் அறிவொன்றே தெய்வ
முண்டாமெனில கேளீரோ ?
மாடனைக் காடனை வேடனைப போற்றி
மயங்கும் மதியிலிகாள் ! எத
னூடும் நின்றோங்கும் அறிவொன்றே
தெயவ மெனறோதி யறியீரோ ?"

என்று அமரகவி பாரதியார் கூறியிருப்பதனையும் ஆராய்ந்து உணர்தல வேண்டும். "பல தெய்வங்களை வணங்கி மனத் தைப பலவிதங்களில பறிகொடுக்கும மனித சமுதாயத்திற்குச் சனமார்க்க எண்ணங்களை, ஒரே ஆண்டவனிடம நிரந்தரமாக நிலைக்கவிடும் முறையைக் கிறிஸ்து வேதம் மிக நேர்த்தியாக அமைத்துக் கொடுத்திருக்கிறது" என்பதை இராம்மோகனர் மிகத் தெளிவாகச் செகத்தோருக்குத் தெரியபபடுத்துகிறார்.

இறைவன ஒருவரே

சிறந்த அறிஞர்களையும் கலைஞர்களையும் கவிஞர்களையும், வீரர்களையும், விவேகிகளையும், தியாகிகளையும் ஏன் ஞானி களையும் கூட ஈன்றெடுத்த பெருமைக்குரிய நாடுகளில் வங்க மாநிலமும் ஒன்று. அரசியல பிரச்சினைகளிலிருந்து அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகள் வரையில், மிகத் தெளிவான சித்தாந்

தங்களை உருவாக்கித் தங்களுக்கு மட்டுமன்றி தரணி வாழ் மக்களுக்கும் வழிகாட்டும் திறமை படைத்த மாநிலங்களில் வங்கமும் ஒன்றென்றால் அது மிகையாகாது.

அம்மாநிலத்தில் 'கமார் புக்கூர்' என்ற சிறு கிராமத்தில் கி. பி 1836-ஆம் ஆண்டு இராமகிருஷ்ண பரமஹம்சர் பிறந்தார் சிறந்த பக்திமான் ஆண்டவனிடம் அபாரத அன்பு. ஆனால் ஒரு கடினமான வைராக்கியத்தைப் பூண்டிருந்தார். அது என்ன ?

பெரும்பாலான மதகுருக்கள் அல்லது மகான்கள் கடவுள் நம்பிக்கை—ஆண்டவன் வழிபாடு இவைகளிலேயே மனத்தைச் செலுத்தி, மக்களையும் அதன் வழி நடக்க, ஆவன செய்தார்களே தவிர சமூகச் சீர்திருத்தத்தில் அவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை வைத்ததாகச் சரித்திரம் நமக்குச் சான்று கூற வில்லை ஆனால் ஒரு சிலர் தங்கள் எண்ண எழுச்சிகளை வீணில் அடக்கி வைக்காமல் வெளிப்படுத்தினார்கள். அந்த மகான்களில் இராமகிருஷ்ண பரமஹம்சரும் ஒரு வராவார்.

தங்கள் தங்கள் மதங்களையே பெருமைப்படுத்திக்கொண்டு மற்றச் சமயங்களைத் தாழ்த்தியும் கேவலப்படுத்தியும் பேசுவதை அறவே ஒழித்து, எந்த மதமாய் இருந்தாலும் அதனோடு பகைமை வளர்த்துக் கொள்ளாமல், சகோதர மனப்பான்மையோடு பக்திசெய்து முக்தி அடையச் செய்ய முழுமூச்சோடு பாடுபட்டவர் இராமகிருஷ்ணர்.

சாதிக் கொடுமைகளைக் கண்டு கண்கலங்கி, தாழ்ந்தவன்-உயர்ந்தவன், மேல்சாதி, கீழ்ச்சாதி என்ற தாழ்வு மனப்பான்மையை வேரடி மண்ணுமில்லாமல் மறைந்தோட அரும் பாடுபட்டவர் இராமகிருஷ்ணர்.

ஆண்டவனை வழிபட நாங்கள்தான் உரியவர்கள், ஆராதித்து அருச்சனை புரியவும் எங்களுக்குத்தான் உரிமை உண்டு, ஆகவே நாங்கள் சொல்லுவதுதான் வேதம் என்றெல்லாம் சொல்லிவந்த ஒரு சில அந்தணர்களின் வார்த்தைகளைக் கேட்டு வழிநடந்த மக்களைத் தடுத்து நிறுத்தி, வேதங்களையும் வேதாகம சாத்திர நூல்களையும் பாமர மக்களும் படித்துப் புரிந்து கொள்ளவேண்டும். மற்றவர்கள் சொல்லுவதைக்

கேட்டு வழிநடத்தல் கூடாது" என்ற முடிவுக்கு மக்களை அழைத்து வரப் பாடுபட்டவர் இராமகிருஷ்ணர்.

ஆண்டவன் ஒருவனே அவன் எல்லாவற்றிற்கும் எல்லாமு மாக இருக்கிறான். யானையைக் கண்ட குருடர்களின் நிலை யைப்போல, மக்கள் தாம் தாம் கருதும் கருத்தின்வண்ணம் கொள்கைகொண்டு திகழும் சமயங்களின் வாயிலாக அவரவர்க்குரிய வழிபடு கடவுளரை ஆராதித்து வணங்கி வந்தார்கள். தண்ணீர்தான சார்ந்துள்ள பொருள்களின் காரணமாகச் சுவையாலும் நிறத்தாலும் தேங்கி நிறதும இடத் தாலும மாறுபட்டது போலக் காணப்பட்டாலும், தண்ணீர் தண்ணீராகத்தான் காட்சி அளிக்கும். தேசம், நாடு, ஊர் இவற்றின காரணமாக மொழி வேறுபாட்டால வேறு வேறு நாமத்தைப பெற்றாலும் தண்ணீர் என்று ஒரு பொருளைத்தான் குறிக்கும். இக்கருததுபபறறிய இராமலிங்க அடிகளாரது வாய்மொழியை நோக்குவோம்.

"பொங்குபல் சமயமெனும் நதிகளெல்லாம
புகுந்து கலந்திட நிறைவாய்ப பொங்கி ஓங்கும்
கங்குகரை காணாக் கடலே எங்கும்
கண்ணுறக் காண்கின்ற கதியே அன்பர்
தங்கநிழல பரப்பி மயறசோலை யெல்லாம
தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச்
செங்குமுதம் மலரவரும் மதியே யெல்லாம்
செய்யவல்ல கடவுளே தேவதேவே"

யார் எப்படிச் சொன்னாலும் நாம் ஆண்டவனை எந்தப் பெயரில வழிபட்டாலும எல்லாம்வல்ல இறைவன் ஒருவனே.

நதிகள் யாவும் பறபல மலைகளிலிருந்தும இடங்களி லிருந்தும தோன்றிப் பின் நாட்டில பாய்ந்தோடி இறுதியில் கடலிடைக் கலப்பதுபோல் பல சமயங்களும் பல வேறு காலங்களில. நாடுகளில தோன்றி வளர்ந்தாலும் அவை குறிப்பன ஓர் இறைவனையே என்பதை மக்கள் மததியிலே பரபபிய பெருமை இராமகிருஷ்ண பரமஹம்சருக்கும உண்டு.

சாதிச் சண்டையை அடக்கி விடலாம். இனச்சண்டையை ஒடுக்கிவிடலாம்; ஏன? உலகச் சண்டையைக் கூட முடித்துச்

சமாதானம் செய்துவிடலாம். ஆனால் மதச்சண்டையை அடக்கி விடுவதென்பது அவ்வளவு சுலபமான செய்கை அன்று. அந்தச் சமயச்சண்டைதான் மாநிலத்தின் மாணிக்கம்; மனிதகுல ஒளிவிளக்கு மகாத்மா காந்தி அடிகளை நம்மிடையே இருந்து பறித்துச் சென்றது. அப்படிப்பட்ட மதத்தினூடேயும் ஒரு நிரந்தர ஒற்றுமையை ஏற்படுத்திச் சமரச சனமார்க்க நெறியை வளர்க்கபபாடுபட்டவர். இராம கிருஷ்ணர். அந்த உத்தமர் கிறிஸ்துவைப்பற்றிக் கூறும் போது,

> 'இறைவன் ஒருவரே இச்சொற்களின் உட் பொருளையும் வலியுறுத்தும் ஆற்றலையும் நீங்கள் உய்த்துணரக் கூடியவர்களாயின இயேசு உண்மையிலேயே இறை மகன் என உணர்த்து கொள் வீர்கள்''

என்கிறார் இயேசுகிறிஸ்து மனித உருவில பிறந்து இம்மண்ணுலகில் வாழ்ந்து பின மடிந்தாலும் அவரது தூயவாழக்கை நமக்குச் சிறந்த சிந்தனையைத் தூண்டுகிறது. மறறவர் புரிந்த தீய செயல்களுக்காகத் தமமைத் தாமே பலியாக்கிக் கொண்ட ஒரு தியாக வாழ்க்கையானது, உலகப்பற்றையும் பாசங்களையும் வேரோடு பறித்தெறிந்து என்றும அழியாத பெருவாழ்வைப் பெற்று கீர்த்தியின கொடுமுடியிலே நிறபவர் இயேசு கிறிஸ்து நாதர் ஒருவரேயாவர். ஆகையாலதான இராமகிருஷ்ண பரம ஹம்சர் இயேசுநாதரை இறைவனாகத தொழ வேண்டும என்று கூறினார். இராமகிருஷ்ணர் சமயங்களிடையே சன்மார்க்க நெறியைக் காணவும் வளர்க்கவும அந்நெறியை வழிநடக்கவும் பெருமுயற்சி செய்திருக்கிறார் என்பது இதனால் தெளிவாகிறதல்லவா !

**தீப்பொறி**

இன்று நாம் தேசிய கீதமான ''ஜனகணமன'' எனறு தொடங்கும் பாடலைப் பாடுகிறோம். அதை நினைக்கின்றபோது வங்கக் கவி இராஜசேகரர் ரவீந்திரநாத் தாகூர் நம் மனக்கண் முன்னே நின்று காட்சி யளிக்கிறார். அவரது காட்சி நமக்கு எதை நினைவூட்டுகிறது. கவியின் மூலமாகவே இந்த நாட்டின்.

ஒற்றுமையை நிலைநாட்டி விடக்கூடும் என்ற நோக்கத்தோடு இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டை நமக்கு அறிவுறுத்துகிறார். அந்தக் கவிஞர் பெருமகனார் கிறிஸ்து வீர வரலாற்றை எடுத்துக் கூறும்போது,

> "இயேசுவின் எதிரிகள் நினைத்தனர் எல்லாம்
> தீர்ந்துவிட்டனவென்று, அந்தத் தீப்பொறியை
> அவித்து விட்டனரென்று. அது அணைக்க இயலாத
> பெருஞ்சுடர் பெற்றதாய் இரண்டாயிரம் ஆண்டு
> களாய அத்திருவுருவம் அகிலத்தை ஆளுகிறது"

என்று கூறுகிறார்.

எதிரிகள் இன்றுமட்டுமன்று அன்றும் இருந்தனர் இன்று இருக்கும் எதிரிகள், அற்ப இன்பங்களுக்காகக் கேவலம் மறையப் போகும் மனித வாழ்வின் ஆடம்பர வாழ்வுக்காக, அப்பாவி மக்களுக்கு எதிரிகளாகிறார்கள். ஆனால், அக்காலத்து எதிரிகள் ஓர் இலட்சியத்தை நிலைநாட்ட ஒரு தியாகியின் வீரச் செயல்களை எதிர்த்தும் எதிரிகளாகத் திகழ்ந்தார்கள். அதனால்தான் அக்காலத்து எதிரிகள் சரித்திரத்தில் இடம் பெற்றுச் சன்மார்க்க அருளாளர்களின் மனத்தில் நின்று அவனியோரின் அன்றாட வாழ்க்கைச் சம்பவங்களிலே பின்னிப் பிணைந்து நிற்கிறார்கள். இக்கால எதிரிகள் ...?

இயேசுவின் ஞானஒளியை அழிக்க எண்ணிய அந்த எதிரிகளின் எண்ணம் ஈடேறவில்லை. உண்மையின் முன்னால் பொய் நிலைத்திருப்பதில்லை—நீதியின் முன்னால் கொடுமை பரவுவதில்லை. ஆனால், மனிதன் அதை எண்ணிப் பார்ப்பதே இல்லை. "உயிரோடு இருக்கின்றவரைக்கும் இன்பத்தை அனுபவித்துவிடலாம்" என்று நினைக்கிறான். அவன் மறைவுக்குப் பின்னால் எழுதப்படும் வரலாற்றுக் குறிப்புகளை அவன் நினைத்துப் பார்ப்பதே இல்லை. அந்த வகையில்தான் இயேசுவின் எதிரிகள் எண்ணியிருக்க வேண்டும். முடிந்ததா அவர்கள் அணைக்க எண்ணிய 'இயேசு' என்னும் தீப்பொறி, இன்று அணைக்கமுடியாத பேரொளியாக உலகெங்கும் பிரகாசித்து, அகிலத்தையே அன்பாட்சி புரிகின்றது.

ஆயிரமாயிரம் வேண்டும் :

வங்கம் மகானகளை மக்களுக்களித்த மாநிலம் என்பது சுவாமி விவேகானந்தரின் வாயிலாக மேலும் தெளிவாகிறது. இராமகிருஷ்ண பரமஹம்சரின் மறைவுக்குப் பின் அவருடைய சீடர்களுள் தலைமையானவரான விவேகானந்தர், ' ஸ்ரீ இராம கிருஷ்ண சங்கம்" என்ற நிறுவனத்தைத் தோற்றுவித்து இல்லற வாழ்க்கையைத் துறந்து, துவராடை புனைந்து தம் ஞானத்தந்தை இராமகிருஷ்ணரால் அளிக்கப்பெற்ற விவேகானந்தர் என்ற நாமத்தோடு சமயத்தொண்டு புரிந்தார்

மூடப் பழக்க வழக்கங்களைக் குழிதோண்டிப் புதைத்துப் பெண்ணினத்தின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டுச் சமயங்களிலே ஏற்படும் வெறியை அகற்றி, உண்மை நெறியை உலகுக்கு எடுத்துக்கூற இந்தியாவில் மட்டுமன்றி அமெரிக்கா முதலிய மேனாடுகளிலும் சமயப் பணிபுரிந்து, இந்து மதத்தின் உண்மைத் தத்துவங்களை எடுத்து இயம்பி வெற்றி கண்டார். அவருடைய பின்பற்றிப் பல மேனாட்டு மக்கள் இந்துக்களாகவும் மாறி யிருக்கிறார்கள் என்பதை ' இராமகிருஷ்ண மிஷன் ' என்ற அமைப்பின் வாயிலாகக் காண்கிறோம்.

விவேகானந்தரின் அமெரிக்க நாட்டுச் சிகாகோ பிரசங்கத்தை நாம் படிக்கின்றபோது அவரைப் போன்று, இந்து மதத்தின் சீரிய சிறப்புகளைச் செம்மையாக எடுத்துக் கூறத்தக்க சமயப் பிரச்சாரகர்கள் அவருக்கு முன்னும், பின்னும் இருந்ததில்லை என்றுகூடத் துணிந்து கூறலாம். விவேகானந்தருக்கு முன்னே தோன்றிய இராமலிங்க அடிகள்கூட மேல் நாடுகளுக்குச் சென்று இந்து மதத்தின் மாட்சிமையை எடுத்து இயம்பவில்லை. வள்ளலாரை அகில உலகுக்கு அறிமுகப் படுத்திய தமிழினத் தலைவர் ம. பொ. சி. அவர்கள்,

> "இராஜாராம் மோகனர், தயானந்தர், இராம கிருஷ்ணர் ஆகியோருடன் ஒப்பிட்டுப் பார்க்கின்ற போது, அவர்களுக்கு எந்த வகையிலும் குறைந்து விடாத மாபெரும் ஞானியாக, மரணத்தையே வென்ற சித்தர் என்னும் புகழுக்குரியவராக விளங்குகின்றார் இராமலிங்கர். ஆனால், மற்றப் பெரியார்கள் மூவரும்

தங்கள் வாழ்நாளிலே தாங்கள் வாழ்ந்த மாநிலங் களிலே பெற்றிருந்த செல்வாக்கை நினைக்குமிடத்து, தாம் வாழ்ந்த காலத்திலே தமிழகத்து மக்களிடையே இராமலிங்கர் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார் எனச் சொல்லுவதற்கில்லை. மற்றப் பெரியவர்கள் மூவ ரின கொள்கைகள், வழித்தோன்றிய இயக்கங்கள் அவர்களுடைய காலத்திலேயே பாரதமெங்கும் பரவி அவர்களுக்குப் பிறகும் நனகு வளர்ச்சி பெறறு, பாரத மக்களின வாழ்விலே கொள்கை ரீதியான மறுமலர்ச் சியை ஏற்படுத்தின. அது போல இராமலிங்கர் தோறறுவிதத சமரச சுத்த சன்மார்க்கப பேரியக்கம் அவர் காலத்திலோ, பிறகோ, அவர் எதிர்பார்த்த அளவில சமய-சமூகச் சீர்திருததப பாதையிலே வளர்ச்சி பெறறதாகவோ, தமிழருடைய வாழவிலே மறுமலர்ச்சி ஏறபடுத்தியதாகவோ சொல்வதறகிலலை அவரியற்றியுள்ள பாடலகளில சீர்திருத்தக் கரு த்துக்கள் நிறைந்த பாடல்கள, அவறறிறகுரிய ...ளோடு மக்களால் இனறளவும் போறறபபடவில்லை; மற்றுள்ள பக்திப் பாடல்கள் மட்டுமே மக்களால் பாடப்பட்டு வருகினறன இது வள்ளலாரின குறை யனறு; தமிழகத்தில்—தமிழர்களுடைய இரததத்தில் கலந்துவிட்ட சாதிவெறியின விளைவு"

(வ க ஒருமைபபாடு)

என்று இராமலிங்கர் தமிழகத்தில மட்டுமேதான தமது சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின கொள்கைகளைப பரப்பினாரே தவிர தமிழகத்தை அடுததுள்ள மாநிலங்களிற்கூட அவ ருடைய ஆன்மநேய ஒருமைப்பாட்டின அருளஒளி பிரகாசிக்க வில்லை எனறு வள்ளலாரை உலகிற்குத தெரியவைத்த சிலம்புச் செலவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

விவேகானந்தரின் நிலை வேறு. அவர் இந்து மதத்தை உல கெங்கும் பரப்புவதறகுத் தம் வாழ்நாள் முழுவதையும் தியாகம் செய்தார் என்று சொல்லுவதும் தவறாகாது. அதன் காரண மாகச் சுவாமி விவேகானந்தர் தோற்றுவித்த இயக்கம் மக்கள்

மத்தியிலே பேரியக்கமாக வளர்ந்து, இந்தியப் பெருநாட்டில் மட்டுமல்லாமல் உலகநாடுகளில் அதன் கிளைகள் உருவாகி மடங்கள் பெருகி அவற்றின் பலனாக அகில உலக ரீதியிலே செல்வாக்குப் பெற்ற துறவிகளையும் பெருகச் செய்தது அந்தச் செல்வாக்கிற்கு மூல காரணகர்த்தாவான சுவாமி விவேகானந்தர், உலக இரட்சகர் கிறிஸ்துவைப் பற்றிப் பெருமைப் படுத்திக் கூறும்போது.

"இயேசுகிறிஸ்துப் பெருமானை அடியொற்றிப் பின்தொடரும் உண்மையான சீடர்கள் ஆயிரமாயிரமா யெழும்பவேண்டும் இயேசு சுவாமியைப போல வாழ்ந்து வழிகாட்டும் புனித அன்புத் தியாகிகள் ஆயிரம ஆயிரம் வேண்டும். இயேசுநாதரைப போல தனனலங் கருதாப் பிறர்க் குரியாளர்கள் ஆயிரம், ஆயிரம் வேண்டும் இயேசு கிறிஸ்துவின அகிம்சா வாழ்க்கையை வாழ்ந்து காட்டும் மகானகள் ஆயிரம் ஆயிரம் வேண்டும இயேசுநாதரைப் போல பற்றற முற்றும் துறந்த முனிவர்கள் ஆயிரம் ஆயிரம் வேண்டும். இயேசு கிறிஸ்து என்னும் அனபு அவதாரம் இந்தியாவெங்கும், பட்டணமெங்கும், கிராமமெங்கும், நாடெங்கும் தோன்ற வேண்டும். கிறிஸ்துவத் தொணடர்கள் எங்கட்குத் தேவை இயேசு கிறிஸ்து எங்கட்குத் தேவை. அவர் இந்திய மக்களின இதயத்தை ஆட்கொளவாராக."

என்று எத்துணைத் துணிச்சலாக வெள்ளை உள்ளத்தோடு கூறியிருக்கிறார்! தம் மதத்தைவிடப் பிற மதத்தை மட்டுமன்றி அம் மதத்தின் ஆசாரியனையும் வாயார மனமாற வாழ்த்துவதென்பது சாதாரண மனிதனுக்கு இருக்கக்கூடிய இதயமன்று. இந்தப் புனித வாக்கிலிருந்து விவேகானந்தரும் ஓர் ஒப்புயர்வற்ற சர்வ சமய சமரசக் கொள்கைக்காகப் பெரிதும் பாடுபட்டிருக்கிறாரெனபது புலனாகிறது.

ஒரு பொருள் தேவை என்பது வேறு. அப் பொருள் தனக்கு வேண்டும் எனபது வேறு. அபபடிச் சொலலுவது பொதுவாகும். தேவைபட்ட பொருளையும், வேண்டிய பொருளையும்

சில நேரங்களில் இல்லை என்று மற்றவர்களுக்குக் கொடுத்தும் விடலாம். ஆனால், தனக்குத் தேவையான ஒரு பொருளை யாருக்கும் கொடுத்துவிடாமலும இருக்கலாம் அப்படித்தான் சுவாமி விவேகானந்தர் இயேசுகிறிஸ்து எங்களுக்கு வேண்டும் என்று கேட்கிறார். ஆம; இயேசு, கிறிஸ்தவர்களுக்கு மட்டும் சொந்தமல்லர்; உரிமை கொண்டாட தக்கவரும் அல்லர். அவர் எங்களுக்கும் சொந்தமும் உரிமையும் ஆனவரே என்று உரிமை கொண்டாடுகிறார் அவர்

திருவடி நிழல :

பக்தர்கள் அனைவரும் கடைசியில் நாடுவது நாட விரும புவது ஆண்டவரின திருவடிகளே. அதைவிட ஒரு பெருமைக் குரிய இடம் வேறொன்று இருபபதாக உண்மையான பக்தர் களுக்குத் தெரியாது, உலக வாழ்க்கையையே பேரொளியின பொற பாதக் கமலங்களில் பதித்துவிட்ட பக்தர்களுக்குத் திரு வடியைத் தவிர வேறென்ன தெரியும். அத்தப் பேருண்மையை விளக்கி வள்ளலார் பெருந்தகை

“அருளார நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல வேண்டும்
அனுத்துணையு சினங்காமம் அடையாமை வேண்டும்
மருளாய வுலக மெலாம் மருணீங்கி ஞானமன்றிடத்தே
வள்ளலுனை வாழ்த்திடல வேண்டும்,
இருளாமை யுறல் வேண்டும் எனையடுததார் சுகம்
வாய்த்திடல வேண்டும்
எவ்வுயிரும் இனபடைதல் வேண்டும்
பொருளாமோர் திருவடி விலுடையாவும் நானும் உணர்ந்து
கலந் தொன்றாகிப் பொருந்துதல் வேண்டுவனே”

என்று தன்னுடைய சினம், காமம் உலக ஆசை அகல வேண் டும்; சுகந்தர வேண்டும்; வாழ்க்கை இருள் அகலவேண்டும் அவ்வளவு தேவைகளையும் ஆண்டவர் உன திருவடியின்பால் அடைக்கலம் அளிக்கிறேன்” எனறு கண்ணீர் மல்கிப் பாடு கிறார்,

பொன்னடி இனபம

நாம் இன்பத்தை எங்கே காணமுடியும்? மனித சமுதாயம் இன்பத்தை தேடி, அலைகின்ற போக்கு விசித்திரமானது. கை

நிறையப் பணம் சம்பாதித்துப் பை நிறைய பண்டங்கள் வாங்கி மெய்வளரத் தின்று, பொய்யான உலகில் செய்யாத செய்கைகள் எல்லாம் புரிந்து, கொய்யாத பழமாக வெம்பி விழுந்து விடும் நிலையில் தானே மனிதன் இன்பத்தை அனுகுகிறான் உலக வாழ்க்கையைத் துறந்த ''ஞானியர்'' என்று எண்ணுகிறவர்கள் முற்றும் துறந்தவர் என்பதைக் காட்ட தாடி வளர்க்கிறார்கள் சிலர் கண்களையும், மூக்கையும் மூடி தியானம் செய்கிறார்கள் வேறு சிலர் உண்ணா நோம்பினை அனுசரித்துப புசியாமல் இருக்கிறார்கள் எல்லாம எதற்காக அவர்கள் நாடும் இன்பங்களை அடைவதற்குத்தானே அச் செய்கைகளினாலே இன்பத்தை அடைந்துவிட முடியுமா? முடியும்! எப்போது? ஆண்டவரின் திருவடியை அடைந்துவிட்டால் எல்லாச் சுகங்களையும் ஆன்ம நாதனின அன்புத் திருவடிகளிலே அடைக்கலம் கொடுத்துவிட்ட பிறகு. எனபதை

''வாக்கை அடக்கின் வயிற்றை ஒடுக்கின் மயிர் வளர்த்து
மூக்கைப் பிடித்திடின மூச்சைத் தடுத்திடின முக்தி
இன்பம்
தேங்குமோ ஐயோ செகத்தீர்! அடைமின் சிலுவை உயிர்
போக்கிய ஏசுவின் பொன்னடி இன்பம் புகுந்திடுமே''

என்று பாட்டாளிகளின் தோழன் திரு வி. க அவர்கள் பாடுகிறார். இவைகளை யெல்லாம் ஏற்கனவே உணர்ந்தவர்போல சுவாமி விவேகானந்தர்

''இயேசு பெருமானின் திரு அவதாரக் காலத்தில் நான் பாலஸ்தீன நாட்டில் வாழ்ந்திருந்தால் நான் இயேசு நாதரின் திரு பாதங்களைக் கழுவி அவருக்குத் தொண்டுசெய்திருப்பேன்; எனது கண்ணீரால் அல்ல; எனது இதய இரத்தத்தால் அவரது திருவடிகளைக் கழுவித் தொண்டாற்றியிருப்பேன''

என்று சொல்லுகிறார், நம் உடல் சிலிர்க்கிறது. அல்லவா! ஆன்மாவின் பாவங்களைத் தீர்க்க தம் உதிரத்தைச் சிந்தினரே, அந்த உத்தமனுக்குச் சிலுவை நேசனுக்குத் தமது இதய இரத்தத்தையே காணிக்கையாக்கி இயேசுவின் பொறபாதக் கமலங்களைக் கழுவ வேண்டுமென்கிறாரே எத்தகைய பெருந்

தன்மை என்பதை நாம் அறிய வேண்டுமென்கிறரே எத்தகைய பெருந்தனமை என்பதை நாம் அறிய வேண்டும். ஆம்; விவேகானந்தர் இயேசுவைக் கேவலம் மனிதப் பிறவியாக நினைக்கவில்லை. அவரைத் தெய்வத்தின திரு உருவாகவே கருதி வழிபடுகிறுர்.

சிலை வணங்கிய தலை

"சத்திய உதடு என்றும் நிலைத்திருக்கும பொய
நாவோ ஒரு நிமிஷம மாத்திரம இருக்கும" (நீதி 12.19)

இது வேதததின செய்தி, இந்தச்செய்திக்கு எடுத்துக்காட்டாக நம இந்திய நாட்டிலே பிறந்து வளர்ந்து கொடிய மதக் கொடுமைக்குப பலியாகிய தேசபிதா மனிதருள் மாணிக்கம் அடிமை இருள சூழந்த இந்திய நாட்டிற்கு விடுதலை வாஙகிச் சுதந்தர ஒளியை அளித்த மகான காந்தி அடிகளாவார்கள்.

உலக வாழ் மக்கள அனைவரும் அடிமைத் தளையின்றி ஆரோக்கிய வாழவு வாழ வேண்டும் என்று எண்ணி, இறக்கும் வரை தொண்டு செய்த கருணை வள்ளல் காந்தி அடிகளாவார்.

பிரிடிஷ் சாம்ராஜயத்தில ஆட்சிப பிடிபபிலே சிக்குண்டு சீரழிந்து வந்த பாரத நாட்டைக் கத்தியின்றி இரத்தமின்றி யுத்தம செய்து உயிர்ச் சேதமின்றி—பொருள அழிவின்றி—நீண்ட பகைமை வளர வழியின்றி நாட்டிற்குச் சுதந்திரம் வாங்கித் தந்தவர். இத்தகைய திறமை உலக நாடுகளிலே தோன்றிய எந்தத் தலைவருக்கும் கிடைக்காதது. இந்தத் தனிச் சிறப்பைப பெற்ற பாரதத்தின தனிப பெருந் தலைவர் மகான் காந்தி அடிகளாவார்.

சாதி-மதச் சண்டை தலை தூக்கி ஆடிய போதெல்லாம் அன்பு வழி காட்டி அடக்கிய அருள் நிறைந்த தலைவர் காந்தி அடிகளாவார்.

உள்ளத்தில் எண்ணுவதை உதட்டோடு நிறுத்தாமல் உலக வாழ் மக்களின் வாழ்க்கையிலும் செயல்படுத்திய செயல் வீரர் காந்தி அடிகளாவார்.

தான் சார்ந்த இந்து மதத்திற்கு இழுக்கு நேரா வண்ணம் மற்றச் சமயங்களையும் அன்பால் அணைத்துத் தம்சொந்த சமயத்தின் வளர்ச்சிக்காகவே பாடுபட்டு, அதன் காரணமாக, இந்து மதத்தைச் சார்ந்த ஒரு மதவெறியனாலேயே சுட்டுக் கொலைப்பட்ட ஆசியாவின ஆன்ம நேய ஒருமைப் பாட்டின் அருள் விளக்கு – ஆசிய விளக்கு—அணையா விளக்கு காந்தி அடிகளாவார்

நாட்டு மக்களின நலிந்த வாழ்வைப் போக்குவதற்காக, வள்ளலாரைப் போல வெள்ளாடை அணிந்து, முனிவர் போல் வாழ்ந்து தனக் கென்று எதையும் சேர்த்தோ பதுக்கியோ வைக்காமல் எல்லாம் நாட்டிற்கே என்று தியாகம் செய்த பாரத வள்ளல் மகாத்மா காந்தி அடிகளாவார்.

''பொய்யாத மொழியும் செய்யாத செயலும்
வீண்போகாத நாளும் விடயம் புரியாத மனமும்
உட்பிரியாத சாந்தமும் புந்தி தளராத நிலையும்
மாய்யாத வாழ்வும் வேறெண்ணாத நிறையும்
நிலை யென்றும் மறவாத நெறியும்
இறவாத தகவும் மேற்பிறவாத கதியும்
இவ்வேழையேற கருள் செய் கண்டாய்''

என்று இராமலிங்க அடிகள் பாடிய அருட்பாவுக்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்த பெருந்தகை காந்தி அடிகளாவார்.

அகிம்சைத் தத்துவத்தில் புத்தரைப்போல் வாழ்ந்து ஆன்ம சோதனையில இயேசுவைப்போல மிளிர்ந்து, அதற்கு மேலும் அடிமை நாட்டிற்குச் சுதந்திரம் பெற்று அளித்து உரிமையாம இன்பத் தடாகத்தில் மூழ்கித் திளைக்குமாறு உதவிய கருணைப் பெருங்கடல காந்தியடிகளாவார். அந்த அண்ணல் காந்தி அடிகள கிறிஸ்துநாதரைப பற்றிச் சொல்லும்போது

''வத்திக்கானில அமைக்கப்பட்டிருக்கும் சிலுவையில் அறையுண்ட கிறிஸ்துவின திருச்சிலைக்கு முன் தலைபணியக கிடைத்த வாய்பபிற்கு நான் வேறு எதையும் கைம்மாறாக அளிக்க மாட்டேன்! உயிர்

ததும்பும் அந்தத் துயரக் காட்சியினின்று என்னையே வெளிக் கொணர மிகுந்த முயற்சி தேவைப்பட்டது. சிலுவையின் கொடிய வேதனைகளினின்று தான் சமூகங்களும் தனி ஒரு மனிதனும் உருவாகின்றனர் என்று நான் அங்கு உணர்ந்து கொண்டேன்.''

என்று கூறினர் காந்தி அடிகள் உள்ளத்தைத் திறந்து வெளியிட்ட வார்த்தைகள் இவை.

மனிதன் கெடுவதற்குச் சுற்றுச் சூழ்நிலைகளே காரணம் என்று அறிஞர் பெருமக்கள் கூறுகிருர்கள். அந்த கெட்ட மனிதன் சமுதாயத்தில் ஒருவனுகக் கலந்து சமூகத்தையே அழித்து அழியத்தக்க மாபெரும் தீமையை உண்டாக்கி விடுகிருன். அதனுல் சமூகங்களை எல்லாம் இணைத்து முழுமையாகக்காட்சியளிக்கின்ற உலகமும் அழிவுப் பாதையை நோக்கி வீரநடை போடுகிறது அதன் விளைவு.

துன்பமிகு போர் வெறிகள் எங்கும் சூழ்ந்து, துடித்து மாள்கின்ற மக்களின் எண்ணிக்கை மலிந்து விடும்படி செய்துவிடுகிறதல்லவா. போர் வெறியின் காரணமாக நாட்டையும் நகரத்தையும் அழிக்கும் குண்டுகளையும் பிறவற்றையும் வீசிக் காசினி வாழ் மக்களின் கண்ணீரைக் காணிக்கையாக்கிக் கொள்ளுகிறதல்லவா!

போர் வெறி தனி மனிதனின் தனியாட்சிச் சர்வாதிகாரத்தின் எதிரொலியாகவே விளங்குகிறது. அல்லது அத் தனி மனிதனைச் சார்ந்த ஒரு கூட்டத்தாரின அபிலாஷைகள் நிறைவேறும் பொருட்டு எழுப்பப்படும் சர்வ நாச நச்சுக்காற்ருகவே விளங்குகிறது.

போர் வெறி தனி மனிதனின் அல்லது அவனைச் சார்ந்தோரின் மே[illegible]தையும், யோகத்தையும் பரம்பரைப் பெருமையையும். வைத்துப் பின்னப்பட்ட சிலந்திக்கூட்டின் அமைப்புப் போல அமைந்து சர்வ நாசத்துக்கு ஏதுவாகிறது.

அந்தத் தனி மனிதனின் மூச்சும், பேச்சும், சிந்தனையும் செயலும் சுக்குதூருக்கப்பட்டுப், பொடி பொடியாக்கப்பட்டுச் சின்ன பின்னமாகச் சிதைத்துச் சிதறடிக்கப்பட்டு, காற்றிற்

பட்ட பஞ்செனை எட்டுத்திக்கும் பறந்தோடச் செய்யப்பட்டு விட்டால், தம்பி மனிதனின் தனித்தன்மை எங்கே நிலைத்து இருக்கும் அந்தத் தனி மனிதன் எங்கே இருப்பான்? அவன் இருக்கும் இடம் சூன்ய வெட்டவெளிதானே! அவன் அழிந்து விட்டால! அவன் அழிந்தே போய்விட்டால்! அவன் படைத்த சமூகம் ஏது! சஞ்சலம் ஏது! சமர் ஏது! சாவேது! எல்லாம் இல்லாமல போய்விடும் அல்லவா? அதை உணர்ந்தவரான மகா கவி பாரதியார்.

"மோகத்தைக் கொன்றுவிடு— அல்லாலென்றன
மூச்சை நிறுத்திவிடு ;
தேகத்தைச் சாய்த்துவிடு—அலலாலதில்
சிந்தனை மாய்த்துவிடு;
யோகத் திருத்திவிடு—அல்லா லென்றன்
ஊனைச் சிதைத்துவிடு;
ஏகத் திருந்துலகம்— இங்குள்ளன
யாவையும் செய்பவளே!"

என்று ஆதிபராசக்தியை வேண்டுகிறார்.

அந்தத் தனி மனிதனும் சமூகமும் வேதனைகளும் வேண்டாத விளையாட்டுத் தன்மைகளும் மறைவதற்காகத்தான், கிறிஸ்து நாதர் சிலுவையில் தொங்கினார். ஆகவேதான் காந்தி அடிகள் சிலுவைக்குத் தலைவணங்கி அந்தக் காட்சியி லிருந்து விடுபடுவதற்கு வெகு கஷ்டப்பட்டேன் என்று சொல்லுகிறார் மேலும் கூறும்போது,

'என் செயல்களனைத்தும் வழி நடத்தும் அகிம்சைக் கொள்கையின் பாலுள்ள என் அசையா நம்பிக்கை உருவா வதற்குச் சிலுவையிலறையுண்ட கிறிஸ்து ஒருவரே எனக்கு முன் மாதிரியாக விளங்கு கிறார்."

என்று தனக்கு வழிகாட்டியாகவும், குருநாதராகவும், தன்னுடைய அகிம்சைத் தத்துவத்திற்கு முன்னோடியாகவும் கிறிஸ்து நாதரைக் கொண்டார் காந்தி அடிகள் எவ்வளவு தன்னடக்கத்தோடு அவர் 'கூறுகிறார்! பாரத நாட்டின், பாரத சமுதாயத்தின் தேசியப் பிதா காந்தி அடிகள்.

பதவியும பணமும

இன்றைய சமுதாயத்தின் சுற்றுச் சூழ்நிலைகளை நோக்கும் போது, சமுதாயமும், மக்களும் ஏதோ இனந்தெரியாத ஓர் அழிவுப் பாதைக்கு ஆமைப்பாளர்களாகத் தங்களைத் தாங்களே உருவாக்கிக் கொண்டு போவதாகத் தெரிகிறது அப்படிப்பட்ட சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் மலிந்து கிடப்பதை நாமும் காண்கிறோம் அடித் தளத்திலே அல்லல் பட்டுக் கொண்டிருப்போர், அரசப் போகத்தை அனுபவிக்க ஆசைப்படுகிறான். பட்டினியால் பரதவித்துக் கொண்டிருக்கும் பாட்டாளி மகா பத்துவகைப் பதார்த்தங்களோடு சுவை மிகுந்த உணவு வகையை உண்ண இச்சைப் படுகிறான். அப்படியே வறுமையில் வாடுபவன் வளமான வாழ்விற்கும், வாடகை செலுத்தி வாழ்பவன சொந்த வீட்டுக் காரனுகவும் திகழ விரும்புகிறான் இத் தன்மைகள் ஏற்படக் காரணம் என்ன? மனிதன் தன் வாழ்நாளில் தன்னை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்ற நோக்கமே யாகும். அத்தகைய நோக்கத்தால் எழும் கவலை அவனது இதயத்தை ஓயாமல் உலுக்கிக் கொண்டே யிருப்பதை நாம் உணர்ந்தே இருக்கிறோம்.

ஆனால் அரசப் பீடத்தில் இருக்கும் ஒருவனை ஆண்டியாகவோ, ஆண்டியாக இருக்க நினைப்பதையோ விரும்புகிறவனாக யாராவது ஒருவனை உலகில் காண முடியுமா? அவ்வாறு காண முடிந்தால், ஒரு வேளை அவன் உலக இன்பங்களை அனுபவிக்கத் தெரியாத அப்பாவியாக இருக்க வேண்டும்; அல்லது பயித்தியக் காரனாக இருக்க வேண்டும். அந்த விதப் பயித்தியக் காரன் யார்?

'சுமை' என்பது இந்த இருபதாவது நூற்றாண்டில் மிகச் சாதாரணமாக வழங்கப்படும் சொல் கழுதையும், கோவேறு கழுதையும் தான் பாரத்தைச் சுமக்கும் விலங்குகள் என்று நாம் அறிவோம அது அந்த மிருகங்களின் கடமை என்பது மட்டுமன்று. சுமப்பதற்கெனறே பிறந்தவை அவை. அது அவற்றின் பிறப்புரிமை என்றும் கூட நாம் கூறுகிறோம். ஆனால் மனிதனும பாரம சுமக்கிறான் ஒருவன்மட்டுமல்ல. கோடானு கோடி மக்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்பிற்காகத்

தினமும பாரத்தை சுமக்கிறார்கள் பஞ்சாலையில் உழைக்கும் பாட்டாளி பஞ்சு மூட்டைகளையும், துணி மூட்டைகளையும் சுமக்கிறான் தொழிற் சாலைகளில் பாடுபடும் உழைப்பாளி இரும்பையும வேறு பல பொருள்களையும் சுமக்கிறான். துறைமுகத்தில் வியர்வை சிந்தும் வேலையாள் பலவகைப் பட்ட மூட்டைகளைச் சுமக்கிறான. காரணம் சாண் வயிற்றை நிரபபுவதற்காக.

"ஆடுவதும் பாடுவதும் ஆளடிமை செய்குவதும்
ஓடுவதும் உறங்குவதும் ஞானதங்கமே
ஒரு சாண் வயிறறுக்கடி ஞானதங்கமே".

என்று, சித்தர்கள் பாடியிருக்கிறார்கள். எல்லாம் வயிறறிற் காகததானே. வயிறு என்ன அவ்வளவு பொல்லாததா! பொலலாதது மட்டு மனறு: எதையும் சொலலாதது; சொலலாதது மட்டு மனறு: சொன்னபடி நிலலாதது; நிலலா தது மட்டு மனறு ஒரு நிலையிலே நம்மை வாழ விடாதது. அதை உணர்ந்துதான ஔவைப் பெருமாட்டியும.

"ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளைக்கே லென்றால் ஏலாய—ஒருநாளும்
என்நோ வறியாய் இடும்பைக்கூ ரெனவயிறே
உன்னோடு வாழ்தல அரிது"

என்று மனம் வருந்திப் பாடினர் பசிப் பிணியைப போக்கத் தான எலலாரும பாரம சுமக்கிறார்கள்; சுமந்தார்கள். ஆனால் எந்தப பிணியும் இலலாமல உழைத்துத்தான சாபபிட வேண் டும் எனற நோக்கமும் அல்லது எண்ணமும இல்லாமல் இருந் தவர்கள் ஏன் பாரத்தைச் சுமக்க வேண்டும்? அபபடிச் சுமப்ப வன் ஒரு போக்கிரியாக இருக்க வேண்டும்; அல்லது பித்தம் பிடித்தவனாக இருக்க வேண்டும் அந்தப் பித்தம் பிடித்தவன் யார்? அந்தப் போக்கிரித் தன்மை வாய்ந்தவன் யார் என்பதை விளக்குபவர் யார்?

'தமிழகத்தில் ஆத்திக நாத்திகப் பிரச்சாரம் தலை தூக்கிச் சதுராட்டம் ஆடிக்கொண்டிருந்தபொழுது, நாத்திகப் பிரச்சாரத்திற்குத் தலைமை தாங்கிப் போர்க்கொடி உயர்த்திய ர்—மதங்களின, மதாச்சாரியர்களின், கோவில்களின்

கொடுஞ் செயல்களையும் கோணல் கொள்கைகளையும், கோட்பாடுகளையும், கோமாளித் தனங்களையும் குழி தோண்டிப் புதைக்க, பட்டி தொட்டிகளிலெல்லாம் பிரச்சாரம் செய்தவர்—வைதிகக் கட்டுப்பாடுகள் தூக்கி எறியப்படச் சீர்திருத்தப் புதுப் பாதையை ஏற்படுத்தியவர்—பலதரக் கடவுளர் வழிபாட்டை எதிர்த்து "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற திருமூலர் வாக்கைச் சிரமேற் கொண்டு வழிபட்டவர்—பேச்சிலே தனிக் கவர்ச்சி சிந்தனைப் போக்கிலே சிறந்த வளர்ச்சி—எழுத்திலே மறுமலர்ச்சி ஆகியவைகளைப் புத்தம் புதிய கோணத்தில் செப்பனிட்டவர்—உள்ளத்திலெழுவதைக் கள்ளங்கபடமின்றி எடுத்துச் சொல்லும் குழந்தை உள்ளம் படைத்தவர்—தான் சொன்னவைகளைத் தவறு என்று யாராவது சொன்னால் உண்மையை உணர்ந்து திருத்திக் கொண்டு சிறந்த வழியைக் கடைப் பிடிப்பவர்—தனனைப் பின் பற்றியவர்களுக்கும் அறிவுறுத்துபவர்—தமிழகத்தின் தலைசிறந்த தலைவர்களில் ஒருவர்—அறிஞர் பெருமக்கள் மத்தியிலே ஆலென வளர்ந்திருப்பவர்—ஏழைகளின் இடையிலே எளியவராய்க் கை கோத்து நிற்பவர்—அன்புக்கோர் அகல் விளக்கு—ஆசைக்கோர் மின் விளக்கு—அறிவுக்கோர் உச்சிமலைச் சுடர் விளக்கு—அமெரிக்க நாட்டு அறிஞர்களால் புகழப்பட்ட தென்னாட்டு பெர்னாட்ஷா—தமிழகத்தின் முதலமைச்சர் அறிஞர் அண்ணா அவர்கள் சென்னை எழும்பூரில் நடந்த புத்தர் விழாவில் கிறிஸ்துவைப் பற்றி பேசும் போது,

> "நான் சன்மார்க்க வாதி மதவாதி அல்லேன்; ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி அலையும் அறிவிலி அல்லேன்; ஒரே தேவன் என்ற இலட்சிய நோக்கம் உடையவன்; ஆனால் பிற மதங்களைத் தூற்றுபவனும் அல்லேன்; மகான்கள் சொன்ன நல்ல வார்த்தைகளை அறிந்து அதன்படி நடப்பவன்.
>
> ஆண்டிகள் அரசர்களாக எண்ணங் கொள்ளுகிறார்கள். ஆனால் அரசன் ஆண்டியாக எண்ணுவானா? அப்படி ஆண்டியாக மாறியவர் புத்தர். அந்த நிலையைத்தான் நான் பெரிதும் மதிக்கிறேன். அதே போல ஏசுகிறிஸ்து சிலுவையைச் சுமந்தார்.

எதற்காகச் சுமந்தார்? பிறர் துன்பங்களைப் போக்கித் தாம் சிலுவையைச் சுமந்த காட்சி தான் என் உள்ளத்தை உருக்கும் காட்சியாக இன்றும் இருக்கிறது. சிலுவைப் பாரம் என பாரத்தையும் போக்குகிறது''

என்று கூறினர் அறிஞர் அண்ணா அவர்கள் எவ்வளவு தெளிவாகக் கிறிஸ்துவைப் பற்றித் தாம் தெரிந்து வைத்து நமக்குத் தெளிவு படுத்தி யிருக்கிறார். என்பதை நோக்குங்கள். இயேசுவின புவிக்கோர் பொது மறையின சித்தாந்தத்தை எவ்வாறு அறிஞர் பெருமக்கள் விளக்குகின்றனர். என்பதையும் நாம் ஆராய்ந்து தெளிய வேண்டும.

இயேசுவின் உயிர்த்தியாகம்

உயிர்த்தியாகம என்பது இன்றைய உலக வரலாற்றில் அடிக்கடி ஏற்படும அன்றாட சமபவஙகளாகும, தேசங்களிடையே ஏற்படுகிற நாட்டுச்சண்டையில நாட்டிலுடைய மானத்தைக் காப்பாற்ற ஆயிரக்கணக்கான உயிர்கள அழிக்கப்படுகின்றன. நாட்டின பாதுகாப்பை எண்ணிப் போரிட்டு மாண்ட அரசர்களும தியாகிகளே. அவர்கள் செயததும் உயிர்த் தியாகமே

பொங்கிவழ்யும் புரட்சித்தீ, திக்கெட்டும் பரவி எழுச்சியின் இடையே தஃலதூக்கி நின்ற சமரில சரிபாதி தியாகம செயவன விலங்குகள். அவைகளும உயிர்த்தியாகமே செய்கின்றன.

தமிழகத்தில சமீபத்தில நடந்த எண்ணற்ற போராட்டங்களில பலர் உயிர் நீத்தனர். அவையாவும உயிர்த்தியாகங்கள் தாம் காதலாசைக் கூடாமையால ஏறபடும தற்கொலைகள் அவ்வளவும் உயிர்த்தியாகங்களேஎன்பதை யாரும மறுக்கமுடியாது. அவை அனைத்தும தத்தம சுய தேவைகளைப பூர்த்தி செய்து கொள்வதன் பொருட்டு ஏற்படுகின்றனவே தவிர பிறருக்காக ஏற்படுவன என்று கூறிவிட இயலாது. அவர்கள் அனைவரும தனனலவாதிகளே. ஆனால் தன உயிரை மற்றவர்களின் நலவாழ்விற்காக, அற்பணித்து உயிர்த்தியாகம செய்த அந்தப் பொது நலவாதியார்? அந்தப பொது நல வாதியின சீரும் சிறபபையும் தமிழகததிற்கு மட்டுமலலாமல் உலகுக்கும், எடுத்துக் காட்டும தியாகியார்?

மூன்று கோடி தமிழ் மக்களின் இதயக் கோவில்களிலே வைத்துப் போற்றப படும் புனிதன். அச்சுக் கோக்கும் தொழிலாளியாக இருந்து, ஆப்ரகாம் லிங்கனைப்போல, அரிஸ் டாடிலைப போல, ருசோவைப் போல, பிளாட்டோவைப் போல, இங்கர் சாலைப போல அரசியல் மேதை யாகத்திகழும் பாட்டாளி. அன்னை மொழியாம் தமிழ், எதிலும தமிழ, காணும் இடமெல்லாம் கன்னித் தமிழ் ஒலி முழங்கப் பாடுபட்டு வரும் தமிழினத்தலைவன் எல்லைக் காவலன் இதிகாச நாவலன், சரித்திர ஆசான் சனமார்க்கத்தூதுவன். இனபத் தமிழகத்தின் ஏந்தல், வள்ளுவனைக் கம்பனை இளங்கோவை வள்ளலார் பெருந் தகையை உலகுக்கு அறிமுகம் செய்த சான்றோன் அறிஞர், நாவலர், பாவலர், கவிஞர், கலைஞர் கற்றோர், மற்றோர் யாவரும் போற்றும சிலம்புச் செல்வர் ம. பொ. சி அவர்கள் ஏசுவைப் பற்றிக் கூறுவதைக் காண்போம்

> ஏசுவைப் போன்ற ஞானியர்கள் உயிர்க்குலம் அனைத் திடமும் அன்பு செலுத்து வோராவர். தாம் வாழ்ந்த காலத்தில், தாம் வாழ்ந்திருந்த நாட்டில் தம்மைச் சூழ்ந்திருந்த மக்களால் அவர்கள் ஒரு மதச் சார்பு டையவராக இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக் கலாம். ஆனால் அவர்களுடைய உபதேச மொழிகள் மனிதகுலம அனைத்துக்கும் பொதுவான வையாகும். இயேசுப் பெருமானின மலைச் சொற்பொழிவு ஒன்றே இதற்கு எடுத்துக் காட்டு; ஆகவே மனிதகுலத்தின் உயர்குலத்தின் ஒருமைப் பாட்டினை விரும்புவாரனை வரும் இயேசுப் பெருமானைப் போற்றவேண்டும்.

இறந்தும உயிா பெற்றுா்

> பாரதியார் ''ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்'' என்று பாடினார் இது அப்பட்ட உண்மையாகும். இயேசுவின் உயிர்த் தியாகம், தெய்வீகத் தன்மை பொருந்திய மகாபுருஷர்களால் அன்றி தேவ ராலும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாததாகும்; தியாகத்தைப் போதிக்கவே புனிதர் இயேசு புவியில் பிறந்தும், பொய்யர்களை எதிர்த்துப்போராடிப் புனிதச் சிலுவையிலே ஆவி நீத்தார். இயேசு தாம் மாண்ட

பின்னர், மீண்டும் மூன்றும் நாளில் உயிர் பெற்றெழுந்தார் என்பது நம்பிக்கை. ஆன்மீகத் துறையில் ஞானமுடையோர் இதை ஏற்பர். வள்ளல் பெருமான் மனிதன் சாகாமல் இருக்க முடியும் என்று போதித்ததோடு செத்தவர்களும் மீண்டும் புத்துயிர் பெற்று எழ முடியும் எனவும் போதித்தார். இந்த உபதேசத்திற்கு உதாரணமாக விளங்குகின்றது இயேசு பெருமானின் வாழ்க்கை வரலாறு.

வருந்தத்தக்க உண்மை

வள்ளலாரின் ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமைக் கொள்கைக்கு முன்னோடியாக விளங்குகினுர். சிலுவையில் அறைபப்பட்ட நேரத்திலும், கடவுளே இவர்களை மன்னித்துவிடு என்றுர் இயேசு பெருமான். வருந்தத்தக்க விஷயம் என்னவென்ருல், இயேசு பெருமானை நெஞ்சாரத் துதித்து அஞ்சலி செய்வோரெல்லாம், அவருடைய உபதேச மொழிகளைப் புறக்கணிப்பதாகும். கண்ணனை வழிபடுவோர் அவருடைய கீதோபதேசங்களைக் கருத்தில் கொள்வதில்லை இராமாயணம் படித்து இராமரைத் தெய்வமாகவே கருதி வழிபடுவோர் இராமன் வாழ்ந்து காட்டிய ஒழுக்க நெறிகளைத் தம் உள்ளத்தில் கொள்வதில்லை காந்தி அடிகளைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொள்ளும் கூட்டத்தார் அவர் போதித்த தியாக நெறியைத் தம் நெஞ்சத்தாலும் நினைப்பதில்லை. ஞானியர்களைத் தெய்வங்களாக்கி வழிபடுகிருேம்; அவர்கள் பிறந்த நாளையும், மறைந்த நாளையும் கொண்டாடி மகிழ்ச்சி அடைகிருேம். ஆனல் அவர்களுடைய உபதேச நெறிகளில் ஒன்றையேனும் நம் வாழ்க்கையில் கடைபிடிக்கிருேமில்லை

போர் வெறி

எந்தக் கண்டத்தில் இயேசுவின் புகழ் பரவியிருக்கிறதோ: அவர் மதத் தலைவராகக் கருதப்படுகிருரோ அந்த ஐரோப்பிய கண்டந்தான் போர்

வெறிக்கு இரையாகி இருக்கின்றது. பிறகண்டங்களையும் கெடுபிடிப்போரில் இருந்துவரும் கேட்டினைச் செய்து வருகின்றது. அரசியல் ரீதியான ஆதிக்க வெறியும வாணிக ரீதியான சுரண்டல கொடுமையும் ஐரோபபாவில இருந்து பிறகண்டங்களுக்கு இறக்குமதியாகின்றன. இந்தக்கொடுமையெலலாம தொலைய இயேசுவின் புனிதமொழிகள் போற்றப் படவேண்டும்.

(செங்கோல் 29-12-1963)

எவ்வளவு தீர்க்கதரிசனமாகச் சிலம்புச் செல்வர் ம.பொ.சி அவர்கள் சொலலி யிருக்கிறார். அவர் கடைசியாகக் கூறிய வார்த்தைகளை நாம் கூர்ந்து கவனிக்க வேணடும். எந்த நாடு இயேசுவின புனித வேதத்தைப போற்றிப பணிந்து அதன் வழி பினபற்றி நடக்கிறதோ—எந்த மதத்தை ஏற்றுப் பெருமைப் பட்டு வருகினறதோ இயேசுவே தனக்கு எலலாமாக இருக்கிறார் என்று இறுமாந்து எக்களிப்போடு இருக்கின்றதோ—அந்த நாட்டவர்களே—அந்த மதத்தவர்களே—அந்த இயேசுவின் பக்தர்களே உலக சமாதானத்தைச் சீர்குலைத்து—உலக அமைதியைப பங்கப்படுத்தி—கிறிஸ்து மதத்தின புனிதத் தனமையையே சின்னாபின்னமாக்கி—உலக ஒருமைப்பாட்டின் முழுவடிவைச் சுக்குநூறாக நொருக்கிவிட்ட பேய்க்குணத்தைப் பெருக்கிவிட்ட கொடுமையை இன்று அமெரிக்க நாட்டிலே பார்க்கிறோ மல்லவா!

சின்னஞ்சிறு நாடுகளிடையே போர் வெறியைத் தூண்டிவிட்டு, அந்த வெறியின வேக்காட்டிலே வெற்றிக்கொடியை நாட்ட விருமபும ஏகாதிபத்திய வெறியர்களை இன்று நாம் வியட்னாம் போரின் மூலமாகக் காண்கிறோம் நினைத்துப் பாருங்கள்! இதற்காகத்தானா கிறிஸ்துபிரான சிலுவையிலே மாண்டார்! மண்ணுயிர்கள் எலலாம் வாழவேண்டும் என்பதற்காகத் தன்னுயிரை போக்கிக்கொண்ட இயேசுவின் உபதேசத்தை உச்சி மீது வைத்துப் போற்றும் அமெரிக்க நாட்டில் தான், கென்னடிகளும், மார்டின் லூதர் கிங்குகளும் ராபர்ட் கென்னடிகளும் ஒருவர் பின் ஒருவராகச் சுட்டுக் கொல்லப் பட்டுக்கொண்டு வருகிறார்கள், இவைகளை நினைக்கின்ற

போது, இயேசுவின் மதத்தாரா இப்படிப்பட்ட ஈனத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று நாம் வேதனைப்பட வேண்டியவர்களாக இருக்கிறோம். இந்த அக்ரமம நிறுத்தப்படவேண்டும். அதற்கு வழிகாட்டிகளாக பாரத தேசத்தில் வாழும் கிறிஸ்துவர்கள் வழிகாட்டுவார்கள்; வழிகாட்டுவோம் என்று நாம் ஒவ்வொருவரும உறுதிமொழி எடுத்துக் கொள்ளவேண்டும்.

அருட்ஜோதியே வழிகாட்டிடு!

உலக வாழ்வில் உழல்கின்ற நாம் எல்லாரும் ஒருவரை ஒருவர் மதித்து வழி நடத்தல வேண்டும். மற்றவர்களை நாம போற்றுவதின வாயிலாகத்தான் பிறர் நம்மைப போற்ற வழியுண்டு: வகையும உண்டு

"Pay Respect to get Respect "மரியாதையைக் கொடுத்துததான மரியாதையை வாஙக வேண்டும" என்பது பழமொழி. அப்படியே முன்னோர்களை வாழத்துவது பின்னோர்களின கடமையாகும. இயேசுவுக்குப்பின வாழ்ந்த மகான்கள் அனைவரும சாதியைக் கடந்து—இனத்தைக் கடந்து—நாட்டைக்கடந்து கிறஸ்துவப பெருமானை, இராமகிருஷ்ணர், விவேகானந்தர், காந்தி அடிகள் திரு. வி. க. நேரு முதலிய பெரியோர்கள் வாழ்த்தி வணங்கினார்கள் என்றால அதற்குக் காரணம் கிறிஸ்துப பெருமான் எல்லாவித வித்தியாசங்களையுங் கடந்து மனித சமுதாயத்தின ஆன்ம நேய ஒருமைப பாட்டின மேன்மைக்கு வழிகாட்டும வேதாகமத்தை ஏற்படுத்திய ஒரே காரணமாகும.

கிறிஸ்துநாதர் சாதாரண ஒரு தச்சுத் தொழிலாளியின் மகன. ஆகையால் அவர் படித்துப் பட்டம பெற்றவராக இருக்க முடியாது. அந்தக் காலத்திலேயே முடியவில்லை என்றால், அந்தக் காலத்து நிலை என்ன என்பது நன்றாகப் புரியும். மேலும் கிறிஸ்துபபெருமான படித்துப் பட்டம் பெற்ற பட்டதாரி என்ற வரலாறு இருக்கவில்லை அப்படிப்பட்டவர் எப்படி உலகப் புகழ் பெற முடியும். அதற்கு ஒரே காரணம், உள்ளத்தின் உள்ளிருந்து எழுந்த உண்மைத் தத்துவங்களை உணர்ந்து உலக மக்களுக்குத் தெளிவாக ஓதியவர் என்ப

தாகும். அவர் ஓதாதுணர்ந்தவர். இயற்கையிலேயே தெய்வீகக் கல்வி பெற்றவர்.

இந்தக் காலத்தில் படித்துப் பட்டம் பெற்றுப் பெயருக்குப் பின்னால் ஆங்கில எழுத்துக்களில் இரண்டுக்குக் குறைவின்றி இல்லாதவர்களை அறிஞர்கள், மேதைகள் என்று நாம் ஒப்புக் கொள்வதே இல்லை இதனைச் செம்மல சிவஞானம் அவர்கள்

"லார்டு மெகாலே பாதையில சென்று பாரதத்தின் பண்பாட்டிற்கு மாறுபட்ட பரங்கிமொழிக் கலவி பயின்றவர்கள், பிறர் ஓதுவிக்காதுணரும திறமொன்றிருபபதை நம்ப மாட்டார்கள் ஓதுவித்தும உணராதவர்கள் உணர்ந்ததையும உளளத்தில வைக்க இயலாதவர்கள, உள்ளத்தில வைத்ததையும வாழககையில கடைபிடிக்க முடியாதவர்கள், பிறர் ஓதுவிககாது உணரும் திறமொன்றிருப்பதை நமபமாட்டார். இயற்கை 'அறிவு' என்பது ஏட்டில பிறந்துப் மனிதர் மதியில் புகுவதன்று, மாறாக மனிதர் மததியில் பிறந்து பின ஏட்டில் ஏறுவதாகும். ஓதுவித்து உணர்ந்தவர்களைவிட ஓதுவிக்காதுணர்ந்தவர்களே மெய்பபொருளை அறியும ஆற்றல பெற்றிருக்கின்றனர். ஓதாது உணர்ந்த ஞானியர் திறமபற்றி நக்கீரர் பெருமான் திருமுருகாற்றுப் படையில்

"....................யாதும
கற்றோர் அறியா அறிவினர்
கற்றோர்க்குத் தாமவரம பாகியதலைமையர்"

என வர்ணிக்கிறார் ஓதாதுணர்ந்த ஞானியர் எல்லாம் கற்று விட்டோம்" என்று இறுமாந்திருக்கிறவர்களே அந்த அறிஞர்களிலும சிறந்த அறிஞர்களாவர். எல்லாம கற்றவர்களும் தமமை வரம்பாகக் கொண்டு பேசும் தலைமை பெற்றவர்களாம! இந்த உண்மையைத்தான்.

"ஓதிஉணர்ந்தவர் எல்லாம் எனைக்கேட்க
எனைத்தான் ஓதாமல உணர்ந்துணர்வாய
உருவுறச்செய் உறவே"

என்று பாடினூர் இராமலிங்க அடிகள்.

(வ. க. ஒருமைப்பாடு)

கிறிஸ்துப பெருமானும ஓதி உணராமல உணர்ந்து ஓதிய உத்தமர் எனபதை உலகம் ஒப்புக்கொண்ட உண்மை.

பாட்டாளியின தோழன

நாசரேத்து நாயகன ஏழைகளின நண்பனுக வாழ்ந்த பெருந்தகையாளன. பணமூட்டைகளின் ஆதிக்கத்தை எதிர்த்த பரமபரைச் சோசலிசவாதி.

"இன்னும் உன்னிடத்தில் ஒரு குறையுண்டு உனக்கு உண்டானவைகளை எல்லாம விற்றுத் தரித்திரருக்குக் கொடு. அப்பொழுது பரலோகததிலே உனக்குப் பொக்கிஷம உண்டா யிருக்கும பின்பு என்னைப பினபற்றிவா."

லூக்கா 18 22

எனறு பணம படைத்துப பெட்டியிலே பதுக்கிவைத்துப பிறருக்கு உதவி செய்யாமல தன்னல வாழவு வாழந்து கொண்டிருக்கும பணக்காரர்களுக்குக் கிறிஸ்துப பெருமான் இடும ஆணையாகும். காரணம் பணம படைத்தவர்கள் அநதப பணத்தை மேன மேலும் விருத்தி செய்யும நோக்கத்தோடு செயல்படுகினறபோது, அதன இடையிலே ஏறபடும் இன்னல்கள ஏராளமானவை. அதை நீக்கிவிடுஞ் சேர்த்த பணத்தையும், பாருளையும ஏழை எளியவர்களுக்கு அளிதத வனே ஆண்டவனைப பின்பற்ற முடியும எனபதை எததனையவர் உணர்நதார்கள எனபது சிநதிக்க வேண்டிய ஒன்றுகும.

இபபடிப் பணம, பகட்டு, அடிமைத்தனம் அனைத்தையும் அறவே விருமபாத தனிபபட்ட உள்ளம். ஏசுவின பால அமைந்த திருவுளளம் எனபதைத் தமிழறிஞர் ம. பொ. சி. அவர்கள் மிகத தெளிவாகக் கிறிஸ்துப பிரானைப பற்றிக்கூறுமிடத்து எடுத்துக் காட்டுகின்றுர்.

"இயேசு பாலஸ்தீனநாட்டில் கலிலேயா என்னும் பிரதேசத்தில் நாசரேத்து எனனும் சிற்றூரில் இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர் பிறபபால் யூதர்; மதத்தால் இன்றுள்ள கிறிஸ்து மதத்தின போதகர்! ஆயினும அவர் போதித்த கொள்கைகள மனித குலமனைத்துக்கும் பொதுவானவை.

இயேசு ஏழைகளின் நண்பர்! பணச்செருக்கின பகைவர்; அடிமைததனத்தின் எதிரி சுதந்திர உணர்ச்சியின போதகர். மனித குலம் முழுவதையும் ஏன்? உயிர்க் குலம் அனைத்தையுமே காக்கவந்த காவலர் சுருங்கச் சொனனால மனித குலத்தின் வாழையடிவாழையெனத் தோன்றிய ஞானியரிலே, போகர்களிலே தெய்வத் தூதர்களிலே இயேசு மேலானவர்: தலை சிறந்தவர். கிறிஸ்துவர்களால துதிக்கப் படும் இயேசுப் பெருமான பிற மதத்தவரால் மதிக்கத் தக்க பெருமையுடையவராவர்'

இந்து மதம புராதனமானது அதனல் தோன்றிய ஏனைய மதங்களைத் தூய்மை உணர்வுடன நோக்கும் பெருமையைப் பெற்றிருக்கின்றது. அதனால் சமீப நூற்றுண்டுகளில் தோனறிய இந்து ஞானியர்களிலே பலர் இயேசுவைப் போற்றினர்.

இராமகிருஷ்ணர் தம்மைக் கிறிஸ்தவராகவும் கற்பனை செய்துகொண்டு கர்த்தரை வழிபட்டு, உண்மை இந்துக்குரிய சமரச மனேபாவத்தை வெளிப்படுத்தினர் என்று செய்தி உண்டு.

காந்தி அடிகள் மாதாக்கோவிலுக்கே சென்று கிறிஸ்தவரோடு கிறிஸ்தவராகக் கலந்து ஜெபம் செய்தார் எனச் செய்தி உண்டு. அநட் "ஜோதியே வழிகாட்டிடு" என்னும் கிறிஸ்தவப்பாடல் அடிகளாரின உள்ளங்கவர்ந்த ஒன்றாகும். இயேசுவின் மலைப்பிரசங்கம் காநதி அடிகளா போற்றிய பொன்னுரையாகும்.

இராமலிங்க வள்ளலார் தாம் பாடியுள்ள அருட்பாவின் அனுபவமாலையுள் பெருகிய பேரருளுடையார் என்னும் பாடலில் தாம் வழிபடும் தெய்வத்தின பெயர் கூறுமிடத்து.

"பிறசமயத்தார் பெயரும
அவர் பெயரே கண்டாய்"

என்னும் வரியில் கர்த்தர் என்பது அம்பலவாணருக்குரிய பல பெயர்களுள் ஒன்று என்கிறார். "எம்மதமும் சமமதம" என்னும் வள்ளலாரின கொள்கையிலே கிறிஸ்துவமும் கலந்துள்ளது.

இயேசு ஏழை-பணக்காரன என்றவேற்றுமையை வெறுத்தார் எனபதனை மிகத்தெளிவாக உணர்ந்தவர் காந்தி அடிகளே யாவர். ஒரு சமயம் காந்தி அடிகள பிரயாகையில் பேசுகையில் இயேசு நாதர் ஏழை பணக்காரர் என்ற மார்க்கப் போதத்தை வெறுத்துரைத்த பொன் மொழிகளை எடுத்துக் காட்டி ஐரோப்பாவுக்கு அறிவுரை கூறினார். அது வருமாறு

ஐரோப்பியர் செல்வம் தேடுவதையே ஒரு தருமமாக நினைத்து விட்டார்கள்.

முற்காலத்தில் பணந்தேடும் காரியங்களுக்கு ஒரு வரம்பு ஏற்படுத்தினார்கள்

மேற்குத் தேசத்தார் தங்களுடைய அபிவிருத்தியைப் பவுன ஷிலலிங் பெனசாகக் கணக்குப்போட்டும் பார்க்கிறார்கள்.

இயேசு பிறந்த உலகில் வாழ்கிறோம் என்னும் பெருமை நம்மில் ஒவ்வொருவருக்கும் அவர் எம்மதத்தவராயினும் உண்டு.

மதப் பேதங்களற்ற மனித சமுதாய மனைத்தும் ஓரினமாய் ஒரு குலமாய் வாழ்கின்ற சமுதாயமே நமது இலட்சியம் ஆயினும்,மதங்களிடையே சமரசம் [illegible] ஒரே மத மற்ற மனித சமுதாயம் தோன்

றும். இந்த நினைப்புடன் இயேசு போதித்த பொன் மொழிகளைப் போற்றுவோமாக.”

(செங்கோல 27 12-64)

திரு ம.பொ.சி. அவர்கள் கடைசியில் சொனன வாக்கியங்கள் அகில உலகிறகு அவர் அளித்த நற் செய்தியாகும்.

“மதங்களிடையே சமரசம ஏறபட்ட பிறகே மத மாற்ற மனித சமுதாயம தோன்றும” என்று சிலம்புச் செல்வர் சொன்னது, “வேறு எநத மதத்தாராலும முடியாத அந்த பெரு மகிழ்ச்சி கிறஸதுவ மதத்தாரால் தான் முடியும்: முடியும் ண்டும” என்பதைச் சூசகமாக எடுத்துக் காட்ட “இநத நினைப்புடன் இயேசு போதித்த பொனமொழிகளைப போறறுவோமாக” என்று திரு ம பொ சி. அவர்கள சொனனதிலிருந்தே விளஙகுகிறது.

இயேசுவின் வாக்கியஙகள

காந்தி அடிகள் இறக்கும் வரை இந்துவாகவே வாழ்ந்து மறைநத மாமேதை பொனனுக்காகவும், பெண்ணுக்காகவும் மண்ணுக்காகவும் மதம விட்டு மதம் மாறும் இருபதாவது நூறறுண்டில இந்து மதததின பெருமையும் போக்குமே தமது வாழ்வின இலட்சியம எனக் கருதி, இறககுமபோது கூட “ராம் ராம” என உச்சரித்துக்கொண்டே உயிர் நீத்த உத்தமர் காந்தி அடிகள் அவர் கிறிஸதவ மதததையும், மதப் போதகர் ஏசுவைப பறறியும், அவர் அருளிய வேதாகமதத்தைபபறறியும் பேசுகினறபோது, தனனையே மறந்து கிறிஸ்துவைத்தமது கண்கண்ட தெய்வமாகக் கருதி, தாம் ஏறறுப போற்றும் “பகவத கீதையே அழிந்தாலும பாதகமில்லை. ஆனுல் இயேசு அருளிய பொனமொழிகள் மட்டும் அழியாமல் இருநதால போதும” எனறு உணர்ச்சி வசபபடாமல் தெளிந்த அறிவோடு சொலலுவதைக் கேட்போம்.

“பகவத் கீதையில் செய்யப்பட்ட உபதேசத்துக்கும, ஏசுநாதர் குனறினமேல நினறு செய்த உபதேசத்துக்கும் ஒரு வேற்றுமையும் என்ருல் காண

முடியவில்லை. ஏசு நாதர், உள்ளத்தில் பதியும்படி யாகச் சொன்ன உண்மைகளே பகவத் கீதையிலும் சூத்திரமாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. பகவத் கீதையானது மானச தர்மத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு வைராக்கியத்தின் மேன்மையை நிரூபிக்கிறது. பௌதீக சாஸ்திரத்தில் உண்மைகளை நிரூபித்துக் காட்டுவதுபோல பற்று நீக்கி வாழ்க்கை நடத்துவதே மேலான வழி என்று விளக்கிக் காட்டப் பட்டுள்ளது. இதையே குன்றின் மேல் நின்று இயேசுநாதர் மிக அழகான மொழிகளில் உபதேசித் திருக்கிறார். விவிலிய நூலின் பூர்வ பாகத்தில் (பழைய ஏற்பாடு) காணப்படும் சில பகுதிகள் எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் புதிய சுவிசேஷம் என்று சொல்லப்படும் பிற்பகுதி என்னுடைய உள்ளத்துக்கு அளவு கடந்த சாந்தியும் எல்லையற்ற மகிழ்ச்சியும் தந்தது. இன்று எக்காரணத்திலாவது திடீரென்று பகவத்கீதை மக்களுக்குக் கிடைக்காமல் மறைந்து போனாலும் அதில் சொல்லப்பட்டவையனைத்தையும் அனைவரும் மறந்து விட்டு அழிந்தே போனதாக ஏற்பட்டாலும் ஏசுநாதருடைய வாக்கியங்கள் மட்டும் இருந்தால் போதும். கீதையில் நான் அடையும் மகிழ்ச்சியையும் சாந்தியையும் அதனின்று அடை வேன் ”

(யங் இந்தியா 22-12-1927)

காந்தி அடிகள் நமது சந்ததியாரால் ஆண்டவரின் தூது வராக, ஏன், வழிபடு தெய்வமாகக்கூட வணங்கப்படக்கூடிய பெருநிலையை அடையக்கூடிய மகான். அந்த உத்தம கிறிஸ் துப் பெருமானின் போதகமே போதும் வேறெதுவும் தேவைப் படாத ஒன்று என்று சொல்லுகிறார். ஞானியர்கள் பிற நாட்டால்—காலத்தால்—பின்பற்றிய மதத்தால் வேறுபட்டவர் களாக இருப்பினும் உலகனைத்துக்கும்—உயிர்க்குல மனைத்துக் கும் உரியவர்களாகவே வாழ்ந்திருக்கின்றனர். அவர்களுடைய போதனைகள்—பொன்மொழிகள் எக்காலத்திலும், எல்லா மதங்

களுக்கும் பொதுவானவை யாகவே உள்ளன. இந்த உண்மைகளை நாம சிந்தித்துப் பார்க்கின்றபோது கிறிஸ்துப் பெருமானின் போதங்கள் தனித்து நிற்காமல், தனக்கென்று ஒரு புதுப் பாதையில் போவது மல்லாமல் உலக மதங்களுக்கு வழிகாட்டி யாகவும் விளங்குகின்றது.

ஆக, அனைத்துப் பேறறிஞர்களும், மகான்களும், மேதைகளும கிறிஸ்துநாதரின் பொது மறையை வாழ்த்தி வணங்குகிறர்கள் அந்த வணக்கத்திறகுரிய கிறிஸ்துப் பிரானின் தூய்மையான கொள்கைகளையுடைய வேதம் புவிக்கோர் பொது மறை யல்லவா! எந் நாட்டவரும் எம் மதத்தவரும் ஏற்றுப போறறும இயேசுவின புனித மார்க்கம் புவிக்கோர் பொதுமறை அனறோ! அந்தப பொது மறையைப போறறிப பணிவது உலக வாழ்மாந்தரின சிறப்பான பணியலலவா!

"எத்தனையோ ஏறறந்தரும் மதங்கள் நாட்டில
எழில பொங்க வளர்ந்தகதை யநேக முண்டு
அத்தனைக்கும் எதிர்காலம் இருந்தும் நலல
அனபுவழி இல்லாத அவலம் சூழ
பித்தனைப போலுழன் றங்கே பிள்ளை யாட்டாய்ப்
போயினவே சிலநினறு சிறந்து வாழ!
இத்தனைக்கும் இனறேற்ற மியமபிக் காட்டும்
இயேசு பிரான் பொதுமறையே சிறந்ததாமே!

(அருமை)

# ஞான ஒளி

"இருளில நடக்கின்ற ஜனங்கள் பெரிய வெளிச்சத்தைக் கண்டார்கள். மரண இருளின் தேசத்தில் குடி யிருக்கிறவர்களின் மேல் வெளிச்சம பிரகாசித்தது."

(ஏசாயா, 9:2)

உலக இரட்சகர் கிறிஸ்துப் பிறப்பதற்கு முன்னுல் தீர்க்கதரிசி ஏசாயா அருளிய வேதவாக்காகும. உலகம இருளில் ஆழ்த்தப் பட்டிருந்தது. பாவமென்னும் பேரிருளிலே மூழ்கி இருந்தது. அந்த இருளைக் கிழித்து எங்கிருந்தோ ஓர் ஒளி வந்தது. அஞ்ஞான மார்க்கத்தில் அழுந்தி மெய்ஞ்ஞான போதத்தை விட்டு, வெகுதூரம் வழிநடந்து மரணக் குகையிலே அல்லலுற்றுச் சாகும் தருவாயிலிருந்த பாவக் குழியின மீது, அப் பேரொளி பிரகாசிக்கிறதே அது சாதாரண ஒளியா? ஞான ஒளி அல்லவா!

அடிமை இந்தியா அந்நியர்களின் ஆதிக்கத்தில் அல்லல் பட்டுக் கொண்டிருந்த அந்த நாளில் அடிமை வாழ்வு அகன்று, சுதந்திர ஒளி வீசவேண்டும் எனற தீரா ஆசையால், நாம் அடிமை நாட்டில வாழ்கிறோம் என்ற எண்ணமே இல்லாமல்

" ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் "

எனறு பாரதநாடு விடுதலை அடைந்து சுபீட்ச வாழ்வு வாழ்வது போலக் கறபனை செய்து பாடினுர் அமரகவி பாரதியார். அப்படியே ஏசாயா தீர்க்கதரிசியும் ஞானஒளியைப் பற்றி அன்றே சொல்லியிருக்க வேண்டும்

பாரதி 1908ஆம் ஆண்டு தீர்க்கதரிசனமாகச் சொனன அவ் வார்த்தை, நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகுதான், ஆனந்த சுதந்திரம் இல்லாவிட்டாலும், அடிமைச் சுதந்திரத்தையாவது

அடைந்துவிட்டோம். அதுபோலக் கிறிஸ்துப் பிறப்பதற்கு எழு நூறு ஆண்டுகளுக்கு முன்னே ஏசாயா சொன்ன அந்தத் தீர்க்கத் தரிசனத்தின பொன மொழிகள், கிறிஸ்துவின் மூல மாகவே சொல்லபபடுகிறது

நான உலகத்திறகு ஒ ளி ய ா யிருக்கிறேன். எனனைப பினபற்றுகிறவன் இருளிலே நடவாமல் ஜீவ ஒளியை அடை நதிருப்பான.

(யோவா, 8:12)

எனறு உலக பிதா இயேசுகிறிஸ்து கூறுகிறுர்.

தியாகச் சுடர் :

காட்டுப பாதையைக கடக்க எண்ணுகிறவன தீபபந்தத்தின உதவியை நாடுகிருன. இல்லை எனருல அவன காட்டைக் கடந்து நாட்டை அடைய முடியாது.

சுரங்கத்தில் நுழைந்து தஙகத்தை வெட்டி எடுப்பவன விளக் கொளியைத் தேடுகிருன். இல்லையெனின அவன் பாதாளச சுரஙகததை துருவிப பார்ததுத் தங்கததைத் தேடி எடுததுவர இயலாது.

ஆகாயத்தை அளாவும் காவல மிக்க மதிலசூழ்ந்த அரணை அமைதது அலஙகார வேலைபபாடுகள் நிரமபிய அறைகள் பல சமைத்துச் சித்திரப் பூக்கூடங்கள் சில செம்மையுறப் பொருந்த சிருங்கார வேலைபபாடுகள செய்யபபெறற பளிங்குக்கல பட்டைகளைப பக்கத்திறகுப பக்கம் பதியவைத்து, பாங்கான வெள்ளைச் சுண்ணம தீட்டி வைத்தாலும், விளக்கின் ஒளி இல்லை யேல அவற்ருல் பயனுண்டோ! அதற்காக மனிதன் காட்டுப பாதையின் இருளை அகறற தீப்பந்தத்தையும், சுரங்கத்திற்குச் சுடர் தர மெழுகு வர்த்தியையும், அரண்மனையின் அந்தகாரத்தைப் போக்க அலங்கார மின் விளக்கையும் கூட்டித் தன் சுய தேவைகளைப பூர்த்திசெய்து கொள்ளுகிருன். ஆனுல், நம் இதய இருளைப் போக்கிக்கொள்ள என்ன வழியைக் கண்டு பிடித்திருக்கிறேம்? எண்ணிப பார்த்தோமா நாம்?

"இருளிலிருந்து வெளிச்சத்தைப் பிரகாசிக்கச் சொன்ன தேவன் இயேசு கிறிஸ்துவின் முகத்திலுள்ள தமது மகிமையின் அறிவாகிய ஒளியைத் தோன்றப் பண்ணும பொருட்டாக எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார்."

(2 கொரிந்தியர், 4:6)

நாம் தேடும் ஞான ஒளி உலக இருளைப் போக்கும் பேரொளி பலலாயிரம் ஆண்டுகளாக எண்ணி, எண்ணி ஏங்கி, ஏங்கி, என்று வருமோ அந்தப் பேரின்பப் பெருஞ் சுடர் எனவெல்லாம் எண்ணிலடங்கா மாந்தர் வேண்டுதல் செய்து கொண்டபோது வாராது வந்த மாமணியாய் வந்துதித்த அருள் நிறை ஞான ஒளி; கிறிஸ்துநாதரின் கருணை ஒளியாகும். அந்த ஒளியினை வழிச் சென்றால் நமக்கு இன்னல ஏது? இடுக்கண் ஏது? எதிர்த்துவரும் பகை ஏது பயம் ஏது?

ஒளியின் அருட்சுடரை எல்லாரும் அடைந்துவிட முடியுமா? சிலரால் முடியும், பலரால் முடியாது. முடியாத பலர் யார்? அவர்களை நாம் வரையறுத்துக் கூறிவிட முடியுமா?

இன்றைய மனிதர்களின் உள்ளங்களை எப்படி அறிய முடியும்? மனித சமுதாயத்தின் வாழ்க்கை, பிணத்தின் மீது எழுப்பப்பட்ட பளிங்குக்கல் சமாதியைப் போல் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது. வருடந்தோறும் அக்கல்லறைக்கு வண்ணம தீட்டிச் சுத்தம் செய்வதுபோல நாம் தினமும் குளித்துப் புத்தாடை புனைந்து புனிதத் தன்மையுள்ளவரைப் போல், நம்மை நாமே காட்சிப் படுத்திக் காட்டுகிறோம் ஆனால் கல்லறைக்குள்ளே எலும்பும் தசையும் அழுகி நாற்றமெடுத்துத் தசை வேறு எலும்பு வேறாகப் பிய்த்து விலக்கப்பட்டுக் காக்கையின் கூட்டைப் போல் காட்சி அளிக்கும் கல்லறையின் உட்புறத்தைப் போன்ற நம் இதயத்தை யாரால் எப்படி அறிந்து கொள்ள முடியும்? அவரவர்கள் வெளிப்படையாகச் செய்கின்ற தீய காரியங்களைக் கொண்டே இவர்கள் இன்னார்

"பொல்லாங்கு செய்கின்ற எவனும்
ஒளியைப் பகைக்கிறன். தன கிரியை
கண் கண்டிக்கப் படாதபடிக்கு ஒளி
யிடத்தில் வராதிருக்கிறன."

(யோவான 3.20)

எவன் ஒருவன ஆண்டவருடைய வேத வாக்கை மதியாமலும், அதன வழி நடவாமலும். தன் இச்சையின் வழி நடக்க விரும்பு கிறுனே, அவன் அதன் பலனுய் உலகப் பாவங்களை எல்லாம் சுமந்து பலராலும் கெட்டவன எனறு தூற்றபபடுவான. அபப டிப் பட்ட வர்கள் ஒளியின அருட் சுடரை, அடைய முடியாத வர்கள். மறறவர்கள் பாக்யவானகள். ஆகவே அந்தப் பேரினபச் சுடர் ஒளியை நாம் அடைய வேண்டாமா அதன் பொருட்டு அலலும பகலும் ஆணடவரின திருப பாதத்தின கீழ் நினறு கண்ணீர் சிந்த வேண்டாமா?

தெயவச் சுடரொளி

ஞான ஒளியின மகிமை அவ்வளவு மேன்மையானதா. ஆம்! அளவிலலாத மகிமை, பொருந்தியதாகும்.

உலகப் பந்த பாசத்தை வெனறவர்கள் யார்? சிற்றின்பத் திலே மூழ்கிச் சின்னு பின்னப் பட்டு, அடைந்த வேதனைகளை எணணி எண்ணிக் கண்ணீர் விட்டார் தாயுமான சுவாமிகள். அகிலத்தில் வளரும் ஆசாபாசங்களும், அதனுல் விளையும் அறபத்தனங்களுமு, அவறறின எதிரொளியாக உருவாகும் வேதனை நிகழச்சிகளும அவ்வளவையும் விட்டு விலக வேண் டும் அலலவா! அதன நிமித்தம உருவ வடிவில் அல்லாத ஜோதி வடிவான ஞான ஒளியை வேண்டி உலக ஞானி தாயு மானுர்.

"பந்த மெலலாம் தீரப் பரஞ்சோதி உருவாய்,
வந்த வடிவை மறவேன பராபரமே"

என்கிருர். வெட்ட வெளியை எல்லாம் மெய் யென்று நினைத்துப், பட்டப் பகலிலே பாவ மூட்டைகளைப் பயமின்றிச் சேர்தது, எட்ட இருக்கும் துனபங்களை எல்லாம் ஏராளமாக அழைத்து நெருங்க விட்டு இறுதியில பட்ட மரம் போலக் காட்சி அளிக்கும் நமக்கும் கண்ணிருந்தும் குருடர்களாய்

நடமாடும் மானிடச் சமுதாயத்திற்கும் தாயுமானவர் காட்டும் ஞான ஒளி, தகுந்த பாதுகாப்பல்லவா! அந்தப் பாதுகாப்பை அடைவதற்கு நாம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் தான் என்ன? கடந்ததைக் கருதிக் கவலைப படாமல் எதிர்கால ஆன்ம இளைப்பாறுதலுக்கு அந்த ஞான ஒளியைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டாமா!

மரணத்தை வென்ற மாஜோதி

இறப்பும் பிறப்பும் மனித வாழ்வின் பொதுவான நியதி. பிறந்தவன் ஒருநாள் இறந்தே யாதல் வேண்டும் இறப்பு எப்போது வரும்; என்றைக்கு வரும்; எந்த நேரத்தில் வரும் என்பதை யாரும் சொல்ல முடியாது. காலச் சக்கரத்தின் ஓட்டத்திலே, ஓடும் சக்கரத்தின் ஓரத்திலே ஒட்டி ஓடுவன ஓடும்; விழுவன விழும் ஓடுவதும் விழுவதும, விழுவதும ஓடுவதும் எப்படி அன்றாட நிகழ்ச்சிகளாக உள்ளனவோ அப்படியே மரணமு மாகும

"என்னப்பா, டேவிட் இறந்து விட்டாராமே"

"என்ன டேவிட்டா அந்தக் கனத்த ஆசாமியா"

"ஆமாம சார் அவரேதான, கண்ணாடி அணிந்து கையில் அலங்காரக் கைத் தடியையும வைத்திருப்பாரே"

"அரா நேற்றுக் கூட கோவிலில் பார்த்தேனே சென்ற வாரம தான உத்தியோக உயர்வு கூடப பெற்றதாகக் கேளவி"

"ஆமாம் அவரே தான். பாவம் நானகு பெண்கள் ஓர் ஆண் குழந்தை மனைவி இவர்களை எல்லாம விட்டு விட்டுப் போய விட்டார். அகால மரணம இதயம் நின்று விட்டது.

"சவத்தை நாளைக்கு எடுப்பார்களா?"

"இல்லை இல்லை கெட்ட நாற்றம வர ஆரம்பித்து விட்டது. ஆகையால இன்று மாலையே"

என்பன முதலிய பேச்சுக்கள் நம் காதுகளில் அடிக்கடி விழும் செய்திகளாகி விட்டன: அப்படிப்பட்ட மரணத்தையும் ஞான ஒளியின் தயவால் வென்று விடலாம் என்கிறார் ஔவை மூதாட்டியார்.

"துரியங் கடந்த சுடரொளியைக் கண்டக்கால்
மரணம் பிறப்பில்லை வீடு"

(ஔவைக் குறள்)

இறப்பு பிறப்பில்லாத ஓர் அமரவாழ்வை அடைய வேண்டுமானால் இறந்தும் உயிர்வாழ்வதற்கு வேண்டிய உத்தம வழிகளைக் காட்டி உலகச் சரித்திரத்திலே என்றும் நிலைத்து நிற்கும் ஏகாந்த அமர வாழ்வை அடைய எல்லாம் வல்ல எம்பெருமானின் அருட் ஜோதியைக் கண்டால் போதும் என்கிறார் ஔவை மூதாட்டியார்.

அறிவு பகரும அருட் ஜோதி

பாஞ்சாலங் குறிச்சியின குறுநில மன்னனை, வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்த்து விடுதலைப் போர் புரிந்து இந்திய நாட்டின தன்மானததைக் காக்க. கயற்ருறு என்ற ஆறறங் கரையின ஓரமாக உள்ள புளிய மரத்திலே, தூக்குக் கயிற்றிலே தொங்கிப் பாரதப பெரு நாட்டின வரலாறறில தனியிடம பெற்ற தமிழகத்தின் மாவீரன் வீரபாண்டிய கட்டபொம்மன். அவனைப பறறி நினைக்கும் போது, அந்தப் பாஞ்சைப் பதியின் காவலனைக் காட்டிக் கொடுத்த எட்டையப் ன நம் மனக்கண் முன்னே நிறகிறுன அல்லவா! அவர்கள் இருவரையும் நினைக்கின்றபோது, அவர்களைத் தமிழகத்திற்கு அறிமுகம் செய்து வைத்த அறிஞர் ம.பொ.சி. அவர்களும் நம் நெஞ்சங்களிலே தோன்றுகிறுர் அல்லவா! அந்த எட்டையபபன வாழ்ந்த எட்டைய புரத்தின் அரசவையிலே பதினேழாம நூறறுண்டில் அரசவைப புலவராகத் திகழ்ந்தவர் உமறுப புலவர். அப்பெருந்தகை நபிகள் நாயகத்தின் வாலாற்றினைத் தம் கவிதையின் வாயிலாகப் பாருககுப் பரைசாற்றிய காவியக் கவிஞர் ஆவார். உலகுக்கு நன்மையை நாடிய நபிகள் நாயகத்தை இஸ்லாமிய சமயச் சீர்திருத்தச் செம்மலைக் காலப போக்கைக் கருதாத சில கசடர்கள் மக்காவிலிருந்து மதிணுவுக்கு அடித்துத் துரத்தித் துன்புறுத்தி அகங் குளிர்ந்தனர். அந்த மிகக் கொடூரம் பொருந்திய செய்தியை உலக மக்களின் உள்ளங்களிலே உணர்த்தி வைத்த உத்தம மகா கவிஞன் உமறுப் புலவர். அவர் ஆண்டவனை ஜோதிவடிவிலே காண்கிறுர்.

"இருவிழி சிவந்து கனல் பொறி தெறிப்ப
எடுத்தகைக் கதையினால் உருக்கி
வருமவர் எதிர் நின்றொரு மொழி கேட்ப
மறுமொழி கொடுத்திட அறியேன்!
தருமமும் பொறையும் அறிவு மற்றறிந்துன்
றன்னையும் என்னையும் அறியப்
பெருவரம் தருவாய் ஆதிநாயகனே!
பேதியாச் சோதிமா முதலே"

(சீறாப்புராணம்)

"ஐயகோ! என் இறுதி நாளிலே மரணத் தேவனின் தூதுவர் சினத்தினால் சிவக்கப் பெற்ற விழிகளுடையராய், அவ்விழிகளிலிருந்து தீப்பொறி பரந்தெழ சினந்து உருத்தென்னை நோக்கி, கைகளில் தாங்கிய தண்டத்தோடு நான் உலகில் புரிந்த நற்செயல் தீச்செயல் ஆகிய இவற்றின் பலனைப் பற்றிக் கேட்பார்களாயின், அவர் எழுப்பும் வினாவுக்கு விடை அளிக்க வகையறியேன் ஏழையேன்: என் உண்மையை எடுத்துரைக்கும் வலிமையற்றேன உலகிற்கு நன்மை புரிந்திருப்பேனாயின அஞ்சாது அவற்றை எடுத்துரைப்பேனே! ஐயோ நான் புரிந்த குற்றங்களை குவித்தெடுத்து உரைத்தால் அக் குற்றங்கள் வெளிப்படுமே! அவற்றை எடுத்துக் கூறும் மனத் திண்மை எனக்கு—இக் கொடிய பாவிக்கு உண்டோ! இல்லை, இல்லை! ஆயினும் அவரது கோபத்திலிருந்து நான் தப்ப வேண்டுமாயின, இறைவா! அற நெறியும், பொறுமையும் பேரறிவும் பெற்றுச் சன்மார்க்க நெறிநின்று நின்பால அன்பு பெருக உமது குணாதிசயங்களையும் பேரருள் திறனையும் அறியவும், உலகில் மானிடனாய்ப் பிறந்த எனது நிலையையும், தன்மையையும், கடமைகளையும் ஆராய்ந்துணர்ந்து, அன்பு நெறியில் ஒழுகுவதற்குப் பேரருள் புரிந்து நான் விரும்பும் வரத்தைத் தருவீராக. நான் வேண்டும் வரத்தை மறுக்காமல தரத் தக்க பேரருள் கொண்டவன் நீ. குறையிரந்து வேண்டும் அடியார்களின் மனத்தைத் தடுமாறச் செய்யாது ஆட்கொள்ளும் அருட் கடல் நீ" என்று இறைவனை நோக்கிப் பாடுகின்றார்.

ஆன்மாவின் அழியாச் ஜோதி

இத்தாலி நாட்டைச் சேர்ந்தவர் பேரறிஞர் சி. ஜே. பெஸ்கி என்பவர். அவர் சமயப் பணிபுரியும் பொருட்டுத் தமிழ்நாட்டை வந்தடைந்தார். தமிழ்நாட்டில் தங்கி வாழ்ந்த அவர் தம்மை ஒரு தமிழராகவே ஆக்கிக் கொண்டார். தமிழ்நாட்டு மக்களோடு நெருங்கிப் பழகிய அவர், தமிழ்நாட்டுப் பண்பாடுகளையும் நாகரிக ஒழுக்கங்களையும் மேற்கொண்டார். அதன் காரணமாகத் தம் பெயரையே வீரமாமுனிவர் என மாற்றிக் கொண்டார். அப் பெயர் அவரால் மாற்றிக் கொள்ளப்பட்டதன்று என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கதாகும். அவரோடு நெருங்கிப் பழகிய தமிழ்ப் பெருமக்கள் அவரது பேரறிவையும் பெருங் குணங்களையும் கண்ட தமிழ் மக்கள் அவரை வீரமாமுனிவர் என்றே அழைத்தனர். அத்தகு சிறப்புப் பெற்ற அவர் தமிழ் மொழி இலக்கியங்களையும் இலக்கணங்களையும் குற்றமறக் கற்றுணர்ந்து பெரும் புலமையும் பெற்றார். அதன் பயனாய் எழுந்ததே "தேம்பாவணி" என்றதோர் அழியாத அரிய காவியமாகும். அக் காவியத்துள் இயேசுநாதரைப் போற்றி வணங்கக் கருதிய அவர்.

அறக்கடல் நீயே அருட்கடல் நீயே;
அருங் கருணாகரன் நீயே;
திறக்கடல் நீயே, திருக்கடல் நீயே;
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே நிகர்கடந் துலகில
நிலையும் நீ; உயிரும் நீ; நிலைநான்
பெறக்கடல் நீயே; தாயும் நீ; எனக்குப்
பிதாவும் நீ; அனைத்தும் நீ; அன்றோ'

(தேம்பாவணி)

என அவரது சிறப்புகளை எடுத்துரைக்கின்றார் எல்லாமுமாய் விளங்குபவன் இறைவன் என்பதே அவரது துணிபு இறைவன் அறக்கடலாக விளங்குபவன்; அருட்கடலாக விளங்குபவன்; கருணையே வடிவாகத் திகழ்பவன்; அனைத்து வன்மைகளும் பொருந்தியவன்; உலக உயிர்களின்—சிறப்பாக மானிட உயிர்களின்-குற்றம் நீங்கிய-களங்கமற்ற தம்பால் எழுந்த குறைகளை எண்ணி எண்ணிக் கலங்கி கண்ணீர் சொரிந்து, அக் குறை

களைத் தம் மனத்துள்ளிருந்து அகற்றிப் பேரொளிப் படருமாறு குறையிரந்து வெண்டும் தன்மையைப் பெறற திருந்திய உள்ளங் களிலே அறிவாகிய ஒளி நிலைக்குமாறும் பேரின்பப பேரொளி நாடுமாறும அருள்புரிகின்ற ஞானக் கடலாக விளங்கி, ஞானக் குருவாக விளங்குபவன்; ஈடு எடுப்பு இலலாதவன, உலக உயிர்களினூடும அசைவன அசையாதனவாகிய அனைத்துப் பொருள்களினூடும பொருந்தி அவ்வப பொருளாக நீக்கமற நிலைத்து விளங்குபவன்; ஆன்மநேய ஒருமையோடு பொருந்திய உயிராகவும, அவ்வுயிர் பொருந்தி நிலைபபதற்குரிய சாதனமான உடலாகவும் இருப்பவன; தாயாகவும, தந்தையாகவும பிற அனைத்துச் சுற்றமாகவும இருபபவன" என அவரது தன்மை களை எடுத்துரைக்கின்றார்.

எழுஞ் சுடா ஜோதி :

இனபத் தமிழகம எலலா வகையிலும் எழில பொங்கி நிறகும் இனிய பூஙகா எனில மிகையாகாது வள்ளலகள் தோனறினார்கள்; வாழையடி வாழையாக திருமறை போதிக்கும் வள்ளலார்கள் தோன்றினார்கள்; மாமேதைகள் பிறந்தார்கள்; அவர்கள் வழி மோனத்திலாழ்ந்த ஞானியர்கள் வளர்ந்தார்கள்; உத்தமர்கள் வாழ்ந்தார்கள்; அவர்கள பாரம்பரிய வாரிசான உலக மகானகள வாழ்ந்தார்கள ; காலததைக் கணக்கிட்ட கருத்தாழக்காரர்களும் உதித்தார்கள் ; அவர்களின் வழித் தோனறலகளாக எதிர்கால நிகழ்ச்சியைக் கூறும கவிஞர்கள் பரவினார்கள். அவர்களின வழிவந்த கவிஞர்களில் பலர் இனனும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள. அவர்களுள் ஒருவர் இனறு நமது பைந்தமிழ் நாட்டில் நடமாடும் கவிக் கோவிலாகத் திகழ்ந்து வருபவர் நம் பெருமதிபபிற்குரிய நாமக்கல கவிஞர் திரு. வே. இராமலிங்கம் பிள்ளையவர்கள் ஆவார்.

தமிழக அரசின் ஆஸ்தான கவிஞராக இருந்த அவர் பண்பே உருவானவர். அந்தக் கவிச் சக்ரவர்த்தி ஆண்டவனை ஜோதி வடிவிலே காண்கிறார். அந்த ஜோதி எப்படி எப்படி எல்லாமோ பரவி நிற்கிறது.

அன்பு செலுத்துவோருக்கு அனபாய்த் திகழ்கின்றார் ; அறிவுக்கெல்லாம் அறிவாய் நிறகின்றார் ; அவரை அறிந்தவர்

களுக்கு அவர் சாதாரணமானவர். அறியாதவர்களுக்கு என்றும் அறியாதவர். முதலும் முடிவும் இல்லாத ஓர் ஆராய்ச்சிப் பொருளாகவும் இருப்பார். மூடர்கள் மனத்திலும் ஒரு மூலையில் இருந்துகொண்டே யிருப்பார். யார் யார் எந்தெந்த உருவில் எவ்வெவ் வகை உலோகங்களில் செய்து துதி செய்கிறார்களோ அவை யாவற்றிலும் இருக்கின்றார். உருவாக்கப்பட்ட சிலந்திக் கூட்டைப் பார்க்கும் நாம் அதைப படைத்த சிலந்தியைக் காணாததுபோல்—சிலுவையிலிருந்து மறைந்துவிட்ட ஏசுவைப் போல் மின்னி மறைந்துவரும் ஜோதியிலே ஆண்டவனைக் காண்கிறார் நாமக்கல்லார். அவர் கண்ட ஜோதி,

"அனபனுக் கன்பாய் வந்து
அறிவினுக் கறிவாய் நின்று
அறிந்தவர்க் கெளியனாகி
அல்லவர்க் கரியனாகி

முனபினும் நடு வொனறினறி
முதுமறை தனக்கு மெட்டின
மூடர்கள் மனத்திறகூட
மூலையி லொதுங்கி நின்று

செம்பினும் கலலினுலும
செய்தவை எலலாமாகிச்
சிலந்திபோற கூடுகட்டி
சிலுவையில மறைந்தானபோல

என்பினுக் கென்பா யெனறும்
எம்முளே விளங்குகினற
எழுஞ்சுடர் ஜோதியான
இறைவனை இறைஞ்சி நிறபோம"

இதயங்கனிந்து பாடும கவிஞரின கூற்றில் எத்துணை உண்மை பொதிந்துள்ளது என்பதை ஆராய்ந்து காணுங்கள்.

அருடபெருஞ ஜோதி!

"உலகத்திலே வந்து எந்த மனுஷனையும பிரகாசிக்கிற ஒளியே அந்த மெய்ஞான ஒளி."

(யோவான், 1:9)

ஆண்டவனை வழிபட்ட அறிஞர் பெருமக்கள் அனைவரும் ஜோதி வடிவிலே வழி பட்டார்கள்; என்று பார்க்கின்றபோது, உருவத்தை மறந்துவிட்டார்கள் என்று அர்த்தமில்லை. உருவ வழிபாடு வேண்டுமா? வேண்டாமா? என்ற விளக்கத்திற்குப் பின்னால் வருவோம்.

அருட்பெருஞ் ஜோதி என்று சொன்னவுடன் நம் முன்னே ஞானவடிவாய் நிற்பவர் இராமலிங்க அடிகள் ஒருவரே ஆவார்

ஆண்டவனைச் சோதி வடிவிலே வழிபட்ட அவர் நிலைக் கண்ணாடியின் முன்னமர்ந்து, அதனுள் பிரதிபலிக்கும் தன்னுருவையே இறைவனது திருவுருவாகத் தம் அகக்கண்ணால் கண்டு வணங்கினார் அக் கண்ணாடியின் முனனால் வைக்கப்பெற்ற விளக்கிலிருந்து எழும் சுடரொளி கண்ணாடியினின்று எழும் பேரொளியாய்த் திகழ, அவ்வொளியையே இறைவனது பேரொளியாகக் கொண்டு அருட்ஜோதி வடிவத்தைத் தம் அகக்கண்ணால் கண்டு வணங்கினார். தாம் கண்டுகளித்த அருட்ஜோதி வடிவைப் பிற மக்களுக்கும் உணர்த்தி ஞான மார்க்கத்தைப் பரப்பினார். இவ் வுண்மையை இன்னும் வடலூர்ப் பதியிலே கண்டு இன்புறக் கூடும்.

இராமலிங்க அடிகளும் மனிதரே. இவர் கலி 4925 சுபானு ஆண்டு புரட்டாசித் திங்கள் 21ஆம் நாள், அதாவது ஆங்கில ஆண்டு 5—10—1823 ஞாயிற்றுக்கிழமையன்று பிறந்தார். அருட்பெருஞ்ஜோதி வடிவாய்த் திகழும் சமரச சுத்த மார்க்க ஞானகுருவின் தாயாரின் பெயர் சின்னம்மாள். வடலூரில் வட்டப்பெருஞ்சுடராய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டின் விடிவெள்ளியான வள்ளலாரின் தந்தையார் பெயர் இராமையா பிள்ளை.

"கருணையிலா ஆட்சி கடுகி யொழிக
அருணயந்த நன்மார்க்க ராள்க—தெருணயந்த
நல்லோர் நினைத்த நலம்பெருக நன்றுநினைந்து
எல்லாரும் வாழ்க இசைந்து."

எனக் கருணை இல்லமாய் மக்களின்மீது கடுமையான சட்டத்தைத் திணித்து அராஜகம் புரியும் ஆட்சியை அழித்து, நன்மையே புரியும் நல்லவர்கள் ஆள வேண்டும். நல்லவர்கள்

நினைத்தநற்காரியங்களெல்லாம் நலமே அடைய வேண்டும் மனிதசமுதாயம் முழுவதும் ஆன்மநேய ஒருமைப்பாட்டோடு இன்புற்று வாழ வேண்டும் என்ற அருள் நெறியை அவனிக்குப் போதித்த அருள் ஞான வடிவான வடலூரார் பிறந்த இடம் சிதம்பரத்திற்கு வடமேற்கிலுள்ள மருதூர்ப்பதியாகும்.

"எம்மதமும் சம்மதம்" என்ற தத்துவ விளக்கத்தை அளித்துச் சுத்த சன்மார்க்க நெறியை பரப்பியவர் இராமலிங்க அடிகள்.

சாதி சமய வேறுபாடுகளை வெறுத்துத் தள்ளி "அனைத்து மக்களும் ஒருதாய் வயிற்றில் பிறந்த மக்களே" என்ற ஒற்றுமை மனப்பான்மையை வளர்த்த பெருமையுடையோன் இராமலிங்க அடிகள்

மதங்களுக்குள்ளே பெரியன, சிறியன என்ற போராட்டங் கள் தலைதூக்கி இருந்த காலத்தில, அந்தக் கொடிய பிணி யைத் தன்னுடைய ஒன்றே குலம் ஒருவனே தேவன" என்ற ஐக்கியக் குரலை எழுப்பி அச்சண்டவர்களின சதுராட்டத் தைச் சமக்குழிக்கு அனுப்பிய சிறப்பு வாய்ந்த திருப்பணித் தேருக்குச் சாரதியாக இருந்தவர் இராமலிங்க அடிகள் அத் தகைய பெரியார் ஜெகநாதனை இரட்சகனைச் சோதி வடிவிலே கண்டு

"ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரு மாக்கையும
ஆக்கமு மருளிய அருட்பெருஞ்சோதி"
"எல்லையில் பிறப்பெனும் இருங்கடல கடத்தியென்
அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி"
"எங்கே கருணை இயற்கையிலுள்ளன
அங்கே விளங்கிய அருட்பெருஞ் ஜோதி"
"அருள முதளித்தனை யருணிலை யேற்றினை
அருளறி வளித்தனை அருட்பெருஞ் ஜோதி.

என்று மெய்யுருகிப் பாடுகிறார் இராமலிங்கர், இப்படி மகான களில் பலர் ஜோதி வடிவாக ஜெகந்நாதனை வணங்கிப் போற்றி யிருக்கிறார்கள். அந்தப் பெருஞ்ஜோதிப் பேரொளியாய்ப்பூரண ஜோதி உருவமாய்க் கிறிஸ்து பிரான் வானத்தின் ஜோதியாய் மரித்த மூன்றும் நாள் தோன்றினார்.

உருவ வழிபாடு.

மகான்களெல்லாம் எம்பெருமானை ஜோதி வடிவிலே கண்டு வணங்கி அமரவாழ்வு அடைந்தார்கள் என்று எண்ணுகின்றபோது, உருவ வழிபாட்டில் நமக்குச் சற்று சந்தேகம் தோன்றுகிறதல்லவா! அந்தச் சந்தேகம் மெய்யாகக் கூடியதா என்றால் ஆம்; என்ற பதில் நமக்குக் கிறிஸ்துவ வேதாகமத்திலிருந்தே விளவிக்கப்படுகிறது.

"தேவனும் இரட்சகருமாகிய நீர் மெய்யாகவே உம்மை மறைத்துக் கொண்டிருக்கிற தேவனாயிருக்கிறீர்; விக்ரகங்களை உண்டு பண்ணுகிற அனைவரும் வெட்கப்பட்டு இலச்சை அடைநது ஏகமாய்க் கலங்கிப் போவார்கள்"

ஏசாயா 45 : 15-16.

இப்போது நாம் எனன செய்யப போகிறோம். விக்ரகங்களை வைத்து வழிபடுவது வெட்கபபடவேண்டிய செய்கையா? அபபடியானால் எங்கும் நிறைந்த பரம்பொருளை எநத வழியில் வழிபடுவது. கிறிஸ்து பிறபபதற்கு 700 ஆண்டுகளுக்கு முனனால் ஏசாயா தீர்க்க தரிசி·பகர்ந்த பகுத்தறிவுவசனங்கள் அவை. ஆனால் அன்று இருந்த சுற்றுச் சூழ்நிலை ஆகியவறறை எண்ணிப் பார்த்தால் நமக்கு உண்மையெனப்படுவது எது?

கலபபிலலாத நிறைபொருள

கலப்படமில்லாத பொருளை நாம் தேடி எடுக்க முற்பட்டால், அது வெங்காயத்தை உரித்த கதையாகத்தான் இருக்கும். மனிதனின் அறிவு வளர்ச்சி யடைய, அவன் சிந்தனையும் செயலும் அத்து மீறிப் போகின்றன. அவறறின் முடிவு? பாழும் மனிதன் எந்தப் பொருளையுமே இயற்கையாக இருப்பதை விரும்புவதில்லை. அந்தப் பொருள் எத்தகைய வலிமை பொருந்தியதாக இருந்தாலும் அசைக்க முடியாததாக இருந்தாலும் அவனை எப்படியேனும் மாறுபடச் செய்த கலப்புப் பொருள்களாகச் செய்து விடுகிறான். அம்முயற்சியில் வெற்றியும் காண்கிறான். வெற்றி முகட்டிலே நிற்கும் அவனுக்கு எதையும், செய்து முடித்து விடலாம் என்ற ஆணவமே தலைநிமிர்ந்து நிற்கிறது. அதைப் பயன்படுத்திக்கொண்டு ஆண்டவனின்

அருள் வாக்கையும் அவரது ஆன்மீக அறிவுரைகளையும் மீறிக் கலப்பினை கற்பிக்கிறன.

"அண்டமெல்லாங் கொள்ளா
தணுத்திடமும் தாங்காது
மண்டலங்கள் கொள்ளாது
வானமுங் கொள்ளா துணைத்தான்
கண்ட வுருவிற் கலந்திருப்பா
யென்று சொன்னூற
றுண்டறிக்கமான பெருந்
தோஷம பராபரனே !!

(பராபரன் மாலை)

என வேதநாயக சாஸ்திரியார் பாடியிருக்கிறர்.

மண்ணுலகத்தையும விண்ணுலகத்தையும் படைத்த அந்தப பரமபொருளை சராசரி மனிதர்களாகிய நாம், நமது எண்ணப்படி ஏதாவதொரு செயப்படுபொருளுக்குள் அடைந்து விட முடியுமா? முடியாதல்லவா! எவ்வகையாலும பொருத்த முடியாத அந்தப பரமபொருளை எபபடி வழிபடுவது என்பதைப் பினனால் ஆராய்வோம்

வேதாகமத்தின் நந்திய ஜீவன

ஞானியர்களென்று இந்த நானிலத்தை தீயவழியினின்று பாதுகாகக முயன்ற அனைவரும் தத்தம்சுகதுக்கங்களை அழித்து அகிலம் வாழவேண்டும் என்ற அனபுள்ளம கொண்டவர்களே! ஆனால், அவர்களில பலர், தாம சொல்லுவதையே வேத வாக்காக எண்ணவேண்டும்; தம வழியைப பினபற்றி நடத்தல வேண்டும; தமமைப பின்பற்றுபவர் அனைவரும் தன்னை ஆண்டவனாகத் துதிக்க வேண்டும் என்ற ஒருநிலை பிறகாலத்தில் ஏற படக்கூடும், அபபடி ஏறபடுமாயின் மக்கள் மத்தியிலே தெய்வ பக்தி அகனறு தனி மனிதனின் அதிகாரசக்தி மலிந்துவிடும் என்ற காரணத்தினால் முன்கூட்டியே வேதம் நமக்குக் கூறு கிறது.

"அவர்கள் தங்களை ஞானியர்களென்று சொல்லியும் பைத்தியக்காரராகி அழிவில்லாததேவனுடைய

மகிமையை அறிவுள்ள மனுஷர்கள் பறவைகள் மிரு
கங்கள் ஊரும பிராணிகள் ஆகிய இவைகளுடைய
ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினுர்கள். (ரோமர் 1:22)

மனிதர்கள் தங்களுடைய எண்ணங்களுக்கு ஏற்றவாறு இறைவனின் உருவத்தை ஏற்படுத்தி விடுகிருர்கள் என்பதை மனம் வருந்திச் சொல்லும் சங்கராச்சாரிய சுவாமிகள

"வட்ட மதி யிரவிதமைப் பூசிப் போரும்
மண்ணிலிங் கந்தனை யெடுத்துப் பூசிப்போரும்
சுட்ட உருமரச் சிலைகள் பூசிப் போரும்
துய்யகல்லு செம்பு வைத்துப் பூசிப்போரும்
திட்டமுடன் எட்டெழுத்தை பொருளென் போரும்
சிறந்தவஞ் செழுத்துமே பொருளென் போரும்
விட்ட விடந்தனை யறியா ரிவர்தாமெல்லாம
விஷ்ணு வென்றுஞ் சிவனென்னும் விளம்புவரே"

என்று பாடுகிருர். அதுமட்டுமன்று,

நாம் செய்கின்ற பூஜைகள், படைக்கின்ற பல்வகை உணவுப் பொருள்கள் அனைத்தையும் ஆண்டவன் புசிப்பதில்லை. கடன்பட்டுக் காசிக்குச் சென்று-வட்டிக்குப் பணம் வாங்கிப் பழனிக்குச் சென்று சீட்டை எடுத்துச் சிதம்பரம் தரிசித்துப் புண்ணியம் தேடிக்கொள்ள எண்ணுவதெல்லாம் வீண் சுமையே என்பதை

"மண்ணிலே பிறந்த கல்லை வகைவகை தெரிந்தெடுத்து
எண்ணிலா லிங்கமாக இயல்புடன் கோவில் கட்டிப்
பண்ணியே வைத்துப் பின்னும் பல பல பூசை செய்வோர்
விண்ணிலே சேர்வதில்லை வீணிலே நரகில்வீழ்வார்"

என்பதையும் சங்கராச்சாரிய சுவாமிகளே சொல்லுகிருர்.

சுவாமிகளுடைய பொன் மொழிகளை நாம் எண்ணிப் பார்க்கின்றபோது, பல உண்மைகள் நமக்குப் புலனுகின்றன. அந்த உண்மைகள் எல்லாம் வாழ்க்கையோடு பிணைந்துவிட்டு ஒருகிவிடுகின்றனவா? அல்லது வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு அதன் ஈட்டேற்றத்திற்கு வழிவகை செய்கின்றனவா

எனபதையும் நாம் சிந்தித்துப் பார்ப்போமேயானால், பெரிய வர்கள் சொல்லியவை யாவும் உண்மையாகவே. தென்படு கின்றன. அந்த உண்மைகளையும் நாம் இக்காலச் சூழ்நிலைக் கேற்ப சற்றே சீர்தூக்கிப் பார்ப்பதும் நன்மை பயக்கும், வள்ளு வப் பெருந்தகை கூறுவது போல,

"எப்பொருள் யார்யார் வாய் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற குறள் வழியேயும் நாம் சென்று பார்க்கவேண்டும்.

தததுவததின தணலே ஜோதி

நெருப்புப்பறறி எறிகின்றபோது பெரும் பிரகாசத்தைக் காண்கிறோம் அந்தப் பிரகாசத்தை நாம் தத்துவ வழியில நோக்குகின்றபோது, ஒரு பெரும் விளக்கம் நம் இதயப் பீடத்தைச் சுறறி வருவது நமக்கு நன்ருகத் தெரிகிறது எறி கின்ற சுடர் எப்படி வந்தது. நாம் ஏற்றுவித்த அக்கினியின் சுவாலையால் ஏற்பட்ட ஒன்றுதானே. அப்படி ஏற்பட்ட ஒன்றுக்குக் காரண காரியங்கள் யாவை? என்பதை யெல்லாம் எண்ணிப் பார்ப்போமே யானுல், அவற்றுக்கு மூல காரணம் இயற்கைச் சக்தியே என்பதும் புலனுகும்

இயற்கைச் சக்தியைச் செயற்கைச் சக்தியோடு கலந்து முடிக்கும் போதுதான் இயங்கும் சக்தி ஏற்படுகிறது. இந்த சக்திகளை யெலலாம் ஆட்டிப் படைக்கும் சக்தி ஒன்றிருப்பதாக நாம் அறிகிறோம். அச்சக்தி ஒன்றே ஆண்டவன் என்ற முடிவுக்கு வருக்கிறோம் அதுவே இயறகை! அதுவே சக்தி, ஆகவே எங்கும் பிரகாசிக்கின்ற அந்த ஒளியைத்தான் பரம் பொருளாக வழி ப டார்கள், ஞானியர்கள் அவர்களின் வழி வந்தவர்களிலே ஒருவர் பட்டினத்தடிகள் ஆவர்.

தம் கரத்தில் ஏந்திய பேய்க்கரும்பு, எந்தத் தலத்தில் கடித்தபோது இனிக்கிறதோ அந்த இடமே தமது முக்திக் குரிய இடமாகத் தேர்ந்தெடுத்தார், அவ் வண்ணமே திருவொற்றியூர்ப் பதியிற் சேர்ந்து, அக்கரும்பைக் கடித்துப் பார்க்க, அது இனித்தது. கடிக்கப்பெற்ற அக்கரும்பின் பாகங்கள் மட்டுமன்று, அவர் அடைந்த அவ் வொற்றியூரே

அவருக்கு இனிமையான காட்சி அளித்தது. அப்பகுதியில் கண்ட ஒவ்வொரு பொருளும் அவருக்கு இறைவடிவாகவே காட்சி அளித்தன. மணலெல்லாம் அவருக்கு இலிங்க வடிவமாகக் காட்சியளித்தன தாமடைந்த அவ்வொற்றியூரை ஒரு புனிதத்தலமாகவே கருதினார் பட்டிணத்தடிகள்.

"தன்னப்பம தன்னைச் சுட்டால், ஓட்டப்பன் வீட்டைச் சுடும்" என்று தன்னைக் கொல்லும் பொருட்டுத் தன்னுடன் பிறந்த சகோதரியே நஞ்சு கலந்து சுட்டுக் கொடுத்த அப்பத்தை வீட்டினமேல எறிந்து வீட்டையே எரியுமாறு செய்தவர் பட்டினத்தடிகள்.

தாயின் பாசமே இத்தரணியில் பெருமபாசம் பத்து மாதங்கள் சுமந்து பெற்ற தாயின் மணிவயிறே மோட்சம் எனபதை அறிந்தவர் வொற்றியூரடிகள் அதனால்தான்,

"ஐயிரண்டு திங்களாய் அங்கமெல்லாம் நொந்து பெற்றுப
பைய லென்றபோதே பரிந்தெடுத்து,
மெய்த்தழுவ கைப்புறத்தி லேந்திக்
கனகமுலை தந்தாளை
எப்பிறப் பிற்காண் பேனஇனி"

என்று தன்தாயின் மரணங்குறித்து இடுகாட்டிலே நின்று கண்ணீர் விட்டுக் கதறி அழுதமகான பட்டினத்தடிகள்!

இறந்த பிணத்தை எரிபபதற்கு முன்னர், அல்லது புதைப்பதற்கு முன்னர் வாய்க்கரிசி யிடுவது நம தமிழகத்தில முன்னுவிருந்தே வழக்கமாகக் கொண்டிருந்தனர் நம் முன்னோர் என்பதனை பட்டினத்தடிகளின் வாக்கினாலேயே அறிகிறோம். தாய்க்கு வாய்க்கரிசி யிடுகின்றபோது,

"அரிசியோ நானிடுவேன ஆத்தாள் தனக்கு
வரிசையிட்டுப பார்த்து மகிழாமல்
உருகியுள்ள மானே என்தேனே
அமிர்தமே என்றழைத்த வாய்க்கு"

என்று அழுத கண்ணீர் ஆறுய்ப் பெருக்கெடுத்தோட அன்னையின் அமுத வாய்க்கு அரிசியிட்ட அரும்பெரும் ஞானி பட்டினத்தடிகள். அவர்கள் உருவவழிப்பாட்டினை வெறுத்தே

வாழ்ந்திருக்கிறார். என்பது அவர்பாடிய பாக்களிலிருந்தே தெரிகிறது. இதோ, அவர் சிந்திய தேனசொட்டுகள்.

"சொல்லினுஞ் சொல்லின முடிவிலும வேதச் சுருதியிலும்
அலலினு மாசற்ற ஆகாயந் தன்னிலும் மாய்ந்துவிட்டோ
ரிலலினு மனபரி டத்திலு மீசனிருப்ப தல்லாற்

கலலினுஞ் செம்பிலுமோ இருபபா ரெனறன கண்ணுநலே"
எனபதோடு மட்டும அவர் நினறு விடவிலலை. அதற்கு மேலும் ஒருபடி அதிகமாகவே செனறு,

"உளியிட்ட கலலையு மொப்பிட்ட சாந்தையும மர்ந்ததற்ப
புளியிட்ட செம்பையும போற்று கினேனுயர்
பொனனெனவே
ஒளியிட்ட தாளிணை டுள்ளே யிருத்துவ துணமையெனறு
வெளியிட்ட டடைத்து வைத்தே னினிமேலொனறும்
வேண்டிலனே"

எனறு கலலிலுலு செம்பிலுலும எலலா உலோகங்களிலுலும் செய்யப்பெற்ற கடவுள் படிவங்களைத் தொழ மாட்டேன் எனறும உறுதியோடு கூறுகிறார் திருவொற்றியூரடிகள்.

பூசை பணணுவதன பயன

ஒருவரை நாம போற்றுகின்ற தன்மை அலலது துதிக்கின்ற நிலை இவை இரணடினும் நாம ஏதோ ஒன்றை அவரிடமிருந்து எதிர் பார்பபதற்கு அறிகுறிகளாகக் காண்கினறன அப்படித்தான இனறைய சமுதாயம் செயல்பட்டுவருகிறது

நாம புதிதாக வேலைக்குபபோகும்போதும் வேலையில அமர்ந்தவுடன உத்தியோக உயர்வு பெறுகினறபோதும்-விடுமுறை அனுமதி கேட்கினறபோதும், உஙகள் மேலான சமூகத்திற்கு, (Your goodelf) உங்கள் கீழ்படிதலுள்ள, (Your most obebient) உங்கள் உண்மைக்குப் பாத்திரமான, Yours truly) என்றெல்லாம் பா பாடி போற்றிப்புகழ்ந்து நம்மையும தாழ்மைபபடுத்திக்கொண்டு எழுதுகிறோம: பேசுகிறோம். அது போலவே நாம் ஆண்டவனைப பூ பழம வைத்து, பொஙகல் மற்றும் பல பொருள்களை வைத்துப் பூஜிபபது ஆண்டவனிடம் ஏதோ ஒன்றை மட்டுமல்ல நாம் நினைப்பவற்றை

எதிர்பார்க்கிறோம் என்பதைத் தவிர வேறென்ன இருக்க முடியும்!

உள்ளன்போடு ஆண்டவனைத் தொழுவது அவரை நினைத்து அழுது, அழுது தான் செய்த குற்றங்களை எண்ணி எண்ணி மனத்தாபப்பட்டு "மீண்டும் அப்படி ஒரு பாவத்தைக் குற்றத்தைச் செய்யமாட்டேன்" என்று மனம் திருந்துவதை நம்மில் எத்தனை பேர் கடைப்பிடிக்கிறோம்! இல்லையே. அதை வள்ளலார் கடைப்பிடித்தார்.

> "நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
> நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
> நிறைந்து நிறைந்தூற்றெழுங் கண்ணீர் அதனால்
> உடம்பு நனைந்து நனைந்தருளமுதே
> நன்னிதியே ஞான
> நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
> வனைந்து வனைந்தேத்துதும் நாம் வம்மின்
> உலகியலீர்"

என்கிறார் இராமலிங்க அடிகள்-தாமமட்டும் அப்படி நினைந்துருகி ஆண்டவன் அருளைப்பெற நினையாது, மற்றோரையும் தம்முடன் அப்பேறுபெற அழைக்கின்றார்.

அப்படி மனமுருகி வழி படுவதல்லாமல் கண்ட உருவங்களைக் கடவுளெனக் காணும் தன்மையைத் தம் இதய ஒளியிலிருந்து வெளி வீசுகிறார் சிவாக்கியர்.

> "சுட்டுவைத்த தேவரும் சுடாது வைத்த தேவரும்
> நட்டு வைத்த தேவரும் நடாதுவைத்த தேவரும்
> கட்டிவைத்த தேவரும் கட்டவிழ்க்க வல்லரோ
> இட்டு வைத்த விடத்திலே கிடப்பதன்றி யென்
> செய்வார்"

நாம் வைத்த இடத்திலேயே அப்படியே நகராமல்-ஆடாமல்-அசையாமல் இருக்கின்ற தெய்வத்தை நான் விரும்பேன் அப்படிப்பட்ட தெய்வத்திற்கு, ஆராதனையும் வழிபாடும், செய்வதை நான் ஒரு போதும் விரும்பமாட்டேன் என்பதை விளக்குகையில்,

" நட்ட கல்லை தெய்வமென்று நாலு
புட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணென்று
சொல்லுமந்த்ர மேதடா
நட்ட கல்லும் பேசுமோ
நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்
சுவை அறியுமோ "

குழம்பு சமைக்க உபயோகப்படும் சட்டிக்கு எப்படிக் குழம்பின சுவையும், மணமும் தெரியாதோ, அதைபபோலவே நாம் செய்து வைத்த சிலைக்குப் பக்தியும், சக்தியும தெரிய முடியாது, என்று சிவாக்கியர் மிகவும் சிறப்பாகச் சொல்லி யிருக்கிறார்.

பயனற்ற பூஜை

வண்ண ஜாலங்கள் காட்டி, வகை வகையான பூமாலைகள் சாற்றி, எண்ணற்ற மின் விளக்குகள் ஏற்றி, மேள தாளங்கள் தம தம வென முழக்கி, தேர்த்திருவிழா முதலியன செய்கிறோம். அவற்றால் பயன உண்டா? உண்டு என்றோ இல்லை எனறோ சொல்லுவதற்கு முன்னால், நம முன்னோர்கள் பலர் அறிவு தெளிந்து அருளிய வார்த்தைகளையும் சற்றுக் கவனித்தாக வேண்டும். அந்த முனனோர்களின வழிவந்த கவிஞர் கிருஷ்ணபிள்ளை கூறுவதையும கேட்போம்.

" மண்ணை மணலைச் சிவலிங்க வடிவாய்ச்
சமைத்து மலர்தூவி
எண்ணமின்றி மந்திரஞ் சாற்றியம்பிப்
பழமபாட்டுசள் பாடிப்
பண்ணும் பூசை பயன்படுமோ
பரவைக் கடக்க கற்பனை கொண்
டொண்ணுமோ ரக்ஷணிய கலத்துவந்து
புகுமின் ஜெகத்தீரே "

(இர-யாத்திரிகம்)

என்கிறார். அது மட்டு மன்று, கடவுள் என்பார் ஒருவரே. அவர் கருணையே வடிவானவர். நம்மிடமிருந்து எதையும்

எதிர்பார்க்காத எம்பிரான். அவரிடமிருந்து நாம் எதிர்பார்க்க வேண்டியது ஏராளம்; ஏராளம். ஆண்டவர் நமக்காகப் பாடு பட்டார். நாம் அவருக்காகப்பாடுபட வேண்டாம். அவர் நமக்காக அனுபவித்த பாடுகளை-துன்பத்துயரங்களை எண்ணி நாம் மனந்திருந்தினால், அதுவே நாம் அந்த எம்பெருமானுக்குச் செய்கின்ற தொண்டாகும்; பூசையாகும் வழிபாடாகும் என

" ஒன்றே தெய்வ மெய்க்கருணை யுள்ளார்
உண்மை பிழைபொறுப்பார்
அன்றே வனறு நரர்க்காக வரும் பாடடைந்து
பிணையேற்று
நின்றே பலியா யுயிர்கொடுத்த
நிமலனீதி யடையீரேல
நன்றீவார் கொலையமலை நம்பிவாரும்
ஜெகத்தீரே "

(இர—யாத்திரிகம்)

என்கிறார் கிருஷ்ணபிள்ளை.

ஞானத் தங்கப்பதுமை

முனனோர்களும், மகானகளும், பக்தர்களும் தான் அப் படிப் பாடினார்கள் இலர் சித்தர்களும் கூடப பாடினார்கள். அவர்களும் ஆண்டவனை ஜோதி வடிவிலேயே கண்டு வணங் கினார்கள். சிலை யருகே நினறு பாட்டுப் பாடிப் பஜனை செய் தவர்களைக் கண்டு நையாண்டி செய்தார்கள் சித்தர்கள்

" தாவாரம் இலலை தனக்கொரு வீடிலலை
தேவாரம் ஏதுக்கடி குதம் பாய்தேவாரம் ஏதுக்கடி "

என்று குதம்பைச் சித்தர் பாடலகளிலே பார்க்கிறோம். அந்தச் சிலைவடிவிலே இருப்பதை எலலாம பதுமைகளாக-ஆடம்பர அழகுப் பொருள்களாகச் சிற்பி செபபனிட்ட சிங்காரச் சிலை களாகப் பேசாத பதுமைகளாக நினைத்தார்கள். மற்றொரு சித்தர் பாடுவதைக் கேட்போம்.

" சித்திரப் பதுமையிது சிங்காரக் கோவிலது
மற்றப் பதுமையெலலாம் தங்கமே
மட்டிப் பதுமையடி ஞானத்தங்கமே!

சொல்லும் புதுமை கெட்டு ஜோதி பிரமத்தை விட்டு
கல்லுப் பதுமைக்கெல்லாம் தங்கமே
கையெடுப்ப தென்னவிதி ஞானத்தங்கமே"

என்றார் ஞானசித்தர். கண்டவற்றிற்கெல்லாம் தெண்டனிடும் தன்மை மாற வேண்டும் என்ற தனித்தன்மையை வற்புறுத்தினார்கள்; அக்காலத்து ஞானியர்.

இயேசு நாயகனே தஞ்சம்

நாம் என்னதான் வருந்தி-திருந்தி வழிபட்டாலும், நம்மை ஏறெடுத்துப்பார்க்காத-நாம் சொல்லும் எனக்குரலைக்கேட்காத நம் துயரங்களுக்கு ஆறுதல்சொல்லாத ஒரு பொருளை வணங்குவதா, துன்பத்தில் அகப்பட்டு அல்லலபட்டுக் கொண்டிருக்கும் போது நடந்து வந்து நம்மை ஆபத்திலிருந்து காப்பாற்றாத-எரியும் தணலிலே போட்டால் உருகிச் சாம்பலாகும் ஒரு செயற்கை உருவத்தைப் பணிவதா! நாம் திட்டினாலும், அடித்தாலும், பொறுமையாயிருப்பதும், திருடன் வந்து திருடினாலும் செயலேது மின்றிக் காட்சி அளிப்பதுமான சித்திரப் பதுமைகளைத் தொழுவது சரியா? முறையா? கூடாது; கூடவே கூடாது! ஆகையால் என்றும் பிரகாசமாய் எங்கும் வியாபித்திருக்கும்-எப்பொருளுக்கும் எவ்வுயிருக்கும் ஆதியும் அந்தமும் அடைக்கலமுமாயிருக்கும் உலக நாயகனைத் தொழவேண்டும் என்கிறார் வேதநாயக சாஸ்திரியார்.

"வாயிருந்தாலும் பேசிடாதூமை
வலிய கண்ணிருந்தும் நோக்காத
வன்குருடதறகுச் செவி யிருந்தாலும்
வார்த்தை கேட்டறிந்து கொள்ளாது
தீயினிற் போட்டால் எரிந்துபோம் வைது
திட்டியும் பொறுமை யாயிருக்குஞ்
செத்ததோர் பிணம்போல் வைத்திடங் கிடக்கும்
திருடன் வந்தெடுப்பினும் மெடுப்பான
நீயென விடுவி யென்றறி வழிந்து
நீசவச்சிலைகளைப் பணியேன்
நின்னையே பணிவேன் எனையாண்டருள்வாய்
நித்தனே யேசு நாயகனே" (ஜெபமாலை)

என்று பாடுகிறார்.

"சர்வ வல்ல தயாபரனான கிறிஸ்து இயேசுவின் திருவடிகளை அல்லாது வேறெதையும் வணங்க மாட்டேன்" என்று வலியுறுத்திச் சொல்லுகிறார் வேதநாயக சாஸ்திரியார்

மேற்குறித்த "உருவ வழிபாடு" என்ற தலைப்பிலே ஞானியர்கள் பலர் கவிதை வடிவிலே எடுத்துக் காட்டிய விளக்கங்களை எல்லாம் விவேகத்தோடு கூர்ந்து கவனித்தோம். அந்த மகான்கள், சித்தர்கள், ஞானியர்கள் அத்துணை பேரும் பறை சாற்றிய விளக்கங்களையும் அமைதியாகக் கேட்டோம் அவர்கள் சொன்னவைகள் யாவற்றையும் ஏற்றுக்கொள்ளவும், ஒப்புக்கொள்ளவும் கூடியனவே என்ற முடிவுக்கு வந்தோம். ஆனால் முன்பு கூறியதுபோல சிலை இல்லாமல் இறைவனை நாம் வழிபட முடியுமா? என்பதையும் நாம் ஆராய வேண்டும், உருவவழிபாடு வேண்டியதே

"என்ன இது புதுமை. ஞானியர்களெல்லாம் வேண்டாம் என்று சொன்ன ஒன்றை நாம் மட்டும் விரும்பலாமா?" என்று நீங்கள் கேட்பதும் எனக்குக் கேட்கிறது. நாம் எந்தத் தத்துவத்தையும், பொருளையும் செயலையும் ஆராய்கின்றபோதும் அந்தத் தத்துவங்கள் பொருள்கள், செயல்கள், உருவாகிய இருந்த நிகழ்ந்த காலக் கட்டத்தையும் தான் கணக்கில் வைத்தே பார்க்க வேண்டும்.

அப்படிக் காலத்தைக் கணக்கில் வைத்துப் பார்க்கின்ற போது, பல மாறுபாடுகளும் காலத்திற்குக் காலம் தேவைப்படுவதும், தேவையைத் தேடிச் செல்லுவதும், அதைச் செயலில் ஈடுபடுத்துவதும் உலக வழக்கமாகிவிட்டதை நமக்கு நிகழ்ந்து முடிந்த சரித்திரங்கள் சான்று கூறுகின்றன. விளக்கத்திற்கு ஒன்றை எடுத்துக் கொள்வோம்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே புத்தபெருமான் அவதரித்தார். அக்காலத்திலும் தெய்வங்கள், தெய்வ வழிபாடுகள் இருந்தன. பிறகு இயேசுபிரான் தோன்றினார். அன்றைய காலத்திலும் தெய்வ வழிபாடுகளும் இருந்தன. அதன் பிறகு காந்தி அடிகள் பிறந்தார். அவர் வாழ்ந்து மறைந்த நம் காலத்திலும் மனிதர்களும் மதமும் கடவுளும் வழிபாடும் இருக்கின்றன. என்றாலும் புத்தர் காலத்திற்குப் பிறகு

மக்கள் மற்ற தெய்வங்களை மறந்து புத்தரை வழிபட முற்பட்டார்கள். புத்தர் கடவுள் நிலையில் அமர்த்தப்பட்டார். அதே போல இயேசுநாதரின் மறைவுக்குப் பின் மக்கள் மற்ற தெய்வங்களைத் துறந்து கிறிஸ்துநாதரைத் தெய்வமென ஏற்று வழிபட்டார்கள் இன்றளவும் உலகநாடுகள் அனைத்தும் இயேசுவின் ஞான உபதேசத்தை ஏற்றுப் பின்பற்றி வருவதைக் காண்கிறோம். இன்றும், கிட்டத்தட்ட நூறு ஆண்டுகள் கழித்துக் காந்தி அடிகளும் தெய்வ நிலையில் மக்களால் துதிக்கப்படும் ஒருகாலம் வந்தே தீரும். ஆம், இந்து மதத்தின் செல்வாக்கு அதன் மதகுருக்களால் தீயவழியில் இருந்து செல்லுகின்றபோது, மனந்தளர்ந்த மக்கள் மகாத்மாகாந்தி அடிகளையும் கண்கண்ட தெய்வமாக ஏற்றுக்கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இப்படிக் காலம் மாறுபடுவதை யாராலும் தடுத்து நிறுத்திவிட முடியாது.

அவ்வழி நாம் நின்று நிதானித்துப் பார்க்கின்றபோது, நமக்கு ஒரு தெளிவு ஏற்படுகிறது. முன் சொன்ன அதாவது, உருவ வழிபாடு கூடாது என்று சொன்னவர் ஞானியர். அப்பெருமக்கள் வாழ்ந்த காலம் மனிதனை மனிதனுக்கே கருதி வாழ்ந்த காலம் இது நல்லது. இது கெட்டது, என்று ஆராய்ந்து, நல்லவை நிகழும் இடத்தில் அல்லவற்றை அணடவிடாமலும், கெட்டவை உருவாகின்ற நேரத்தில் உண்மையை வெளிப்படுத்தி நல்லவற்றை நிலைநிறுத்துவதுமான சீரிய நல்லெண்ணத்தைக் கொண்டிருந்தனர். எல்லாப் பொருள்களிலும் ஆண்டவன் இருப்பதாக நினைத்துக் குறிப்பிட்ட ஓர் உருவத்தை வைத்துப் பூசை செய்யாமல் எங்கும் நிறைந்த இறைவனை இப்படித்தான் தொழவேண்டும் என்ற நிலையை மாற்றி எப்படியும் பணியலாம், அப்படித்தான் துதிக்க வேண்டும் என்ற தன்மை வேண்டாம் என்ற ஞான வழியைக் கடைபிடித்தார்கள் ஆனால், இன்று அப்படி முடியாத ஒரு சூழ்நிலை உருவாகி விட்டதை நாம் பார்க்கிறோம்

அக்காலத்தில் பெரியவர்கள் சொல்லும் வாக்கே தெய்வ வாக்கு என்று போற்றிப் புகழ்ந்து வந்தார்கள். தன் வயதிற்கு மேற்பட்ட ஒருவர், தனது தகுதி, படிப்பு, பணம் இவைகளில்

தாழ்ந்தவராக இருந்தாலும் வயதின் காரணமாக அவர்களுக்கு மரியாதை கொடுத்தார்கள். ஆனால் அணுகுண்டுகளும் ஹைடிரஜன் குண்டுகளும், வானவெளிக் கப்பல்களும் கண்டு பிடித்து, உலகத்தையே ஆட்டிப் படைக்கும் ஆற்றல்படைத்த இந்தக் காலத்தில அறிவு படைத்தவனே அதிலும் ஆங்கிலம் படித்தவனே பெரியவன்—எல்லாம அறிந்தவன என்ற நிலை மாறிவிட்ட பிறகு, மரியாதை என்பது மறைந்துவிட்ட வெண்ணிலாவைப் போல இருந்துகொண்டு வருகிறது. முற்றிலும் மறைந்து விடவில்லை. மறைந்த நிலா மீண்டும் மேகம் கடந்து சென்ற பின் ஒளி தருவது போல, அறிஞர்களை யும கடந்து அனுபவசாலிகளுக்கு இருக்கும் மரியாதை இன்றும் இருக்கத்தான இருக்கிறது.

சிந்தனையும சிலையும

உருவவழிபாடு இல்லாமல் நாம் இறைவனை எப்படி வழி படுவது? என்னதான் சிந்தனையில் இறைவனை நிலைபெறச் செய் தாலும் சற்று நேரத்திற்கெல்லாம் அது மறைந்து விடுகிறது. காரணம் இயந்திரத்தோடும், காகிதக் கட்டுகளோடும், அன்றாடம போராடிக்கொண்டு வாழக்கையை நடத்திச்செல்லு கின்ற-இல்லை, நகர்த்திச் செல்லுகின்ற நாம் வாழ்வதற்கு வேண் டிய வகைகளை-அடைவதற்கு வேண்டிய வகைகளை-அடைவ தற்கு ஏதுவான பணத்தைத் திரட்டுவதிலேயே எண்ணங் களைச் செலவிடுகிறோம. இடைப்பட்ட நேரத்தும் சிந்தனை யாலே சிந்திக்கப்படும இறைவனைப்பற்றிய எண்ணம் நிலை யின்றி எங்கோ ஓடி மறைந்து விடுகிறது. ஓடிமறைந்த அந்தப் பரம்பொருளைப்பற்றிய சிந்தனையை உருவங்களின் வாயிலாகக் கண்டாலதான் கணநேரமேனும நினைவில நிலைப்படுத்த முடி கிறது அதற்காகச் சிலைவைத்து வழிபடும கோவிலகளுக்குச் செல்லுகிறோம். இதை நமக்குக் காந்தி அடிகள் ஞாபகப்படுத்து கிறார்.

"கோவில்களில் செய்யப்படும் விக்ரக ஆராதனை பாபம் என்றும், மூடநம்பிக்கை என்றும் சிலர் கருது வதுபோல் நான் கருதவில்லை பலர் கூடி ஆண்டவ னுக்குப பூஜை செய்ய வேண்டியது அவசியம்.

இதை ஏதாகிலும் ஒருமுறையில்தான் செலுத்தவேண்டும். அதற்கென்று ஒரு பொதுவான இடமும் வேண்டும் இதனால்தான் கோவில்கள் தோன்றி யிருக்கின்றன கோவிலுக்குள் ஒரு மூர்த்தி யிருக்க வேண்டுமா; அல்லது மூர்த்தியில்லாமலே பூஜை செலுத்தலாமா என்கிற கேள்வி அவரவர்களுடைய சுபாவம் அவர்களுடைய பண்பாடு ஆகியவற்றைப் பொறுத்தது.

விக்ரகங்கள் வைக்கப்பட்டிருக்கும் இந்துக் கோவில்களும், கத்தோலிக்கக் கோவில்களும் மூட நம்பிக்கைக்கும் உண்மைக் கடவுளை மறைப்பதற்கும் வழியாகும் என்று நான் கருதவில்லை விக்ரகம் படைக்கப்படாத மசூதிகளும் புரொட்டெஸ்டண்ட் கிறிஸ்துவக் கோவில்களும், குறையற்ற ஞானத் தானங்கள் என்றும் நான் நம்பவில்லை, மூர்த்தியோ தெய்வச் சிலையோ இல்லாமற் போனபடியினாலேயே மூடத்தன்மை நீங்கி விட்டதாக எண்ணலாகாது சிலுவை அல்லது வேறு ஒரு சின்னம் அல்லது ஒரு புத்தகம் மூட நம்பிக்கைக்கும் உண்மையை மறைப்பதற்கும் வழியாகலாம் ஆண்டவனை மறந்து விட்டு மரமும், ஓலையும் நமக்கு உதவும் என்று மூடத்தனமாக எண்ணவும் முடியும். சீக்கியர் கோவில்களில் புத்தகமே மூர்த்தியாகிறது. கிறிஸ்தவக் கோவில்களில் சிலுவையே மூர்த்தி பூஜைக்கு உதவுகிறது கண்ணன் விக்ரகம் கல்லிலோ, மண்ணிலோ, மரத்திலோ செய்தது ஏசுநாதரின் தாய் மேரி அம்மையின் விக்ரகம் இவையெல்லாம் பூரண பக்திக்கும் மெய்ஞ் ஞானத்துக்கும் உதவும் என்பது என் கருத்து வழிபடுகிறவனுடைய உள்ளத்தைப் பொருத்திருக்கிறது ”

*(யங்இந்தியா 5--11—1925)*

மேலே குறிப்பிட்ட வாசகத்தை நாம் நன்குகக் கூர்ந்து படித்தோம். அல்லவா. அதிலிருந்து நமக்கு ஒரு தெளிவு உண்டாகிறதல்லவா!

பணப் பெட்டியில் பகவான்

மனிதனுக்கு அமைதி மிக மிக முக்கியம். சில மனிதர்கள் தூங்குகின்ற போதும் அமைதி காண்பதில்லை. காரணம் சேர்த்து வைத்த பணத்தையும், கட்டி வைத்த வீட்டையும் வாங்கி வைத்த நிலத்தையும் எங்கேயோ யாரோ களவாடிக் கொண்டு போவதாகக் கனவு கண்டு, அதனாலேயே கண் விழித்து உறக்கம் உண்டாகும் அமைதியையும் நழுவ விடுகிறார்.

'பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்த
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்-கூடுவிட்டு
ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்''

என்ற பா…லை அறிந்து உணர்ந்த நாமகூட தொழிற்சாலைக் கூட்டுறவுச் சங்கங்களில் கடன் பெற்ற பணமோ அல்லது மகனுடைய திருமணத்தின் பொருட்டு வட்டிக்கு வாங்கி வைத்த பணமோ, வீட்டிலிருந்தால் விரைவில் செலவாகிப் போகும், அந்தப் பணத்தை நினைத்து இரவில் தூங்குகிறோமா! இல்லையே அதை எப்படி எப்படிச் செலவு செய்யலாம், செலவு செய்வதற்கு முன் இரவில் யாராவது திருடிக் கொள்வார்களோ என்று பயந்தல்லவா கண் விழித்து காவல் கிடக்கிறோம். அப்படிப்பட்ட சாதாரண மனிதர்களாகிய நமக்கு அருவமாய் இருக்கும் ஆண்டவன் நமது சிந்தனைக்குள் எப்படி வர முடியும். பணப் பெட்டியின் மேலே வைக்கப்பட்டிருக்கும் கண்ணாடிப் பெட்டிக்குள் அடைபட்ட வெள்ளியால் செய்யப்பட்டிருக்கும் ஆண்டவனின் உருவத்தைப் பார்க்கின்றபோது நமக்கு இறைவனின் எண்ணம் இதயத்தில் வருகிறதல்லவா!

அறைக்குள்ளே ஆண்டவன்

அன்றாட வாழ்க்கையிலே அகப்பட்டு, அல்லல்பட்டு, ஆலைகளிலே—தொழிற்சாலைகளிலே அங்காடி நிலையங்களிலே-அலுவலக இருப்பிடங்களிலே உழைத்துவிட்டு மாலையிலோ—இரவிலோ வீடு திரும்பும், நாம் இறைவனைப்பற்றி எண்ணுவதற்கு எங்கே நேரமிருக்கிறது? அவரவர்கள் அதிகாரிகளின்

ஆணைக்குட்பட்டு, அடங்கி ஒடுங்கிப் பணிசெய்து ஓய்வைத் தேடி மனைநாடிவரும் நேரத்தில், பாரைப்படைத்த பகவான் மீது பார்வை எங்கே நாடப்போகிறது வழியைக் கடக்கின்ற போது தென்படும் சிறு கோவில்களையும் முச்சந்தி வீதிகளிலே வைக்கப்பட்டிருக்கும் கடவுள் சிலைகளையும் கண்டு கைகூப்பி வணக்கம் செலுத்துகிறோம். பார்வை அகன்றவுடன் நம் எண்ணம் வீட்டையும் நமக்குத் தேவைப்படுவனவற்றையும் நாடுகிறது. வீட்டை அடைகிறோம். அங்கே பாடுபட்டு உழைத்த களைப்புத்தீர உண்பதற்குப் போதிய உணவில்லை. நினைவில் வருகிறவர்களை எல்லாம் கண்டபடி வசைமாரி பொழிகிறோம் உடனே மனைவி குறுக்கிட்டு "மேலே பார்த்துத் திட்டுங்கள்" என்று சொன்னவுடன், சுவரில் மாட்டப்பட்டிருக்கும் ஆண்டவனின் நிழல்படத்தைக் கண்டவுடன் வெளியே வந்து மீண்டும் ஏசுகிறோம். ஆம்! ஆண்டவனை சிலை உருவில் அல்லது நிழற்பட உருவில் கண்ட நமக்கு இறைவன் அங்கே இருப்பதாக எண்ணுகிறோம்

அப்படியே இன்பம் அனுபவிக்கும் செல்வச் சீமான்களும் கடன்வாங்கித் தன்னை ஏமாற்றியவர்களை ஏசுகின்றபோதும் கடவுளின் படம் அல்லது சிலை வைத்திருக்கும் இடத்தில் இருந்து தீய சொற்களைக்கூற அஞ்சுவர்

உருவ வழிபாட்டை இராமலிங்க அடிகளும் ஆதரித்தார்' ஆனால், சில சடங்காச்சாரங்களை அவர் வெறுத்தார்.

> "இராமலிங்கர் இறைவழிபாட்டினபோது பிடில், மத்தளம், பிரம்மதாளம், நகார், கண்டாமணி, நாதசுரம் முதலிய கருவிகளைக்கொண்டு ஒலிகளை எழுப்பிப் பலவிதமாக உரத்த குரலில் கோஷங்களைச் செய்து பூஜைகள் செய்வதை அடியோடு வெறுத்தார், இந்த வழிபாட்டு முறை சனமார்க்கத்திற்கு முற்றிலும் மாறான தென்றும் கூறினார்.

> "மனமகிழ்ச்சியோடு ஆண்டவனுடைய தோத்திரங்களை அமைதியாக அன்போடு பாடுவதுதான் சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியத்திற்கு முற்றிலும் உடன் பாடானது" என்று தம்முடைய அடியார்

களுக்குப் போதித்தார். இறைவழிபாட்டின்போது தேங்காய் உடைப்பதைக்கூட வெறுத்தார்.

தேங்காய் உடைக்க உங்களுக்கு விருப்பமிருந்தால், அதனை முன்னதாகவே உடைத்துத்திருகி அத்துடன் சர்க்கரை, கற்கண்டு முதலியன கலந்து ஆண்டவருக்கு இனிப்பாக நைவேத்தியம் வைப்பது நலம். ஆண்டவனை வாயார வாழ்த்துவது தவிர, அபிஷேகம், புட்ப அலங்கார வாகனங்களில் ஏற்றி வீதி உலாவருதல் இன்னும் இவைபோன்ற மற்ற ஆடம்பரங்கள் கூடாது. கடவுளுக்குச் செய்ய வேண்டுமென்ற எண்ணமிருந்தால், அப்பணத்தை ஏழைகளின் வயிற்றுப் பெட்டியில் நிரப்புங்கள்.''

(வ க. ஒருமைப்பாடு)

என்று வள்ளல் பெருமான உருவவழிப் பாட்டைக் கடை பிடிக்கும் படியும் உருவ வழிபாடு வேண்டுமென்றும் சொல்லுகிருர்.

இதிலிருந்து ஓர் உண்மையை நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ளுகிறோம். உருவமில்லாத ஆண்டவனை உருவ வழியில் கண்டால்தான் வணங்குகிற அல்லது பயப்படுகிற நிலை வழக்கத்தில் நமக்குப் பழக்கமாகிவிட்ட ஒரு மறுக்க முடியாத மாறுதலைக் காண்கிறோம்.

மறைந்தவா தோன்றுகிறா!

இறந்துவிட்ட நம்பாட்டன், தந்தை உடன் பிறந்தார் மனைவி ஆகிய அனைவரும். காலம் செல்லச் செல்ல அவர்களின் உருவங்களும் உயரிய செயல்களும் நம நினைவிலிருந்தே மறைந்து விடுகின்றன. அந்த நிலையில் யாராவது ஒருவர், இறந்தவர்களில் ஒருவரைக் குறிப்பிட்டு ''அவர் எப்படி இருப்பார்'' என்று கேட்டால், ''இப்படித்தான் இருப்பார்'' என்று சொல்லுவதில் நாம் எவ்வாறெல்லாம் விளக்கங் காட்டினுலும், மறைந்தவர்களின் உருவம் நம் உள்ளங்களிலே இருந்தாலும் கேட்பவருக்குச் சொல்ல முடியாத நிலையில் திண்டாடுகிறோம் அந்த திகைப்பு ஏற்படுகின்றபோது மறைந்தவர்களின் நிழல் படம் இருக்குமானுல், உடனே அதைக்காட்டி இவர்தான்

என் தந்தை, பாட்டன், பாட்டி என்று உணர்த்துகிறோம் அப்போதும் அந்த நிழல் படத்தைக் காட்டி இப்படித்தான் இருப்பார் என்றும் சொல்லுவதில்லை 'இவர்தான்' என்று படத்தைக் காட்டி அறுதியிட்டு உறுதியாகச் சொல்லுகிறோம்.

ஒரு சமயம் சுவாமி விவேகானந்தர் டில்லியில் யாத்திரை செய்துகொண்டிருந்தபோது இராஜபுதன சமஸ்தானங்களில் ஒன்றாகிய ஆள்வார் இராஜ்யத்திற்கு விஜயம் செய்தார். அந்நாட்டு மன்னர் உருவ வழிபாட்டில் நம்பிக்கையில்லாதவர். அவர் சுவாமிகளைப் பார்த்து, 'சுவாமி நான் உருவ வழிபாட்டில் நம்பிக்கை இல்லாதவன். பாமரர்களைப் போல நான் கல்லையும், மண்ணையும், உலோகங்களையும் வணங்கமாட்டேன் அதற்காக மறுமையில் துன்பம் அடைய நேரிடுமோ" என்று கேட்டார் அதற்கு சுவாமிகள் "அவரவர்கள் கொள்கை வழி நடந்து கொள்ளட்டும் அதற்குக் குறுக்கே நிற்க எனக்கு மட்டும் என்ன அதிகாரம் இருக்கிறது" என்று பதில் சொன்னார்.

விக்ரகங்களின் எதிரே நின்று ஆண்டவனை நினைந்து நினைந்து கசிந்துருகி வழிபட்டதைப் பார்த்தவர்கள் சிலர் ஆள்வார் அரசவையில் வீற்றிருந்தனர். அவர்கள் மன்னருக்கு மட்டும் உருவ வழிபாட்டைக் கண்டிக்க சுவாமிகள் மகாராஜாவுக்கு மட்டும் எப்படி இடங்கொடுத்துவிட்டார் என்று வியந்தார்கள்

சிறிது நேரத்திற்குள் விவேகானந்தர் நிலைமையை தலைகீழாக மாற்றிவிட்டார். மாளிகையின் சுவரில் மாட்டப்பட்டிருந்த படமொன்றைக் கொண்டுவரச் சொன்னார். அப்படத்தை வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு, திவானைப் பார்த்து "ஐயா நீங்கள் ஒரு சிறு காரியம் செய்ய முடியுமா" என்று கேட்டார் "தாங்கள் எதைச் சொன்னாலும் தடையின்றி செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று சொன்னார் திவானாயிருந்த சேனாதிபதி இராமசந்தர் ஜீ அவரிடமிருந்து அந்த உறுதிமொழியை வாங்கிக் கொண்ட சுவாமிகள், தம் கையிலிருந்த படத்தின்மீது காரித்துப்பும்படி திவானைக் கேட்டார். மற்றவர்களையும் அப்படியே செய்யச் சொன்னார். ஆனால

அவர்கள் எல்லாரும் வியர்வை சொட்டப் பயந்து நடுங்கினார்கள். சுவாமி அவர்களை நோக்கி, 'ஏன் அஞ்சுகிறீர்கள் இது வெறும் கண்ணாடியும் காகிதமும்தானே! இதன்மீது துப்புவதற்கு ஏன் பயப்படுகிறீர்கள் என்றார். சபையோர்கள் பயபக்தியோடு "இது எங்கள் அரசரின் உருவப்படமாயிற்றே" என்றார்கள்.

விவேகானந்தர் அரசர் உட்பட எல்லாரையும் நோக்கி 'இந்தப் புகைப்படம் மகா ராஜா அல்ல என்பது உங்களுக்குத் தெரியும். அவர்போன்ற பிரதிபிம்பம் மாத்திரமே அது எனினும், அதன்மூலம் நீங்கள் அவருக்கு மரியாதை காட்டுகிறீர்கள் அதுபோன்றே கல்லும் மண்ணும் கடவுள் ஆகிவிட மாட்டா. கல்லென்றே—மண்ணென்றே அல்லது உலோகமென்றே, எங்கு வியாபித்திருக்கும் ஆண்டவனை யாரும் பிரார்த்திப்பதில்லை. இந்த வஸ்துக்களினால் செய்திருக்கும் விக்கிரகங்கள் அல்லது சின்னங்களான மூலம் ஏகனாய், எல்லாம் வல்லவனாய், எங்கும் நிறைந்தவனாயிருக்கும் முழுமுதற் கடவுளையே நினைந்து மக்கள் வணங்குகிறார்கள். கடவுளது ஞாபகத்தை அளிப்பதற்கே இந்த உருவங்கள் உதவிபுரிகின்றன" என்று விளக்கிக் கூறினார். இதையெல்லாம் செவிசாய்த்த இராஜா 'சுவாமி எனது ஊனக்கண்களை அழித்து, ஞானக் கண்களை திறந்து விட்டீர்கள். என்னை மன்னித்தருளுங்கள்" என்று கைகூப்பி வணங்கினார்.

ஆகையால் இறைவன் எப்படியிருப்பாரோ என்ற ஏக்கம் அடையாமல் "இப்படித்தான் இருப்பார்" என்று சிலை அமைத்து வழிபடுவது இன்றைய நாகரிகக் காலத்திற்கு அவசியமாக உள்ளது அதிலும் "எதையும் சாதிக்கலாம்" என்ற விஞ்ஞானத்தின் தயவை நாடித் தன்னைத்தானே ஏமாற்றிக் கொண்டு மற்றவர்களையும் ஏமாற்ற முயலும் இக்காலத்தில் உருவ வழிபாடு மிக மிக முக்கியமாகவே உள்ளது. அது அவசியமுமாகும் என்பது பெரியோர்கள், அறிஞர்கள் கருத்துமாகும், உலக உத்தமர் காந்தியடிகள் சொன்ன கருத்துரைகள் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு. அடிகளார் சொல்வதைப் பார்ப்போம்.

"நான் இந்து மதத்தை முற்றிலும் ஒப்புக்கொண்டவனே யாவேன். கடவுளுக்குப் போட்டியாக வேறு ஒரு தெய்வமில்லை என்பதைபபற்றி என் மனத்தில் எப்போதும் சந்தேகமிருந்ததில்லை. எனனுடைய குழந்தைப் பருவத்திலுங் கூட இதைப்பற்றி என் மனத்தில சந்தேகம் இருந்ததில்லை. ஈசன் ஒருவனல லன்; பல ஈஸவரர்கள் உண்டு என்று யாரும் எனக்கு சொன்ன துமில்லை.

மூர்த்தி பூஜையைப் பற்றி நான் உங்களுக்குச் சொல்ல வேண்டும. எந்தச் சமயத்திலுமே சரி ஏதேனும் ஒரு லிங்கத்தை வைத்துத்தான் கடவுளை வழிபடவேண்டும, முஸலிமானகளைப பாருங்கள் மசூதியைக் கடவுள் குடிகொண்டிருக்கும் வீடாகப் பாவிக்கிருர்கள், அந்தக் கட்டடத்தைக் காப்பதற்கு உயிரையும் கொடுக்க அவர்களி தயார். கிறிஸ்தவர்கள் ஏன கோவிலுக்குப் போய்பிரார்த்தனை செய்கிருர்கள்? பிரார்த்தனைக்குக் கோவிலதான இடம் என்று ஏன் நினைக்கிருர்கள்? பிரமாணம் செய்யும்போது ஏன் பைபிள் புஸ்தகத்தைத் தொட்டுச் சத்தியம் செய்கிருர்கள்? இந்த சம்பிரதாயங்களைப்பற்றி நான் குறை கூறவில்லை. ஏதேனும் ஒரு சின்னம் வழிபாட்டுக்கு அவசியம் என்பதறகாகத்தான் எடுத்துச் சொல்கிறேன. மசூதிகள் கட்டவும், சமாதிகள் கட்டவும் லட்சக் கணக்கில் ஏன் பணம் செலவு செய்கிறீர்கள்? அதுவும் ஒருவித மூர்த்திபூஜைதானே! ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்துவர்கள் மேரி அம்மை முதலிய விக்ரகங்களின்முன ஏன் மண்டியிட்டு வணங்குகிருர்கள்? கல்லில் செதுக்கிய விக்ரகமாயினும் சரி கண்ணுடியில் எழுதிய சித்திரமாயினும் சரி, பல வடிவங்களின முன் விழுந்து நமஸ்கரிக்க வில்லையா?

(ஹரிஜன் 13-3-1937)

அப்படி வணங்கும் நோத்தில் நாம் ஒன்றை மறந்துவிடக் கூடாது. சிலை வைத்து இறைவனை வழிபடலாம் என்பதற்காக கண்ட உருவங்களை வழிபடல் கூடாது. அப்படி வழிபடுவதால்

உள்ளத்திலே எந்த உருவத்தையும் நிலைநிறுத்தாமல் தடுமாற்றம் ஏற்படக்கூடாது. தடுமாற்றம் ஏற்பட்டால் மக்களின் எண்ணங்கள் சிதைந்துவிடும் அதனால் ஆன்ம இரட்சிப்புக்கு வேண்டிய பக்குவ நிலை மாறிவிடும் என்பதற்காகத்தான அக்காலத்து ஞானியர்கள் உருவ வழிபாடுகளை வெறுத்தார்கள்; வெறுத்திருக்க வேண்டும் என்று நாமும் கருத முடிகிறது

விக்ரக ஆராதனையின்றி பிரார்த்தனைகளுக்கு சிறப்பில்லையென்று கருதியவர் இராமலிங்க அடிகள். அதற்காகப் போராட்டம் செய்து விக்ரக ஆராதனை வேண்டும் என்று வாதாடி வெற்றி கண்ட பெருமை அடிகளாருடையதாகும். அதற்கு அடிகளாரின் வாழ்க்கைக் குறிப்புகள் நமக்குச் சான்று கூறுகின்றன அதில் ஒரு சம்பவத்தைக் காண்போம்

'இராமலிங்க வள்ளலார் உருவ வழிபாட்டை மந்த நியாயமாகக் கருதினர் என்பதனை முன்பே கூறியுள்ளோம் இறையருளைப் பெறுவதற்கான முதல் முயற்சியாகவே அடிகளார் உருவ வழிபாட்டினை வெறுக்கும் பிரம்ம சமாஜிகளுக்கும் இராமலிங்க அடிகளாருக்கு மிடையே கருத்துப் போர் நிகழ்ந்தது. தமிழகத்திலுள்ள பிரம்ம சமாஜிகளுள் சம்பேடு ஸ்ரீதர சுவாமி நாயக்கர் என்பவர் அந்நாளில சிறப்புற்று விளங்கினர். அவருக்கும் நம்அடிகளாருக்குமிடையே திருப்பாதிரிப் புலியூருக் கடுத்த தென் பெண்ணை நதியின் தென்கரையிலுள்ள சத்திரமொன்றில வாதப் போர் நிகழ்ந்தது. ஆம்; அடிகளார் வடலூரில் முகாமிடுவதற்கு முன்பு, இருதரப்பாரையும் சேர்ந்தவர் பலர் கூடி, வாதப்போரைச் செவியுற்றனர். முடிவில் விக்ரக ஆராதனையின்றிப் பிரம்மானுபவம் சித்திக்காதென்ற தம் கருத்தை வெற்றிகரமாக நிலை நாட்டினர் அடிகளார்.

(வ. க. ஒருமைப்பாடு)

ஒருவனே தேவன்

மேற்சொன்ன கருத்துக்களை நாம் சிந்தித்துப் பார்த்கின்றபோது, எம்மதத்தவராக இருந்தாலும் ஒரு தெய்வக்

தையே பூஜித்து வழிபடல் வேண்டும் என்பது புலனுகிறது. கிறிஸ்துவ மதத்தைப் பொருத்தமட்டில் "எல்லாம் வல்ல இறைவன் ஏசுவே. அவரன்றி வேறெந்த தெய்வமும் நமக் கில்லை" என்ற ஓர் உயர்ந்த தத்துவத்தை சிர மேற்கொண்டு வழிபடுகிறோம். ஒருவனே தேவன் என்று வாயளவில் பேசிப் பல தெய்வங்களை வழிபட்டு மனச்சோர்வு அடைய வழி காட்டும் மனிதப் பிண்டங்கள் அன்றும் இருந்தன இன்றும்...?

அந்த உண்மையை நமக்கு ஞாபகப்படுத்துகிறார். ம. பொ. சி.

"ஒருவனே தேவன் என்பதுபோல் ஒன்றே குலம் என்பதனையும் வலியுறுத்துவராகி நல்லகுலம் என்பதனையும் வலியுறுத்துவராகி நல்ல குலம் என்றும் தீயகுலம் என்றும் சொல்லளவல்லால் பொருளில்லை" என்றும் இருகுலமும் மாண்டிடக்காண்கின்றீர். என் றும் பாடினார். மனிதர் எல்லாரும் 'ஒரு குலம் ஓர் இனம்" என்னும் உண்மையை வலியுறுத்தினார். நம்மிடையே வாழும் பகுத்தறிவாளர் என்போர், ஆரியர் எனவும் திராவிடர் எனவும் இனம் பிரித்துப் பேசி அதையும் பண்பு வழியல்லாமல் பகை வழி நிலை நிறுத்த முயன்று, பாரத சமுதாயத்தையே பிளவு படுத்தி விட்டனர். அடிகளார் இந்த அறிவின் மைக்கு எதிரியாக இருந்தார். வேத ஆகமங்களை-அவற்றிற்கு மதவாதிகள் சொல்லும் வியாக்கியானப்படி ஏற்க மறுத்தாராயினும், வேதியர் குலத்தையே அவர் வெறுத்தாரல்லர்; மாறாக வேதியர் பாலும் அன்பு செலுத்தி அவர் காண விருந்த ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமைச் சமுதாயத்தில் அவர்களையும் அங்கமாகக் கண்டார்.

*(வ. க. ஒருமைப்பாடு)*

மேற்கூறிய வகையில் கிறிஸ்துபிரான பாகுபாடுகளை உடைத் தெறிந்து 'ஒருவனே தேவன்' என்ற உயரிய கொள்கையை மனித சமுதாயத்திற்கு அளித்தார். அவர் வழி பின்பற்றும் கிறிஸ்துவர்களாகிய இயேசு நாயகனை, அவர் பாடுபட்டு

மரித்த சிலுவையில் அவர் இருக்கும் காட்சியைக் கண்டு வழிபடுகிறோம். கிறிஸ்து நாதர் உலக மக்களின் பாவங்களுக்காக இரத்தம் சிந்திய காட்சிகளைச் சிலை அல்லது நிழற்படங்களின் மூலமாக வணங்கி வழிபடுகிறோம். நாம் தொழுவது கிறிஸ்து நாதர் ஒருவரையே. இந்த நியதி எல்லா மதத்திற்கும் வரவேண்டும் வளரவேண்டும் என்றால் அதற்கும் வழி வகுத்த வள்ளல் கிறிஸ்து நாதரே என்பதை உலகம் ஒப்புக்கொண்ட உண்மையாகும்.

மற்றைய மதங்கள் எப்படி இருந்தாலும், கிறிஸ்து மதத்தைப்பொருத்த மட்டில பேட்டைதொட்டு பேருலகம் வரை ஒரே மதமாகத்திகழ்ந்துகொண்டு வருகிறது. ஆம்; கிறிஸ்து அவரின கொள்கைகளைப் பின பற்றுபவர்கள் கிறிஸ்தவர்கள். அவர்களின மதம் கிறிஸ்துவமதம் ஆக எத்திசையில, எவ் வகையில், எப்பொருளில எந்த வழியில நோக்கினும் கிறிஸ்து, கிறிஸ்து, கிறிஸ்துவே!

"பொங் கொளிசேர் சுடர்விளக்காய படியில் ஓங்கிய
பேரொளியாய் இருளகற்றும ஞானத் தீபம
துங்கமுறும மெய்ஞ்ஞான அறிவுங் காட்டி
வையமதில வாழவாங்கு வாழச் செய்யும
பங்கமுறும் பழிபாவம் அகல ஓட்டிப்
பொல்லாத துன்பங்கள் தொடரா வண்ணம்
கங்குறபகல எஞ்ஞானறுங் காவல செய்யும்
அருளாளன ஏசுவெனும் ஞானத் தீபம்"

(அருமை

# பாவ மன்னிப்பு

மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரை தான் செய்த புண்ணியம் பாவங்களின் பயனாக நன்மை தீமைகளில் உழன்று வருகிறான். எனினும் அவனது செயல்கள் நடக்கைகள் ஆகிய எல்லாவற்றிலும் பாவமே தலைதூக்கி நிற்கிறது. நம்முடைய எண்ணங்கள், எழுச்சிகள், அனைத்தும் நன்மை உலகுக்குப் பாவி எனற பறை சாற்றிக்கொண்டு வருகின்றன.

இதோ கிறிஸ்து தேவன் நம்மை அழைக்கிறார்.

"வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள் ; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருகிறேன்."

(மத்தேயு 11 28)

கேட்டோமல்லவா !

உலக வாழ்க்கையிலே மனிதன் தானறியாமல் செய்கின்ற பாவங்கள் பலவாக இருக்க, தெரிந்து செய்கின்ற பாவங்களோ அவற்றினும் பலவாக இருக்கக்கூடும் முன்னவை சூழ்நிலை காரணமாக ஏற்படுவன. பின்னவை அகங்காரத்தின் மூலம் தோன்றும் ஆணவத்தின் காரணமாகத் தோன்றுவன. சூழ்நிலை மனிதனைத் தன் வயப்படுத்திச் சிக்கலான இடுக்கண்களில் ஆழ்த்தித் திமிர முடியாமல் பாவக் குழியில் தள்ளுகிறது. 'தான்' என்ற ஆணவமாகிய அகங்காரம், நானே எல்லாவற்றிற்கும் ஏக சக்ராதிபதி என்ற செருக்கிலாழ்த்தி, அவ்வெண்ணத்திலிருந்து வீடுபெற வொட்டாமல் ஆழ்த்தி, அழியவைத்துப் பாவக்குழியோடு மட்டும் நில்லாது மரணக் குழியிலும் தள்ளி மண் மூடி புதைக்கிறது.

பாதையில் போகும் வெறிநாயைப் பலர் அடிக்கும்போது அது அடித்தவனை விட்டு மற்றவர் மேலும் பாய்ந்து கடிப்பதுண்டு. நாமே அடிக்க அந்நாய் நம்மீது பாய்வதும் உண்டு

அப்படித்தான் பாவமும் நம்மைப் பின் தொடர்கிறது. இதோ காந்தி அடிகள் நம் ஞானக்கண்களைத் திறக்கிறார்.

"செய்த பாபத்தின் பயன்களினின்று விடுபட வேண்டும் என்று நான பிரார்த்தனை செய்யமாட்டேன. பாபத்தினின்று விடுபடவேண்டும் என்றே வேண்டிக்கொளவேன. பாப எண்ணமே என மனத்தில எழ விடாமல் என்னைக் காப்பாறற வேண்டும் எனறு தான வேண்டிக்கொள்வேன். அவ்வாறு குற்ற மறற மன நிலையை அடையும் வரையில சாநதி இலலை" எனபதை அறிவேன். ஆணடவன் பாபம் செய்தவனையும் நன்னெறியில நின்று வாழ்க்கை நடத்துபவனையும் சமமாகவே மதிக்கிறன. இருவரும முன செல்லாமல் பின செல்வதறகும் உரிமையுண்டு. இருவருக்குமே அவன் பிதா. நன்னெறியில நிற்பவன தவறினவனைக்கண்டு இகழ்ந்தால அந்த அகம் பாவத்தினால அவனுடைய சன்மார்க்கம் பழுதுபடும். அகமபாவங்கொண்ட ஒருவன வேறு பாவம செய்யாதவனாக இருந்தாலும பாவம் செய்தவனைக் காட்டிலும் தாழ்ந்து போவான். தருமத்தை உணராமல் ஒருவன் செய்யும பாபத்தைக் காட்டிலும தருமத்தை உணர்ந்த ஒருவனுடைய அகம்பாவம் பெரிய பாபமாகும்.

(ஹரிஜன 14-10-1933)

முற்றும் துறந்த முனிவர் ஒருவர் குருமடம் ஒனறில்வாழ்ந்து வந்தார். நிறைந்த ஞானி பக்தசிரோன்மணிகளின தலைவர் வேதப் பொருள் நுட்பங்களை ஆராய்ந்து அறிவுரை பகரும் ஆசான் சுத்த சனமார்க்கத்தின் பிரதி நிதி. அப்படிப்பட்ட சன்யாசி, தினமும ஒரு காரியத்தைத் தவறாமல் செய்து முடித்துக்கொண்டு வந்தார். எதிரிலே ஒரு விலைமாதின் வீடு இருந்தது. ஊருக்குள்ளே அப்படி நடப்பது அவல நிலை என்றறிந்த அவள் ஒதுக்குப்புறமாக ஒரு வீடு அமைத்து வந்தாள். அதுவே சாமியார் மடத்தின் முன்புறமாக அமைந்து விட்டது.

தினமும் விலை மாது காலை தொடர்ந்தே தன் தொழிலை நடத்த ஆரம்பித்து விடுவாள். அவள் பாவிதானே என்ன செய்வது? அந்தப் பாவத் தொழில் அவள் ஜீவனை வளர்க்கும் வாழ்க்கைப் பிரச்சினை. ஆனால் சாமியாருக்கோ அது வேண்டாத ஒன்று. ஆனால் சாமியார் காலையில் எழுந்தது முதல் மாலையில் கையெழுத்து மறையும் நேரம்வரை அந்த விலை மாதின் வீட்டிற்கு எத்தனை ஆடவர்கள் வந்து போனார்கள் என்று கணக்குப் பார்ப்பதே தொழிலாகக் கொண்டிருந்தார். அதற்காக அந்தச் சாமியார் சிறுசிறு கூழாங்கற்களை சேகரித்து வைத்துக்கொண்டு எண்ணிக்கையை அவற்றின் வாயிலாக தெரிந்து கொள்வார்.

விலை மாது இரவு முடிந்ததும் விடியற்காலை எழுந்து "பகவானே உம் அடிகளுக்கு வணக்கம் இன்றைக்கு எனக்கு நல்ல வருவாய் கிடைக்க வேண்டும் என் வாழ்க்கை வசதிகளுக்காக என் தேவைகளுக்காக நான் செய்யும் பாவங்களை மன்னித்து எனக்கு நல்ல வழி காட்டும்" என்று தினமும் ஆண்டவனை பிரார்த்தித்து வேண்டிக் கொள்வாள் ஆனால் முற்றும் துறந்த முனிவரோ கணக்கெடுப்பதிலேயே கண்ணாயிருந்தார்

காலப்போக்கில விலை மாதும் சாமியாரும் எதிர்பாராதவிதமாக ஒரே நாளில் இறந்து விட்டனர். இருவர் உயிர்களும் இறைவனிடம் சென்றன பகவான் விலைமாதுக்கு மோட்சத்தையும், சாமியாருக்கு நரகத்தையும் அளித்தார். சாமியார் பகவானை நோக்கிச் சற்றுக் கோபமாக இறைவா எந்த வேளையும் தங்களையே தியானம் செய்துகொண்டிருக்கும் எனக்கு நரகத்தையும், சதா காம வேட்கையில் திளைத்துப் பாவத்தைச் செய்துகொண்டிருந்த அந்த வேசிக்கு மோட்சப் பதவியையும் அளித்தீரே இது நீதியா? இது அக்ரமம்: அநியாயம்; ஆபாசம்" என்று கூக்குரலிட்டார். பகவான் நிதானமாக ஞானியே நீ உன் முழு நேரத்தையும் விலை மாதின வீட்டிற்கு எத்தனை பேர் போய் வருகிறார்கள் என்பதையே கணக்குப் பார்த்துக்கொண்டிருந்தாய். ஆனால் விலை மாதோ தன் வாழ்வின் அன்றாடத் தேவைகளுக்காகப் பாவம் செய்தாலும் நாள் தோறும் தன் நிலைக்காகப் பச்சாதாபப்பட்டுக் கழிவிரக்கங்கொண்டு தான்

செய்த பாவங்களுக்காகத் தன்னை மன்னித்தருளும்படி பிரார்த்தனை செய்து வந்தாள். ஆனால் நீ, உன்னையே ஏமாற்றிக் கொண்டு ஞானி என்று பெயர் ஏற்றுத் தக்கனவல்லாத எண்ணங்களிலே நெஞ்சை செலுத்தினாய் உன்னை நீ தூயவன் என்று எண்ணி உனனை நீ களங்கப்படுத்திக்கொண்டாய் ஆக இவற்றிலிருந்து மீள உன்னைத் தடுத்துக் காத்துக்கொள்ளவுமில்லை. நீ எனனை மறந்து தாசியின் பாவச் செயல்களிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தாய் ஆகையால் உனக்கு நரகத்தை அளிப்பதைத் தவிர வேறு வழியே இல்லை. கொடுத்தது கொடுத்ததுதான் என்றார் பகவான ஆகையால் தன குற்றம் காணுமல் பிறர் குற்றம் காணும அறிவாளிகள் எனறும் அறிவிலிகளே எ லாம் அறிந்தவன் என்ற அகம்பாவங் கொண்டு, ஒன்றும அறியாத பேதையர்களை ஏமாற்றும தன்மை தான தன்னையே ஏமாற்றிக் கொள்வதற்கு ஏதுவாகும. இவ்வுண்மையை உய்த்துணர்வது அவசியம்.

பாவிகள் யார ?

புவிவாழும் மனிதர்கள் எல்லாரும் பாவிகளா அப்படி யார் சொன்னார்? பாவிகள் என்ற பட்டம் அவர்கள் நெற்றிகளில் சூட்டப்பட்டுள்ளனவா? அபபடியும் இல்லை. பாவிகளுக்கென்று தனியான வீடும், நீரும், நெருப்பும். உணவும என எவையேனும் தனியே ஒதுக்க பட்டிருக்கின்றனவா? அப்படியும் இல்லையே பிறகு எப்படித்தான பாவிகள் என்று கண்டு பிடிப்பது.

"தீயாரைக் காண்பதும் தீதே திருவற்ற
தீயார் சொல கேட்பதும் தீதே
தீயார் குணங்கள் உரைப்பதுவும் தீதே
அவரோடு இணங்கி இருப்பதுவும் தீது"

என்பது முதுமொழி ஆகவேதான் நல்லவர்களுக்கு அறிவுரை கூறும்போது, இப்படிச் செய்யாதீர்கள் எனறு சொன்னால், அப்படிச் செய்பவர்கள் எல்லாம் பாவிகள் என்றும் சொல்லாமல் சொல்லி வைத்தார்கள் சான்றோர். அப்படித்தான் சொல்லுகிறார் கிறிஸ்து பெருமான்.

வெள்ளம் போன்ற மக்கள் கூட்டம் இயேசுவை நோக்கி வருகிறது. இயேசுப் பெருமான் அருகிலிருந்த குன்றின்மீது ஏறிநின்று மக்களைப் பார்த்துச் சொல்லுகிறார்.

o "ஆவியில எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோகராஜ்யம் அவர்களுடையது.

o துயரபபடுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் ஆறுதலடைவார்கள்.

o சாந்தகுண முள்ளவர்கள் பாக்கியவான்கள், அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக் கொள்வார்கள்.

o நீதியினமேல பசிதாக முள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் இரக்கம் பெறுவார்கள்.

o இருதயத்தில சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிபபார்கள்.

o சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் எனப்படுவார்கள்.

o நீதியின நிமித்தம் துனபப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது.

மத்தேயு 5.3-11

இபபோது சொல்லுங்கள் பாவிகள யார் ?

புண்ணியமபோல பாவம

சில பழங்கள் மரத்திலேயே பழுத்துப் பறிக்கப்படுகின்றன. பல பழங்கள பக்குவ நிலையில உள்ளபோது பறிக்கப் பட்டுப் பழுக்க வைக்கப்படுகின்றன. பாவமும அப்படித்தான். புண்ணியமபோல தோன்றும பாவங்களும், பாவங்களைப்போல் தோன்றும புண்ணியங்களும் உண்டு.

அக்கிரமமாகக் கொலை செய்துவிட்டுவந்த ஒருவனைக் காப்பாற்ற நாம் இடங்கொடுத்து விட்டோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அதனால் ஒரு நிரபராதியைக்கொன்றவனுக்குத்

தப்ப இடங்கொடுத்த பாவத்தையும், அவனைப் பாதுகாத்து வைத்ததற்காகப் பழியையும் ஏற்கிறோம். "கன்றுக்குட்டி மரணவேதனைபட்டுக் கொண்டிருப்பதைவிட அதைச் சாகடிப்பதே நல்லது" என்கிறார் உலக உத்தமர் காந்தி அடிகள். இங்குப் பாவமும் புண்ணியமாக மாறுகிறது.

பாவங்களினால் ஏற்படும் தீமையை, நாம் செய்யும் நன்மையினால் அகற்றி விடலாம். வாழ்க்கையிலே மனிதன் வாழும் காலம் மிகக் குறுகியது. அந்தக் குறுகிய காலத்தையும் குற்றம் புரிவதிலேயே கழித்துவிட்டால் பிறகு அவன் ஆன்ம விடுதலைக்கு என்ன செய்ய முடியும் ஆகவே உலகில் வாழும் அந்தக் குறுகிய காலத்தில நாம நன்மையையே செய்துவிட வேண்டும். அந்த புனிதத் தன்மை வாய்ந்த நன்மைகள் யாவை?

- உங்கள் அன்பு மாயமற்றதா யிருப்பதாக தீமையை வெறுத்து நன்மையைப பற்றிக் கொண்டிருங்கள்.
- சகோதர சிநேகத்திலே ஒருவர் மேலொருவர் பட்சமா யிருங்கள்; கனம் பண்ணுகிறதிலே ஒருவருக்கொருவர் முந்திக் கொள்ளுங்கள்.
- அசதியா யிராமல ஜாக்கிரதையா யிருஙகள்; ஆவியிலே அனலா யிருங்கள்; கர்த்தருக்கு ஊழியஞ் செய்யுங்கள்.
- நம்பிக்கையிலே சந்தோஷமா யிருங்கள்; உபத்திரவத்திலே பொறுமையா யிருங்கள; ஜெபத்திலே உறுதியாய்த் தரித்திருங்கள்.
- பரிசுத்தவானகளுடைய குறைவில் அவர்களுக்கு உதவி செயயுங்கள்; அந்நியரை உபசரிக்க நாடுங்கள்.
- உங்களைத் துன்பப் படுத்துகிறவர்களை ஆசீர்வதியுங்கள். ஆசீர்வதிக்க வேண்டியதே யன்றி சபியாதிருங்கள்.

o சந்தோஷப் படுகிறவர்களுடனே சந்தோஷப் படுங்கள்; அழுகிறவர்களுடனே அழுங்கள்.
(ரோமர், 12 : 9—13)

மேற் குறிப்பிடப்பெற்ற அறிவுரையின்படி நடக்க முடியுமா? முடியும், முயன்ருல் முடியாதது ஒன்றுமே யில்லை. கிடைக்காத பொருளுக்காகத் தன் முழுத் திறமையையும் பயன் படுத்தி அதற்கு மேலும் தன் உயிரையே தியாகம் செய்யவும் பின் வாங்காத மனிதன், எளிதிற் கிடைக்கும் ஒன்றை, முயன்ருல் குறைவின்றி முடித்துவைக்க வேண்டிய ஒன்றை அடைவதற்கு ஏன முயற்சி செய்யக்கூடாது! திடீரென்று யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல போய்விடும் இந்த உயிர்தாங்கிய உடலை வளர்பபதற்காக, அதற்கு வசதிகள் அளிப்பதற்காக என்னென்ன விந்தைகளை; வேண்டியவைகளை எல்லாம் விரைவில் அடைவதற்கு முயற்சி எடுக்கிருேம்; எடுத்து வெற்றியும் அடைகிருேம். ஆகவே, அழியக்கூடிய பொருள்களுக்கு ஆத்திரத்தோடும் ஆவேசத்தோடும் அசைய முடியாத உற்சாகத்தோடும், வேலைசெய்து வெற்றி காணும் நாம் அழியாத ஆன்ம இன்பப்பாறுதலுக்கும் பின்னும், அமர வாழ்வை எய்தக்கூடிய, என்றும் நிலைத்து நிற்கக்கூடிய நன்மைகளைச் செய்ய நல்ல வகைகளை மேற்கொள்ள ஏன் தயங்க வேண்டும?

நமக்காக மரித்தவர் :

நாம் செய்த பாவங்களுக்காக கிறிஸ்துநாதர் எத்துணை அளவு கொடுந் துன்பங்களையும துயரங்களையும ஏற்ருர்! சிந்தித்துப் பார்த்தோமா நாம? தூக்க முடியாத பெரும சுமையாகிய சிலுவை மரத்தைத் தோளிலே சுமந்து செந்நீரைச் சிந்தித் துன்பங்களையும், துயரங்களையும் தாங்கினுரே, அச் செயல் யார் பொருட்டு? பாரம் சுமக்க முடியாமல் மூன்று முறை அவர் இடறி விழுந்தபோது, அவரை எழுந்திருக்கச் செய்ய கொடும்பாவிகள் சாட்டையால் அடித்துத் துன்புறுத்தினுர்கள்; அத்துயரையும், வேதனையையும் தாங்கி அவர்களுக்கும் இரக்கங் காட்டினுரே அது யாருக்காக? அந்த நேரத்தில் உலகப பேரின்பச் சுடரொளி—சன்மார்க்க நெறிவளர்த்த ஞான ஒளி—உலகப பாவங்களைப் போக்க வந்த பேரொளி, கிறிஸ்து பிரான் அடைந்த துன்பங்களுக்கு எல்லை யுண்டோ?

சாட்டையின் சொடுக்கு அவர் உடலை வீக்க முறச் செய்து வெடிக்க ஏதுவான போதும், அந்தத் திறந்த புண்ணின் மீது உப்பு நீரான வியர்வை பாய்ந்தபோதும், அதற்கு மேலும் கதிரவனின் வெங்கதிர் செந்நீரைச் சூடாக்கி உதிரம் இறுகிய போதும், மேதினியின் பாவத்தைப் போக்க மௌனியாகக் காட்சி அளித்தாரே அது யாருக்காக ? ஞானவள்ளல் இயேசு நாயகன் பட்ட பாடுகளை யெல்லாம் எண்ணிப் பார்த்தோமா நாம்! நமக்காகவே நம்மைப்போல ஏழைக் கோலம் பூண்டு நம் பாவங்களுக்காக சிலுவையிலே உயிரைப் பலியாக்கினர்

"நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப் பட்டு, நம்முடைய அக்ரமங்களினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார். நமக்குச் சமாதானத்தை உண்டு பண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது அவருடைய தழும்புகளால் குணமாகிறோம்"

(ஏசாயா, 53 : 5)

நம்முடைய அடங்காத் தன்மையின் காரணமாகவேதான் அண்ணல் கிறிஸ்து ஆக்கினையைப் பரிசாக ஏற்ருர்.

பாவக் கறை :

பாவம் புரியாத மனிதன் யார் ? இந்தக் கேள்வியை நம்மை நாமே கேட்டுக்கொண்டு திருப்தி அடைந்து விடுகிறோம். உண்மைதான்! பாவம் புரியாத மனிதர்கள் இப் பூமண்டலத்தில் யார் இருக்கிருர்கள் புண்ணியம்போலதானே பாவம் வருகிறது! அதுபோலவே இன்பத்திலதானே துன்பம் பிறக்கிறது! ஆகையால், துன்பங்களை முழு மனத்தோடு வரவேற்க வேண்டுமென்று அறிஞர் தாமஸ்-அ-கெம்பிஸ் சொல்லுவதைக் கேட்போம்.

"நம்மீது அவ்வப்போது துன்பங்கள் துயரங்கள் ஆகியவற்றின் சுமை வந்து விழுவது நல்லதே. இவை மனிதனுக்கு ஆன்ம சிந்தனை புரிய வாய்ப்பளிக்கின்றன."

(கிறிஸ்து நாதர் அனுசாரம்)

இன்ப துன்பங்கள் மனிதனுடைய ஆன்ம சிந்தனையைப் பக்குவப்படுத்தப் பயன் படுகின்றன என்பதை திருப்புகழ் ஆசிரியர் அருணகிரிநாதர் வாழ்க்கை வரலாற்றிலிருந்து நாம் மிகத் தெளிவாகப் புரிந்து கொள்ளுகிறோம்.

பெண்களின் சிற்றின்பச் சூழ்நிலையில் அகப்பட்டு அல்லல் பட்டு, ஆறுதல் புண்ணைத் தேகமெல்லாம் பெற்று அவதிப் பட்ட அகோர வாழ்க்கை அருணகிரிநாதரின் அவல வாழ்க்கை. இகபரத்தின் இன்ப வெள்ளத்தில் மிதப்பதாக எண்ணி கன்னியரின் தேக ஆசையில் ஈடுபட்டு, இடர் பல பெற்று, இரத்தமும் சீழும் வடிந்தொழுகும் உடலோடு பொருந்திய வாழ்வைப் பெற்றவர் திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர்; "மாதரின் மோகமே மேதினியின் தீராச் செல்வம்" என்று நாளெல்லாம் மங்கையரின் பின் சென்று மாயா உலகின் மர்ம ஜாலத்தில் சிக்குண்டு சிறந்தவர் அருணகிரியார்.

"அருக்கு மங்கையர் மலரடி வருடியும்
கருத்தறிந்த பின்னரை தனிலுடை தன்னை
யவிழ்த்து மங்குள வரைசிலை தடவியு மிருதோளுற
றணைத்து மங்கையினடி தொறுசுக மேழ
வுதட்டை மென்று விடுகுறிகளுமிட
வடிக்களந்தனின மயில குயில புறவன மிகவாய் விட்
டுருக்கு மங்கையின மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவ முறுபவ
முறக்கை யினகனி நிகரென விலகிய முலைமேல் வீழ்ந்
துருக்கலங்கி மெயுருடை வழுதுகு
பெருத்த உந்தியின முழுகி மெயுணர் வற
வுழைத் திடுங்கன கலவியை மகிழுவது தவிர் வேனோ."

என்று தான் மனம் திருந்தியதோடு மல்லாமல் மாநிலத்தில் வாழும் மானிடர் அனைவர்க்கும் அறவழி நடந்து காட்ட தம்மையே ஓர் வழிகாட்டியாக அமைத்து அறிவுரை கூறுகிறார்.

கொடுமையின் கொடுங்கோல்:

இந்தத் தெளிவுநிறை திரு உள்ளம் திருப்புகழ் தந்த திருமகனுக்கு எப்படி வந்தது?

காமப் பசியில் தவித்துக் கொண்டிருக்கிறார் அருணகிரி. அவர் காமப் பசியைத் தீர்க்கவல்ல கன்னியர் யார் இருக்கிறார்கள். கற்பைக் காசுக்காக விற்கும் தாசிகள்கூட அருணகிரியை விரும்ப மாட்டார்கள். ஏன்? அவர் பெற்றிருக்கும் நோய் இராஜ நோய். பணம் படைத்த பங்களாவாசிக்கு வரவேண்டிய நோய். அல்லது முன்செய்த கர்மவினையின காரணமாக வரும் நோய் குஷ்டரோகம். அப்படிப்பட்ட உடலைப் பெற்ற ஒருவரை யார்தான் விரும்புவார்கள். அருணகிரியின் தவிப்பைக் கண்ட அவர் தமக்கை, "பக்கத்து அறையில் ஒரு கன்னி இருப்பதாகச் சொல்லி அருணகிரியை அனுப்பினாள். ஆவலோடு சென்றார் அருணகிரி அங்கே அவர் கண்ட காட்சி, அந்தக் காட்சியைக் கண்டு எப்படித்தான உலகுக்கு வழிகாட்டிய அந்த உத்தமன் தன் உள்ளத்தின் வேதனையை தாங்கிக் கொண்டாரோ! அங்கே அருணகிரி கண்ட காட்சி. சொல்லவும் நாக்கூசுகிறது.

தாய்க்கு அடுத்தபடி தன்னை தாங்கிப் போற்றிக் காத்த உடன்பிறந்த சகோதரி, அங்கே கன்னிக்குப் பதிலாக நின்றிருந்தாள். அருணகிரி அவளைப் பார்த்து.

"அக்கா நீங்கள் சொன்ன கன்னி எங்கே?"

"மௌனம்"

"சொல் அக்கா சொல் எங்கே அந்த மாது."

"மௌனம்"

"அக்கா, சீக்கிரம் சொல்லுங்கள். என்னால் தாங்க முடியவில்லை."

"தம்பீ, உனனை அணுக யாரும் விரும்பவில்லை."

"அப்படியானால், நீங்கள் சொன்ன நங்கை."

"நானாகவே இருந்தால் என்ன?"

"அக்கா..."

"அருணகிரி, அந்த நங்கையும் என் போன்ற பெண்தானே ஆகையால்,"

"அக்கா; அக்கா; அக்கா "

அதற்குமேல அருணகிரியால் பேசமுடியவில்லை; அவருக்கு மாத்திரமென்ன நம்மாலும் அதற்குமேல் சிந்திக்கமுடிய வில்லை; ஏன எனறாலும் அதற்கு மேல் எழுத முடியவில்லை.

வீரசபதம

அன்று எடுத்தார் அருணகிரி வீரசபதம். பெண்ணை வெறுத்தார்: பொன்னை வெறுத்தார். ஏன்? மண்ணையும் வெறுத்தார். வாழ்க்கையின் இன்பக் கோபுரம அவரைப் பொருத்தமட்டில் குப்பைமேடாகத் தாழ்ந்துவிட்டது பெண் களின இச்சை, புண்ணிம வடியும நீராக வழிந்துவிட்டது. உலக வாழக்கை பாழ்பட்டுப்போன பளிங்குக்கல கலலறை யாகக் காட்சி அளித்துவிட்டது ஆம்; வாழ்வு ஒரு காலம். தாழ்வு ஒரு காலம். அந்த வாழ்விலும தாழ்விலும் ஏறபட்ட வருங்காலமே அமர வாழ்வின ஆரம்பக்காலம, அந்தக் காலத்தை அடைந்து, ஆன்ம சிந்தனை தெளிவுபெறறு அத் தெளிவின காரணமாக ஆனந்த வாழவை எய்தினர் அருணகிரி ஆம; ஆண்டவனின திருவடியைச் சேர அருணகிரி எடுத்துக் கொண்ட சிரமங்கள் பல ஆயிரம இதோ அறிஞர் தாமஸ்-அ-கெமபிஸ் அவர்கள் கூறுவதை கேட்போம்:

"பகவானைச் சேரவேண்டி உலகிலுள்ள பொருள் களைப் புழுத்து நாறறமெடுத்த சாணத்தைபபோல ஒதுக்கிவிடுபவனே உண்மையான அறிவாளி

நீ உலகிலுள்ள எலலாப பொருள்களையும் பார்த்து ஆண்டு அனுபவித்துவிட்டாய் எனருலும், அவைகளிலிருந்து நீ பெறறதுதான என்ன? ஒன்று மிலலை எலலாருக்கும மேலே அமர்ந்துள்ள இறை வனை, நிமிர்ந்து பார்த்து தனது எலலாப பாவங்களை யும், பிழைகளையும மன்னிக்குமாறு வேண்டிக் கொள். சாரமில்லாத மனிதர்கள் தம்மைப்போலவே உள்ள சக்கைகளில் கிடந்து உழலட்டும். நீ மட்டும் பகவானின் கட்டளையை சிரமேல் தாங்கிநட.

சாவுக்குப் பயந்து ஓடுவதைவிடப பாவத்திறகு அஞ்சி ஓடுவது எவ்வளவோ மேல்,"

(கிறிஸ்து நாதர் அனுசாரம்).

ஆம்! திடீரென்றுவரும் மரணத்திற்கு அஞ்சி ஓடுவதைவிட அவ்வப்போது வரும் பாவத்திற்குப் பயந்து ஓடுவதே ஆன்ம நேய வாழ்விற்கு இடைஞ்சல்தரும் தீயசக்திகளுக்கு விடுதலை தருவதாகும்.

பேச்சிலே பெருமபேசசு

"பேச்சின திறமையினுலேயே தான் செய்கின்ற பாவங் களை மறைத்துவிடலாம்." எனறு நினைக்கின்றவர் அனேகர் உலகில் வாழ்கின்றனர் ஏழ்மையின் காரணமாகவோ- மற்றும ஒரு பெரிய ஆபத்திலிருந்து விடுபடவேண்டும் என்ப தறகாகவோ- ஏராறிய பாவம் செய்தவனைப் பார்த்து பெரும் பேச்சுப பேசித் தனனைவிட யோக்கியன் யாரும் இல்லை என்று வம்பளபபதில பயன இல்லை அதே நேரத்தில் நாம் எவ்வளவு நாட்களுக்கு அலல வருடங்களுக்கு நலல காரியங்களையோ அதன காரணமாகப பெரும் பேச்சுகளையோ பேசிக்கொண் டிருக்க முடியும்.

சில நேரங்களில் நம்மை நாமே புரிந்துகொள்ள முடியா மல் எவ்வளவு நத்தளிபபில் ஆழந்து விடுகிறோம். அபபடிப் பட்ட நாம மற்றவர்களைத் திருத்துவதிலும், தவறு காண்ப திலும், காலத்தைக் கடத்திவிடுகிறோம். ஆனால் நமது எதிர் கால நிலை என்ன என்பதையே மறந்து விடுகிறோம். அப்படிப் பட்ட சூழ்நிலை உண்டாகிறபோது ஆண்டவர் நம்மை,

> "மனுஷன் காணவேண்டுமென்று அவர்களுக்கு இன்பமாகத் தர்மத்தைச் செய்யாதபடிக்கு எச்சரிக்கை யாயிருங்கள். செய்தால் பரலோகத்திலிருக்கிற உங் கள் பிதாவிடத்தில் உங்களுக்குப பலனிலலை."
>
> (மத்தேயு : 1.)

என்று எச்சரிக்கிறார்.

பிறர் குறறம காண்பாா

தம் குற்றம் அறியார், பிறர் குற்றம் காண்பார் என்பது பழமொழி. தன்னை ஒரு மேதாவி என்று கருதிக்கொண்டு மற்றவர்களைப் பேதைகளாக எண்ணுவது இன்றைய உலக வாழ்க்கையில் நீக்கமற நிறைந்திருக்கும் உண்மை. அந்த

எண்ணத்தையே ஆரம்பமும், முடிவுமாக எண்ணிப் பல குற்றங்களைத் தெரிந்தே செய்கிறோம்.

பல பெரிய மனிதர்கள் என்று சொல்லக்கூடியவர்களையும், சொல்பவர்களையும் நாம் பார்த்திருக்கிறோம் அவர்கள் தெரிந்து செய்யும் குற்றங்கள் அல்லது வேண்டுமென்றே செய்யும் குற்றங்கள்கூட 'பெரிய மனிதர்' என்ற பட்டத்தின் போர்வையின் உள்ளும்; மிகப் படித்தவர் என்ற பட்டத்தின வாயிலாகவும். 'செல்வர்' என்ற பெயரின் மறைவிலேயும் மறைந்து விடுகின்றன வென்பதை நாம் கண்டும் கேட்டும் இருக்கிறோம். அப்படிச் செய்யப்படும் குற்றங்கள், குறைகள் எல்லாவற்றையும் மூடிமறைப்பதற்கென்றே ஒரு சில கைக் கூலிகளும் வாழ்ந்து வருகின்ற ஜனங்களையும் நாம் பார்த்து வருகிறோம்.

ஆகவே எல்லாரும் அறிந்துகொள்ளவேண்டிய மிகப்பெரிய உண்மையைக் கிறிஸ்துவின் வாரிசு சொல்லுகிறார்.

> "நீங்கள் குற்றவாளிகள் என்று தீர்க்கப்படாதபடிக்கு மற்றவர்களைக் குற்றவாளிகளென்று தீர்க்காதீர்கள். ஏனெனில் நீங்கள் மற்றவர்களைத் தீர்க்கிற தீர்ப்பின்படியே நீங்களும் தீர்க்கப்படுவீர்கள் நீங்கள் மற்றவர்களுக்கு அளக்கிற அளவின்படியே உங்களுக்கும் அளக்கப்படும்"
>
> (மத்தேயு 7 : 1 2)

நாம் மற்றவர்களுக்கு எதைச் செய்கிறோமோ அதுவே நமக்கு மீண்டும் அளிக்கப்படும். கடலையை விதைத்துவிட்டுக் கரும்பை எதிர்பார்க்க முடியுமா? நம்மை நாமே திருத்திக் கொண்டாலல்லாது மற்றவர்களை எந்த விதத்திலும் கட்டுப் படுத்த நமக்கு எந்த விதத்திலும் அருகதை இல்லை.

> "மற்றவர்களுடைய குற்றங்களை யாருமே காண்பார்கள். தன்னுடைய குற்றம் குறைகளை ஒருவன் கண்டு கொள்வது அரிது, அதற்குவேண்டிய ஞானம் எளிதில் கிடைக்காது. அந்த அறிவைப் பெற்றிருப்பதே என்னுடைய பாக்கியம்."
>
> (யங்இந்தியா, 17-11-1821)

என்று காந்தி அடிகள் கூறியிருக்கிறார். ஆம் காக்கையின் நிறம் அதற்குத் தெரிவதில்லை. ஆனால் அடை காத்துக் குஞ்சு பொரிக்கத்தெரியாத குயில், காக்கையின் கூட்டில் முட்டையை வைத்துவிட்டுப் போனால் அதை அடை காத்து அதன் பலனாக அந்தக் குயிலின் குஞ்சு வெளிவந்தபோது அதன் நிறத்தை அதாவது கருப்பு நிறத்தையும் அதன் குரலை யும் கண்ட காக்கை அதை வெறுத்துக் குத்தி வெளியே தள்ளுகிறது. அதுபோலவே உலக வாழ்வில் உழன்று கொண்டிருக்கும் மக்கள் சமுதாயமும் நினைத்து நித்தியானந்த வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கிறது. அதை மிக நன்றாக உணர்ந்த இராமலிங்க அடிகள் ஆண்டவனே உன்னையே நான் முறைப்படி தெரிந்து கொள்ளாதபோது! மற்றவர்களுக்கு உன்னைப்பற்றியும் என்னைப்பற்றியும் எப்படி எடுத்துச் சொல்லி ஆன்மநெறி வழிப்படி நடக்க வைக்கக் கூடும்? அப்பனே உன்னை நான,

பணிந்தறியேன் அன்புடனே பாடுதலு மறியேன்
படித்தறியேன் கேட்டறியேன் பக்தியிற் பூமாலை
அணிந்தறியேன் மனமுருகிக் கண்களிற் நீர்பெருக
அழுதறியேன் தொழுதறியேன் அகங்காரம் சிறிதும்
தணிந்தறியேன் சுயவறியேன் சத்திய வாசமுந்
தானறியேன் உழுந்தடித்த தடியது போலிருந்தேன.
துணிந்தெனக்குன் கருணைசெய் துரையே யென்னுளத்தே
சுத்தநடனம் புரிகின்ற சுத்த சிகாமணியே!"

என்று கண்ணீர் பெருகிக் காயமெல்லாம் கண்ணீரால் கழுவிக் கழுவி கருணை வடிவான ஞான ஒளியிடம் அடைக்கலம் கேட்கிறார், சோதி வள்ளல் இராமலிங்கர்.

குற்றம் நீங்க வழி எது

மற்றவர்களை குறைகூறிக் கொண்டிருப்பதால் மட்டும் நமது குற்றங்கள் நீங்கி விடுமா? மிகப் பெரும்பாலோர் அப் படித்தான் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். பொன்னைக் காய்ச்சி அடிக்கிற பொற்கொல்லருக்குத்தான் தெரியும், நாம் இந்த வடிவமுடைய நகையைச் செய்யப்போகிறோமென்று. ஆனால் பொன்னுக்குத் தெரியுமா எந்த உருவத்தை அது

அடைகிறதென்று! அது போலவே பொன்னின் நிலையிலுள்ள நமக்கு என்ன தெரியப்போகிறது? பொற்கொல்லனுகிய ஆண்டவனுக்கல்லவா தெரியும், எதைச் செய்யவேண்டுமென்று. அப்படிபபட்ட நாம் மற்றவர்களின் குறைகளைக் கவனிப்பதற்கு முன நமது குறைபாடுகளையும் அவசியம் முதலில் கவனித்தாக வேண்டும். அப்படி நம் பாவக் குறைகளைப் போக்குவதற்கு ஆண்டவனின் அருளை நாம் பெற பிரார்த்திக்கவேண்டும். அப்போது நம்முடைய பாவங்கள் போக்கபபடும் உண்மையான தூய உள்ளத்தோடு ஆண்டவனை தொழவேண்டும். அப்போது நமமுடைய வேண்டுதல்கள ஏற்றுக்கொள்ளபபடும, அதை நான சொலவதில சிறபபில்லை அல்லவா! இதோ உலக மேதை இராஜாஜி அவர்கள் சொலலுகிருர் கேட்போம்.

> "ஆண்டவனின் பேரருளால் பாவங்களினின்று தபபுகிறேம். அவன அருள் இல்லாவிட்டால மிகப புகழும் பேரும பெற்ற பெரியோர்களுடைய கதியும் அதோகதியாகிவிடும். அவன அருளா இருந்தால் தான் மீள்வோம எனபது உண்மையாயினும் நாமும் பிரயத்தனமின்றி சுமமாயிருக்கக்கூடாது அருள் எனபது கடறகாற்றைபபோல வீசிக்கொண்டிருக்கிறது. ஆயினும் அந்தக் காற்றைப பயனபடுததுவதற்காகப படகுக்காரர்கள பாய்விரித்தாலனறிப படகு செலலாது. நம்முடைய உள்ளங்களாகிய பாய்களைச் சரியாக விரித்து வீசுகின்ற அவன அருளைப பயன் படுத்திக் கொள்வோயாக"

(இராமகிருஷ்ண உபநிஷதம்)

என்று ஆழ்ந்து தெளிந்து நமக்கு அறிவுறுத்தியிருக்கிருர் சக்ரவர்த்தித்திருமகன்.

இமயமலை போன்று செலவமும, செருக்கும், தன்னிகரற்ற தனித்தனமையும் பெறறிருந்தாலும். ஆண்டவன் அருள் இல்லையேல அவ்வளவும் பாழே. ஆஸ்தியையும், அரண்மனையையும், ஆணவத்தையும் வைத்துக்கொண்டு இந்த உலகில் வாழலாம். எத்தனை நாளைக்கு நாம் வாழமுடியும்? ஆனுல் நமது ஆன்ம இளைப்பாறுதல் காலத்தில் அடைய

வேண்டிய இடத்திற்கு ஆண்டவனின் அருள் வேண்டும் அதை உணர்ந்து தான் வள்ளுவப் பெருந்தகை.

> " இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு "

என்ற அருள்வாக்கை அருளியிருக்கிறார்.

பாவத்தின் சம்பளம்

"பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார்" என்னும் வார்த்தை உண்மையும், எல்லா அங்கீகரிப்பிற்கும் பாத்திரமானதுமாகும் என்றார், ஆண்டவரின் அடியாரான சுமாலியேலின சீடர், பாவிகள் யார்? பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து ஏசு உலகத்தில் வருவானேன பாவிகள் யார் என்பதற்கு இப்பார் முழுவதுமே சாட்சி நிற்கிறது, பாவம் இல்லாத இடம் எது என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியுமா? சிறிது நின்று நிதானித்துப் பார்த்தால் பாவமேயன்றி மற்றேதும் இந்த ஊன சரீரத்தில் விளக்கம் பெற முடியாது என்பது நன்கு புலனாகிறது இது மிக மிகக் கேவலமான ஒரு சம்பவமல்லவா! இந்தப் பயங்கரப் படுபாதாளத்திலிருந்து தன்னைத் தானே விடுவித்துக் கொண்டவர் யார்? விடுவித்துக்கொள்ளும் வகை அறிந்தவர் யார்?

> " கர்த்தர் தம்மிடல் அன்பு கூறுகிற யாவரையும்
> காப்பாற்றி. துன்மார்க்கர் யாவரையும் அழிப்பர் "
> (சங்கீதம் 145 : 20)

என்று ஆண்டவர் கூறிய அறிவுரைகளை நாம அறிந்தும் அறியாதவர்கள்போல் அவனி வாழ்வில் அந்தகார சூழலில் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கிறோம்.

முற்றும் துறந்த முனிவர்கள் கூடச் சில நேரங்களில் பாவத்தைப் போக்கிக்கொள்ள வழியறியாது பரதவித்தனர். இதோ ஆண்டவனை அன்றுடம் ஜோதி வடிவிலே கண்டு களித்திட்ட கருணைவடிவாம் இராமலிங்கர் அடைக்கலம் கேட்கிறார் ஆண்டவனிடத்தில்,

> " விழியைத்தூர்க்கின்ற வஞ்சகரை விழைந்தேன்
> விருந்திலே யுணவருந்தியோர் வயிறறுக்

குழியைத் தூர்க்கின்ற கொடியரின் கொடியேன்
கோபவெய்யனேன் பாவமே பயின்றேன்
வழியைத் தூர்ப்பார்க்கு உளவுரைத் திடுவேன
மாயமே புரிவோரிற் பெரியேன்
பழியைத் தூர்ப்பதற கென்செயக் கடவேன்
பரமனே யென்னைப புரிந்து கொண்டருளே"

என்று அவர் பரமபிதாவிடம வேண்டுகிருர்

ஒருவன ஒருவனைக்கொலை செய்தல் பாவம் என் கிருேம. அதற்கு வழக்கு, நீதி மன்றம் வழக்காடுஎ அறிஞர்கள் அனைவரையும் அணுகி நீதிகேட்க முயலகிருேம. ஆனல் நாடுகளுக்கு இடையே போர்மூண்டு, ஆயிரமாயிரம் உயிர்கள் பலியாவதைப் பார்க்கின்றனவே அச்செயலுக்குப் பெயரென்ன மனசாட்சியை ஒரு பொருளைச் சாம்பலாகச் சுட்டெரித்து, அதனைக் காற்றிலே பரக்கவிட்டு விடுவதுபோலப் பறக்கவிட்டு விடுகிருேம

போரைத் தோற்றுவிக்கும் பேரரசுகள் கண்டுபிடித்த விஞ்ஞான அறிவின் மூலமாகவாவது பாவத்தினின்று விடுதலை பெற முடியுமா? எப்படி, முடியும் அதன் சக்தி எல்லாவற்றையும் அழிக்கவே பயன்படுமே தவிர, ஆக்க வேலைகளோ, அன்றிப் பாவங்களைப் போக்கவோ பயன்படாது. இதனை உலகம் நமக்குப் பல சான்றுகளால காட்டிவிட்டது. விஞ்ஞானத்தாலேயே தீர்க்கமுடியாத பாவத்தை அஞ்ஞானத்தால் அகற்றமுடியும் என்பதும் கேலிக்கூத்தே. கடல் நீரிலிருந்து நன்னீரை எதிர்பார்க்க முடியாதுதான். அப்படியானல் எந்த ஞானத்தைக்கொண்டு பாவங்களைப் போக்குவது. ஒருவேளை மெய்ஞ்ஞானத்தால முடியுமோ?

இந்தப் பர ஞானத்தினுல அகமபுறமெல்லாம பரிசுத்தப்பட்டு விடுமா? பாவத்தினின்று விடுதலை பெறமுடியுமா? ஏட்டிலே அச்சடித்து நாட்டிலே நிலவும ஞானங்களினுலெல்லாம் பாவத்தினின்று விடுதலை அடையவும வழியைக் காட்டும் வலிமை உண்டா? ஞானமார்க்கத்தை மேடைதோறும் மக்களுக்கு, நாளெல்லாம எடுத்துச் சொல்லிக்கொண்டுவரும் ஆனம ஞானிகளின் தீராத முயற்சியினுலாவது பாவத்

தினின்று அப்புறம் வழிநடக்க ஏது உண்டா? நாட்டுக்கு நன்மை செய்யும் திறமையாளரின் திறமைகள் அவர்களைப் பாவத்தினின்று மீட்டுவிட்ட விளக்கங்கள்-விவரங்கள் விவே கங்கள் வெளிவந்த செய்திகள் இவற்றையாவது நாம் கேட்டிருக்கிறோமா? ஏன! நம்மைநாமே ஒருமுறை நெஞ்சத்தில் கையை வைத்துக் கேட்டுப் பார்ப்போமே;

" தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச்சுடும் "

என்று உலகப் பொது மறைதந்த வள்ளுவர் பகர்கிறார்.

நானிலத்தில் நடமாடும் நாசமான தத்துவங்களை நம்பி என்றென்றும் ஏதோ நன்மையான சிலவற்றை மகத்தானதாக நம்பி மோசம்போவது நமக்கு அடுக்குமா? "அடுக்குமோ அடுக்குமோ" என்று அழுத்தடுத்து ஒரு கேள்வியை நம் நெஞ்சகத்திற்கே விடுத்துப் பார்ப்போம். என்ன பதில்? மோட்சமா? நரகமா? இப்ப வாழ்வா? ஏகபோக நிலையா? எல்லாம் அறிந்த தன்மையா? இல்லையா? பிறகு நிலைப்பதென்ன? ஒரே சூன்யம். அந்தச் சூன்யத்திலே நமக்கு ஒரு ஞானஒளி தோன்றுகிறது. அதுதான் நம் பாவங்களுக்காகப் படாத பாடுபட்டுச் சிலுவையிலே மரித்த கிறிஸ்து என்னும் பேரொளி. அதுவே நம் பாவங்களை அப்புறப்படுத்தும் தூய ஒளி. அந்த ஒளிதான் பாவத்தின் சம்பளமாகிய மரணத்தை அகற்றி புண்ணியத்தின் பேரின்ப மோட்சபாக்கியத்தை அளிக்கும் ஞான ஒளி.

பாவத்தின் வாரிசு

நாம் செய்த பாவங்களை யாராவது பகிர்ந்துகொள்ள முன் வருவார்களா? வருவார்கள். உண்டானபோது கோடி கோடியாக உறவின் முறையார்கள் வந்து, கொண்டாடி வாழ்த்தி வணங்கிச் செல்வார்கள். ஆனால், கையிலே இருந்த பையிலே இருக்கும் காசு குறைந்துவிட்டால், நம்மைக் கண்டாலும் காணாதவர்போலப் போய்விடுவார்கள். அப்படிப்பட்டவர்கள், துன்பம் விளைவிக்கும் பாவத்தில் மட்டும் எப்படிப் பங்கேற்பார்கள். மற்றவர்கள் என்ன! நம்மைப் பெற்று வளர்த்து ஆளாக்கிய பெற்றோர்கள், உடன்பிறந்தார் ஏன் நாம் பெற்று வளர்த்த மக்கள் கூட நம் பாவங்களில் பங்கேற்க

மாட்டார்கள். அதை வேதநாயக சாஸ்திரியார் எவ்வளவு தெளிவாக நமக்கு ஞாபகப்படுத்துகிருர்.

"தந்தை தாயிறந்தனர் பந்துளோ ரிறந்தனர்
தரணி மன்னர் மாண்டனர் சகலபேரும் மாண்டனர்
இந்த லோகச் சங்கடத்தில் யாரிருந்து வாழ்ந்தனர்
ஏழையானும் வீயுநாளல்லின்று நாளையெனறிலே
விந்தையான லோக வாழ்வை அந்தமாக நாடியே
வீணிலே அலைந்துழன்று தீயிலே விழாமலே
எந்தநாளு மென்றனுக் கிரங்கியா தரிக்கவென்
றேகனுக் குறைக்க வேணு மியேசு நாதசாமியே"
(ஜெபமாலே)

என்று கிறிஸ்துநாதரின் பொற்பாதக் கமலங்களில தஞ்சம் அடைகிருர் சாஸ்திரி அவர்கள். அதுமட்டுமா தானு!

"தந்தை தாய் தமர்தார மகவெனும் இவையெலாஞ்
சந்தையிற் கூட்ட மிதிலோர சந்தேகமில்லே"

என்கிருர் தாயுமான சுவாமிகள். பல ஊர்களிலிருந்து பல பேர் வந்து கூடிப் பிரியும் சந்தைக் கடைபோன்றது நம் உறவின் நட்பு என்கிருர் சாமிகள்.

நீர்குமிழி போன்றது வாழ்க்கை. நேற்று முளைத்து. இன்று வளர்ந்து நாளை மறைந்து விடும மாரிக்கால காளான் போன்றது வாழ்க்கை. பழுக்கக் காய்ச்சிய இரும்பின் மேல் விழுந்த நீர்த்துளியைப் போன்றது வாழ்க்கை அந்த வாழ்க்கையை ஏதோ மேலான இடத்தில் வீற்றிருப்பதாகக் கருதி அளவில்லாத பாவங்களைச் சேர்த்து வைத்துக் கொள்ளுகிறோம். அதன் நிலே முடிவில் நாம் காணப்போவது எது என்பதை மகா கவி கிஷ்ருணப் பிள்ளை கூறுகிருர்.

"நிலைநிலா தழிவது நிரயத்துய்ப்பது
கலைவலார் வெறுப்பது களங்கமிக்கது
மலேயுறு துன்பநோய் மலியப் பெற்றது
புலையுல கத்துப் போக சாரமே"
(இரட் - யாத்திரிகம்)

என இந்த உலக வாழ்க்கையையே பாவமும் பழியும் நிறைந்த கொலைஞர் வழி வந்தது என்று சாடுகிறார்.

நாடகம் நடிக்கிறோம

மேற்சொன்ன ஞானியர்களின் கருத்துரைகளை நாம் அறியாமலா போனோம்! இந்த மாநிலத்தை ஆளும் மன்னாதி மன்னரெல்லாம் அகில உலகத்தையே அல்லோலகல்லோலப் படுத்தும் யதேச்சாதிகாரம் பெற்றோரெல்லாரும் முடிசார்ந்த மன்னர்களெல்லாரும்-மற்றுமுள்ள யாவரும இறுதியில் ஒரு பிடி சாம்பலாக வெந்து மண்ணாவதைக் கண்டும்கூட, நமது போக்கிலே தானே போய்க்கொண்டிருக்கிறோம் காரணம் எலலாவற்றையும் ஒரு.பாறு தெரிந்தும் தெரியாதவர்போல் நடிக்கிறோம். அந்த நடிப்பு எத்தனை நாளைக்கு?

பாவத்தின நிழலிலே அல்லல்பட்ட ஞானியர்கள் செய்தற்குரியவைகளில் அல்லது தங்களால் செய்ய முடிந்தவைகளில் சிலவற்றையேனும் செய்து முடித்திருக்கிறார்கள். இன்னும் செய்து முடிப்பார்கள். சர்வ லோகத்திற்கும் ஏகசுதனாகிய இயேசுகிறிஸ்துநாதரோ நமது பாவ விமோசனத்திற்காக எல்லாவற்றையும் செய்துமுடித்தார். சிலுவை மரத்திலே ஆணிகளால் அவரை அறைந்தபோது, ஆணி அடித்த துவாரங்களின வழியாக ஊற்றெடுத்து அருவிபோல வழிந்தோடிய உதிரத்தின் ஒவ்வொரு சொட்டும் நம் பாவங்களைக் கழுவிச் சுத்தம் செய்யும் பாவ விமோசனத்தின் சின்னமல்லவா!

பாவம், பொறாமையையும் வளர்க்கும ஒரு பாதையாகவும் காட்சி அளிக்கும். அந்தப பாதையிலே நடமாடும் யாரையும் நான் ஏறெடுத்துப் பார்க்க மாட்டேன் எனறு மறைந்த மாமேதை ஓய். எம். சாலமோன போதகர் சொல்லுவதைச் சிந்தித்துச் செயலாற்றுவோம்.

"பொல்லாப் பொறாமையது எலும்புருக்கி
புற்றராவினுங் கொடிய விடம்பெருக்கி
சொல்லாலும் செயலாலும் தீமைகக்கிச்
சோர்வடைய செய்தவனை கண்டேன் வெட்கி
புல்லா னென்போன்றவர்கள் இதன்முன்பக்கிப்

போகேலாடிப் போனாரே இதை நசுக்கிச்
சொல்லாயோ" கொன்றழியும் தேவா! தேவா!
குவலயத்துள் துதிதோத்ரம் நினக்கே தேவே!"

எனப் பரம பிதாவை வணங்கி, எல்லாம் அறிந்து அறியாதவர் போல நாடகம் நடிக்கிறோம் என்று நமக்கு அறிவுரை கூறுகிறார் அம்மெய்ஞ்ஞானப் புலவர்.

பரிசுத்தமான வழி

"பரிசுத்தர் பரிசுத்தரே ஏனய்யா சாமி
பாடுவேன பாடுவேன் நானே"

என்று நாவெல்லாம் பாடுகிறோம். ஆனால் அந்தப் பரிசுத்தர் காட்டிய பரிசுத்தமான வழியைப் பின்பற்றுகிறோமா. பரிசுத்தரின் பெயரைச் சொல்லி மாட மாளிகைகள், பாங்குகளில் காசுக் குவியல்கள், பணிவிடையின் மேல் பணிமாலையாகப் பொன் வடங்கள், பிள்ளைகளுக்குக் கான்வென்ட் படிப்பு, எதிர்கால வாழ்விற்கு இன்சூரன்ஸ், இத்யாதி தேவைகளை மேன மேலும் தேடிக் கொள்கிறோம் அப்படி பொய் மொழிகளை துண்டு பிரசுரமாக இலவசமாக "அச்சடித்துக் கொடுக்கிறேன்" என்று பொய் சொல்லி கிறஸ்தவர்களின் பணத்தையே கொள்ளை அடித்தே எல்லாவற்றையும் செய்து முடித்துவிடுகிறோம். என்ன பயன்? பரிசுத்தம் எது என்பதை யோசித்துப் பார்த்தோமா நாம்.

இருக்கும்வரை இன்பம் அனுபவித்துக்கொண்டிருந்தால் போதும் என்று நினைத்து ஜீவிக்கிறோம். அது நிலையான இன்பமா?

மேலும் மேலும் பாவத்தைச் செய்துகொண்டே போகும் நாம் பரிசுத்தம் எப்போது அடையப் போகிறோம். பரிசுத்தமாக வழி என்ன? காந்தி அடிகள் சொல்லுகிறார்.

"உலகத்தில் ஏன் பாவம் இருந்து வருகிறது? இது எனக்கு விளங்கவில்லை. எவ்வளவு ஆராய்ந்து பார்த்தாலும் இந்தச் சிக்கலைத் தீர்த்துக்கொள்ள முடியவில்லை. ஆண்டவனுக்குச் சமமாக ஞானம் படைத்திருந்தவர்களே சீர்திருத்த முடியும். என்

சக்தியின் வரம்பை அறிந்துகொண்டு அடக்கத்துடன் நான் தீர்மானித்துக் கொண்டது இவ்வளவே. எனவே ஆகக் கூடிய காரியம், என்னால் செய்ய வேண்டிய கடமை பாபத்தை வெறுப்பது ஒன்றே.

ஆண்டவனுடைய பெருமையைக் கண்டு வியந்து வருகிறேன். நமக்கு வரும் கோபம் அவனுக்கு இல்லை. ஆகா! எவ்வளவு பாவங்களை எவ்வளவு காலம் பொறுத்து வருகிறேன."

(யங் இந்தியா, 1 -10-1926)

மகான் என்று உலகத்தோரால் போற்றப்படுகிற காந்தி அடிகளுக்குக் கூடப் பாவம் இப்படித்தானவரும் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல இயலவில்லை. மேலும் சொல்லுகிறார்.

"பாபத்தோடு போர் செய்ய வேண்டியது என் கடமை. இதையும் உணர்ந்தேன். உயிரைக் கொடுத்தும் அதர்மத்தினோடு போர் புரிய வேண்டும். இல்லாவிடில் கடவுளைக் காணும் ஆசையில் பயனில்லை என சிறு அனுபவத்திலிருந்தே நான் கண்டு கொண்டேன். எவ்வளவு நான் அதர்மத்தை ஒழித்து நன்னெறியில் நிற்கிறேனோ அந்த அளவுக்குப் பகவானுடைய காட்சி விலகிப்போகிறது"

(யங் இந்தியா, 11-10-1928)

காந்தி அடிகள் மிகப்பெரிய சோதனைக்குப் பிறகு விளக்கிய பேருரை இது

இவைகளை உணர்ந்தும் நாம் மேலும் மேலும் பாவத்தைச் செய்துகொண்டே போய் பரிசுத்தப் பாதையிலிருந்தே விலகிப் போகப் போகிறோமா. அப்படி விலகிப்போனால் நமக்கு என்ன ஆக்கினை கிடைக்கும். இதோ வேதம் நமக்கு சொல்லும் அறிவுரை.

"உன் சத்துருக்களுக்கு முன்பாக நீ முறியடிக்கப்படும்படி, கர்த்தர் செய்வார். ஒருவழியாய் அவர்களுக்கு எதிராகப் புறப்படுவாய். ஏழு வழியாய் அவர்களுக்கு முன்பாக ஓடிப் போவாய்: நீ பூமியிலுள்ள எல்லா ராஜ்யங்களிலும் சிதறுண்டு போவாய்.

உன் பிணம் ஆகாயத்துப் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் இரையாகும், அவைகளை விரட்டுவோரில்லாதிருப்பார்கள்.”

(உபாகமம், 28 : 25—26)

கேட்டீர்களா, இனி நாம் என்ன செய்யப் போகிறோம். ஐயையோ! நினைக்கவே நெஞ்சு நடுங்குகிறதே. பரிசுத்தப்படாத நம் உடல் ஆகாயத்திலே தூக்கி எறியப்பட்டு சின்னாபின்னமாக்கப்படுமாமே! எந்த நாட்டிலும் நாம் தலைகாட்ட முடியாதாமே. நாம் என்ன செய்வோம் நாம சேர்த்துவைத்த பணம் அந்த கொடிய ஆபத்தைத் தடுத்து நிறுத்துமா! பணம் பாதி பகிர்ந்தெடுத்து பகட்டுக்காக, பாடுபட்ட ஏசுவின் வாக்கியங்களை பிரசுரித்தோமே, அந்த பிரசுரங்கள், அந்த வேதனைப் புயலைத் தடுத்துவிடுமா! முடியாதே ஆகவே இன்றையிலிருந்தே அந்த பரிசுத்தப் பாதையை நோக்கி நடைபோடவேண்டாமா! பரிசுத்தம்' பரிசுத்தம்! அதுவே நமது வாழ்க்கையில் பாதுகாப்புக் கேடயமாக இருக்கட்டும்.

மெய்ஞ்ஞான வழி :

கிறிஸ்துபிரான் இன்னும் ஞான ஒளியாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். அவரது ஞான ஒளி நம எல்லார் மீதும் பரவி நம் பாவங்களை எல்லாம போக்கி பரிசுத்த மாளிகைக்கு நம்மை அழைத்துப் போகும் பேரொளியாகும்.

கிறிஸ்து இயேசு மண்ணுலகில மனிதனாகப பிறந்தார். நம் பாவங்களுக்காகச் சிலுவையிலே அறையப்பட்டு மரித்தார். பினபு மரித்த மூன்றும் நாள் உலகம் வியக்க உயிர்த் தெழுந்தார். பர மண்டலத்திலே அவர் அமர்ந்திருக்கிறார். அவர் உலகப பாவங்களைப் போக்க வந்த இரட்சகர். ஞானமார்க்கத்தைப் போதிக்க வந்த மெய்ஞ்ஞானப போதகர். பாவமன்னிப்பை அளிக்க வந்த பரஞ்சோதி. தத்துவ வித்தகர் இருள் மாயை போக்கி அருள் வாய்மையைப புகட்டவந்த ஜெகத் இரட்சகர். அந்தப புனிதரின வாழ்வைப் பின்பற்றிப் பரிசுத்தமாக வழி என்ன? மகான இராமகிருஷ்ண பரமஹம்சர் சொல்லுகிறார்,

"மீளவேண்டும் என்று உண்மையில் விரும்பினுல் ஆண்டவனே வழி காட்டுவான. விரும்புவது என்றுல் வெரும் வாய்ப் பேச்சில் அல்ல. விடுபட வேண்டும் என்கிற ஆசை மேலிட்டு உள்ளம் கரைய வேண்டும். குழந்தைகளுக்காகவும், மனைவிக்காகவும், பணத்துக்காகவும் படிக் கணக்கில் கண்ணீர் விட்டு விடுகிறேம். ஆனுல், ஆண்டவனை அடையவேண்டும் என்று யார் அபபடி அழுகிருர்கள்."

(இராமகிருஷ்ண உபநிஷதம்)

நாம கட்டாயம் அழவேண்டும. நமக்காக நாம் செய்த அக்ரமம் அநியாயங்களுக்காகச் சொலலொணு வேதனைபட்டுக் கல்லடியும், சொலலடியும், சாட்டை அடியும் பெறருரே கிறிஸது நாயகனா அவற்றை நினைந்து நினைந்து அழவேண்டாமா நாம்!

கலவாரி மேட்டிலே ஐநது காயங்களோடு காட்சி அளிதது. காட்சி அளித்த காயங்களிலிருந்து வழிந்து, நம் பாவங்களைக் கழுவிய ஆணடவர் கிறிஸ்துவின இரததத்தை நினைந்து நினைந்து அழவேண்டாமா நாம்!

தங்கத் தட்டிலே மாணிக்கம், புட்பராகம், கெமபு, கோமேதகம், முத்து, பவளம், வைரம், மரகதம், வைடூரியம் ஆகிய நவரத்தினங்கள் பதிததுப பொற்சரங்கள் அமைக்கப்பட்டு, ஆதவனின் கிரணங்களைபபோல் ஒளிவீசும கிரீடத்தைச் சூட்ட வேண்டிய இயேசுநாதனின் தலையிலே, முள்முடியைச் சூட்டி உதிரம கசியவைத்தார்களே, அந்த உதிரத்தைப் பார்த்துப் பார்த்து அந்தக் கொடுமையைச் சிந்தித்துச் சிந்தித்து அழ வேண்டாமா நாம!

பொய்யை, பொய்மையை மறந்துவிடு என்றுல, மறக்க மாட்டேன என்கிறேம். பொல்லாத பெண்ணுசையைப் போக்கிவிடு எனருல, ஐயையோ அதுமட்டும் முடியாது. கிளியைப்போல் மனைவியிருந்தாலும், குரங்கைப் போலாவது ஒரு வைப்பாட்டி வேண்டும என்று சொலலுகிறேமே. ஆனுல், ஆண்டவருடைய திருநாமத்தைச் சொல் எனருல மட்டும், முடியாது எனகிறேமே, ஏதனுல! அதை கபீர்தாஸ் சுவாமிகள் சொல்லுகின்றபோது.

"ஜநுத்னே சோட்டா ஸ்வாம் சோட்டா ராம்
பஜன ?கா க்யோ சோட் தியா"

என்று மனம் நொந்து ஆராத்துயர்க் கடலில் ஆழ்ந்து விடுகிறார் அந்த இராமபக்தர்

இதோ, நீர் வராத கண்களிலும் கண்ணீர் ஆறாகப் பெருகக் கலங்காத கண்களையும் அழுநீரால் அடைமழையாய்ப் பொழிய வைக்கிறார் இராமலிங்க அடிகள்,

"மதத்தேறி அலைதயிர்போல வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி மதத்திதேறு
பித்தேறி உழலகின்ற மனத்தால் அந்தோ
பேயேறி நலிகின்ற பேதையானேன்
வித்தேறி வினையேறி மகிழுகின்றோர் போல
மேலேறி அப்பரெல்லாம் விளங்குகின்றார்
ஒத்தேறி உயிர்க்குயிராய் நிறைந்த எங்கள்
உடையவனே இதுதகுமோ உணர்கிலேனே"

என்று பாடுவதை எண்ணி, எண்ணி அவர் ஆண்டவனை நினைந்து அழுவதைப்போல நாமும் எம்பெருமான் இயேசுவை நினைந்து நினைந்து அழவேண்டாமா!

அழுதால் வருவார்

இப்படியெல்லாம் அழுதால் ஆண்டவன் நம்மிடம் வருவாரா. நமது கண்ணீரைத் துடைப்பாரா! நம் கலக்கத்தை விலக்குவாரா! சந்தேகமென்ன கட்டாயம் நமது கண்ணீரைத் துடைப்பார், கவலைகளைப் போக்குவார், எப்படி? இராமகிருஷ்ணர் சொல்லிய ஞானவாக்கை உலகமேதை இராஜாஜி நமக்கு ஞாபகப்படுத்துகிறார்.

"குழந்தை பொம்மைகளை வைத்துக்கொண்டு விளையாடிக் கொண்டிருக்கும் வரையில்தான் சமையலறையில் வேலை செய்துகொண்டு தாயிருப்பாள். விளையாட்டு போதுமாகப் போய்ப் பொம்மைகளை எறிந்துவிட்டுக் குழந்தை கத்தி அழுகிறது. உடனே தாயார் தன் வேலையை விட்டுக் குழந்தையண்டை ஓடுகிறாள். ஓடும் அவசரத்தில் சமையலறை சாமான்

கள் உருண்டும் சிதறியும் போகும். அந்த மாதிரியே உள்ளம் உருகி அழும் பக்தனிடம் பகவதி ஓடி வருவாள்."

(இராம. கி உபநிஷதம்)

அதுபோல நாம அழுதால ஆண்டவர் நம்மிடம வரமாட்டாரா? நமது கண்ணீரைத் துடைக்க மாட்டாரா? அவசியம வருவார். ஆனந்தமாக வருவார்.

"மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து இனி மரிப்பதில்லை என்று அறிந்திருக்கிறோம மரணம இனி அவரை ஆண்டு கொள்வதில்லை. அவர் மரித்தது பாவத்திற்கென்று ஒரே தரம மரித்தார்; அவர் பிழைக்கிறது தேவனுக்கென்று பிழைத்திருக்கிறார்."

(ரோமர், 6 : 9—10)

வேதம் நமக்கு அறிவிக்கிற செய்தியைச் சிந்தித்துப பாருங்கள். தேவனுக்கென்று பிழைத்திருக்கிற இயேசுபிரான நமது பிழைகளையும மன்னிக்க வருவார் என்பதில சந்தேகமென்ன! அப்போது நாம பிழை யுள்ளவர்களாகவே இருக்கப போகிறோமா என்பதை நாமே முடிவு செய்துகொள்ள வேண்டிய நேரம் வந்துவிட்டது என்பது உலகத்தின போக்கு நம்மை மேலும் ஆயத்தப படுத்துகிறது.

"கர்த்தருக்குப பயந்து அவர் வழிகளில நடக்கிறவன எவனோ அவன பாக்கியவான்."

(சங்கீதம், 128 : 1)

என்பதை எண்ணி நாம நமது வாழ்நாளில் நடந்தாகவேண்டும்.

கலங்கரை விளக்கு

நாம் தீய வழிகளில் செல்லுகின்றபோது ஆண்டவர் நம்மைத் தண்டிக்கிறார். அது நமக்கும் நன்குத் தெரிகிறது. ஆனால், அதை நாம ஏதோ நடப்பதாக எண்ணி அலட்சியப் படுத்தி விடுகிறோம். ஆனால், காலம் நம்மை அண்டுகிறபோது நாம் கவலையில் ஆழ்ந்து கண்ணீர் விடுவதால் பயனில்லை. எல்லாவற்றிற்கும் ஒரு காலமுண்டு.

"பிறக்க ஒரு காலமுண்டு; இறக்க ஒரு காலமுண்டு

நட ஒரு காலமுண்டு; நட்டதைப் பிடுங்க ஒரு காலமுண்டு.

கொல்ல ஒரு காலமுண்டு; குணமாக்க ஒரு காலமுண்டு.

இடிக்க ஒரு காலமுண்டு; கட்ட ஒரு காலமுண்டு.

அழ ஒரு காலமுண்டு; நகைக்க ஒரு காலமுண்டு.

புலம்ப ஒரு காலமுண்டு; நடனம் பண்ண ஒரு காலமுண்டு.

கற்களை எறிந்துவிட ஒரு காலமுண்டு; கற்களைச் சேர்க்க ஒரு காலமுண்டு.

காப்பாற்ற ஒரு காலமுண்டு; எரிக்க ஒரு காலமுண்டு.

தேட ஒரு காலமுண்டு; இழக்க ஒரு காலமுண்டு.

கிழிக்க ஒரு காலமுண்டு; தைக்க ஒரு காலமுண்டு

மௌனமாயிருக்க ஒரு காலமுண்டு; பேச ஒரு காலமுண்டு.

சிநேகிக்க ஒரு காலமுண்டு; பகைக்க ஒரு காலமுண்டு.

யுத்தம் பண்ண ஒரு காலமுண்டு; சமாதானம் பண்ண ஒரு காலமுண்டு"

*(பிரசங்கி, 3 2-8)*

என்று வேதம் கூறுகிறதே. அந்தக் காலத்தை எல்லாம் கடந்துவிட்டோமா நாம்! இல்லையே. கடந்துவிட்ட மகான்களை நமக்கு நினைவுபடுத்துகிறார் மகாகவி பாரதியார்.

"நொந்த புண்ணை குத்துவதில் பயனொன்றில்லை!
நோயாலே மடிந்திட்டான் புத்தன் கண்டீர்!
அந்தணனும் சங்கரா சார்யன் மாண்டான்!
அதற்கடுத்த இராமனுஜனும் போனான்!
சிலுவையிலே அடியுண்டு யேசு செத்தான்!
தீயதொரு கணையாலே கண்ணன் மாண்டான்!
பார்புகழும் இராமனுமே யாற்றில் வீழ்ந்தான்!"

என்று காலத்தை வென்ற மகான்களின் வரலாறு நமக்கு வழி காட்டுகிறது. அவர்கள் வழியைப் பின்பற்றுவது நமது வாழ்க்கையில் மாபெரும் வெற்றியாகும். அந்த வெறறிக்கு வழி காட்டியாக நமக்கு மட்டுமலலாமல் உலகுக்கே வழி காட்டியாக இருபபவர் உலகநாதன கிறிஸ்துவே யாவார்.

உலக இரட்சகனைத் துதிப்பதற்கு நமக்கு வழி காட்டுகிறார்' அறிஞர் தாமஸ்-அ-கெமபிஸ்.

"மகா இன்பமும் அன்பும் நிறைந்த ஆண்டவரே உம்மை இச்சமயம் எல்லாப பயபக்தியுடனும் வர வேற்க அடியேன வாஞ்சிக்கிறேன். என்னுடைய பலவீனமும், நான் அனுபவிக்கிற கஷ்டமும் இவ்வள வென்றும். எவ்வளவு பெரிய தீமைகளிலும், அக்ரமங் களிலும் நான் ஆழ்ந்திருக்கிறேனென்றும், எவ்வளவு அடிக்கடி என்னில் உபத்திரவங்களும் துன்பங்களும், சோதனைகளும், பாவக் கறைகளும் உண்டாகிற தென்றும் தேவரீர் அறிவீர்.

இவைகளெல்லாம் நீங்கும்படி தேவரீரிடம் வரு கிறேன்; ஆறுதலையும், சகாயத்தையும் அருளும்படி உம்மை நோக்கிக் கெஞ்சுகிறேன். தேவரீர் எல்லா வற்றையும் அறிவீர். என்னில்

உள்ளவைகளெல்லாம் உமக்கு வெளியரங்க மாயிக்கின்றன. தேவரீர் ஒருவரே எனக்குத்துணை செய்யவும் என்னை முழுவதும் ஆறுதல் படுத்தவும் வல்லவர். ஆகையால் உம்மை நோக்கி அபயமிருக் கிறேன்.

(கிறிஸ்து நாதர் அனுசாரம்)

பைபிளில் ஒரு வாக்கியம் என்மனத்தை அப்படியே பற்றிக் கொண்டது.

"இந்த உலகத்தைக் கடவுளின் ராஜ்யமாகவும் அவருடைய நீதிக்கு உறைவிடமாகவும் செயயுங்கள் எல்லாம் உங்களுக்கும் தாமே கிடைக்கும்"

இந்த வாக்கியத்தில் பொதிந்து கிடக்கும் உணர்ச்சியை அறிந்து, போற்றி அதன்படி நீங்கள் செயம்முறையில் ஈடுபடுவீர்களாயின் கிறிஸ்து பெருமானுக்கும் வேறு எந்த மதாச்சாரியர்களுக்கும் உரிய இடம் எது என்று அறிய வேண்டிய அவசியமே இல்லை." மாணவருக்கு

கோடிக்கணக்கில் பணத்தை அள்ளி வீசி வெள்ளித் திரைக்குப் படம் எடுக்கிறார்கள் படமும் வெளி வருகிறது. பல்லாயிரம் மக்கள் பார்க்கின்றனர். ஆனால் எல்லாரும் விரும்பினர்கள் என்று சொல்லிவிட முடியாது. ஒரே படத்தைக் குறிப்பிட்ட சிலரே கதை—வசனம்—பாடல் அமைத்து அதை இயக்கவும் வைக்கிறார்கள். ஆனால் சில நடிகர்களைப பொருத்தே படம் ஓடுகிறது. அவர்கள் இல்லை எனறால ஏதாவது ஒரு முறையில படம வசூலை அளிக்காமல் நஷ்டத்தைக் காட்டுகிறது அதுபோல எத்தனை மதங்கள் தோன்றினாலும், அதை எத்தனை மதாச் சாரியர்கள் போதித்தாலும, ஒரு சில மதங்களும், ஒரு சில மதாச்சாரியர்களுமே மக்கள் மனத்தில் உலகப் பேரவையில் இடம் பெறுகின்றனர். அப்படி மக்கள் உள்ளங்களிலே நிலைத்து நிற்கும் மதம் கிறிஸ்துவ மதமே என்று காந்தி அடிகள் உள்ளத் தூய்மையோடு திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார்.

பிறர் நலம பேணும புனிதன

கிறிஸ்துப் பெருமான் தனக்காக இலலாமல் மக்கள் நலத்திற்காகப் பாடுபட்டார். ஏழை எளியவர்களின் இழி நிலையைப் போக்கி, எழுச்சி மிக்க வாழ்வு வாழ்ந்து ஆன்ம இனைப்பாறுதலுக்குத் தங்களைத் தாங்களே சீர்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே தம் உயிரையே பலி கொடுத்தார்.

கிறித்துப் பெருமான் வாழ்ந்த காலத்தில் அவருடைய போதகத்தைக் கேட்டவர்களும் இருந்தார்கள். ஆனால் அவர் தம்மைப் பின்பற்றியவர்களுக்கு மட்டுமன்றிப் பொதுவாக எல்லாருக்குமாகவே தம்முடைய உயிரைப் பலி கொடுத்தார். மற்றவர்கள் அவர் வழி பின்பற்றவில்லை என்றாலும் கிறிஸ்தவராக இருப்பவர்கள் கிறிஸ்துவின் வழியைப் பின்பற்றவில்லை என்றால், அது தேமாங்கனி யிருக்கக் காஞ்சிரங்காயை உண்ணும் அறியாமைக்கு ஒப்பாகும்.

"கர்த்தருடைய நாள் இரவிலே திருடன் வருகிற விதமாய் வரும்; அப்பொழுது வானங்கள் மட மட என்று அகன்று போம், பூதங்கள் வெந்து உருகிப் போம், பூமியும் அதிலுள்ள கிரியைகளும் எரிந்து அழிந்துபோம்.

இப்படி இவைகளெல்லாம் அழிந்து போகிறதாயிருக்கிற படியால் நீங்கள் எப்படிப்பட்ட பரிசுத்த நடக்கையும் தேவபக்தியும் உள்ளவர்களாயிருக்க வேண்டும்!"

(பேதுரு 3 : 10—11)

என்று வேதம் நமக்குத் தெளிவு படுத்துகிறது. கிறிஸ்துவின் வழியை நாம் உண்மையாகவே பின்பற்றுகிறோம் என்றால் முதலில் நம்மை நாமே தூய்மைப் படுத்திக் கொண்டு மக்களின் அறியாமையைப் போக்கி அவர்களுக்குத் தொண்டு செய்வதையே கடமையாகக் கருதி பணியாற்ற வேண்டும், பிறர் துன்பங்களைத் தங்கள் துன்பங்களாக—பிறர் துயரங்களைத் தங்கள் துயரங்களாக ஏற்று, பாவக் குழியில் வீழ்ந்து தத்தளிக்கும் அபாக்கியவான்களின் ஆன்ம மன்னிப்பிற்காக ஆண்டவனிடம் மன்றாடுபவனே உண்மையான கிறிஸ்தவன். தனக்கென்று எதையும் தேடாமல் தேடியதை மற்றவர்களுக்கு அளிக்காமல் தனக்காகவே சேர்த்து வைக்காமல். மரணத்தை என்றைக்கும் வரவேற்று, அதே சமயத்தில் மரணம் தன்னை வந்து அணைப்பதற்குள், ஆன்மமீட்சிக்காகவும், ஆண்டவரின் அருளைப் பெறவும் தன்னைத் தானே ஆளாக்கிக் கொள்பவனே

பணியே தெய்வத்திற்குச் செய்யும் தூய பணி என்பதை காந்தி அடிகள் நமக்குப் போதிப்பதைக் காண்போம்.

> "மக்களுக்குப் பணி செய்வதில் கடவுளைக் காண நான் முயற்சி செய்து வருகிறேன். ஈசன் மேலே எங்கேயோ வானுலகத்தில் இருக்கிறான் என்றாவது அல்லது கீழே எங்கேயோ பாதளத்தில் இருக்கிறான் என்று சொல்லுவதாவது மடமை. நாம் அறியும் ஒவ்வொரு உயிரிலும் அவன் இருக்கிறான"
>
> (சத்திய சோதனை)

ஆகையால் உயிர்களுக்குத் தொண்டு செய்வதே ஆண்டவன் தொண்டு. அதுவே கிறிஸ்துவுக்கு அவர் வேதத்திற்கு உண்மையான கிறிஸ்தவன் செய்யும் உண்மைத் தொண்டாகும்

வழி நடப்போம்

> "நீ உன நோவுகளை மறந்து உண்டான இளைப் பாறுதலை அனுபவிக்கும் படி நான் செய்வேன் வேதத்தின் பசும் புல் நிலங்களை உனக்குத் திறந்து காட்டி உன இதயம் விசால மடையவும் நீ என கற்பனைகளின் வழியாய் ஓடவும் செய்வேன். அப் போது இக் காலத்துப் பாடுகள் இனி நம்மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு ஒப்பிடத் தக்கவைகள் அல்ல."
>
> (ரோமர் 8 : 18)

என்று நமக்கு ஆண்டவருடைய வேதம் வகையையும் வழியை யும் காட்டியிருக்கிறது.

கிறிஸ்துவின் வாழ்க்கை ஏதோ ஏட்டிலே எழுதிவிட்ட காவியம் அன்று. அல்லது கவிதை வடிவிலே வடித்துக் காட்டிய ஓவியமும் அன்று. ஆனால் நினைக்க, நினைக்க தெவிட்டாத, பேசப் பேச மாளாத, காணக் காண மறையாத பேரொளியிலே நமது பாதையைப் புரிந்து, பரமனின் புகழைப் பாடி அவரின் பொற் பாதக் கமலங்களை அடைவதே நமது வாழ்வின் வழியாகும்.

நாம் என்ன செய்து என்ன பயன். நமக்காக நாம் செய்தவைகள், சேர்த்து வைத்தவைகள், தேடி வைத்த வைகள் எல்லாம் அநித்தியமே. ஒரு முறை ஒரே ஒரு முறை நமது மரணத்தை எண்ணிப் பாருங்கள். அதே நேரத்தில், நமது எண்ணங்கள், எழுச்சிகள் யாவையும் சற்று எண்ணிப் பாருங்கள். மரணத்தின் முன்னே அவைகள் எல்லாம் தூள் தூளென சிதறிப் போகின்றனவல்லவா? நாம் இறப்பதற்குள் சில விநாடிகள் சிந்தித்துப் பாருங்கள்.

- o "நாம் கட்டிவைத்த மூன்றடுக்கு மெத்தை!.
- o வாங்கி வைத்த மூன்று வேலி நிலம்!
- o பூட்டி வைத்திருக்கும் முன்னூறு சவரன் பொன் வடங்கள்.
- o சேமிப்பு அலுவகத்தில் (பாங்க்) சேர்த்து வைத்திருக்கும் மூன்று லட்சம் ரூபாய்"

அவ்வளவும் அந்தச் சில விநாடிகளில் தீர்ந்து, உடலை விட்டு உயிர் போன பிறகு, ஐயையோ! அதை நினைக்கவே பயமாக இருக்கிறதல்லவா! உண்மையான கிறிஸ்தவன் எதற்கும் அஞ்ச வேண்டியதே இல்லை அவன் என்றைக்கும் தன்னைக் கிறிஸ்துவின் அடைக்கலத்திலேயே ஒப்படைத்து விட்டிருப்பான். அவனுக்கு இந்த உலகத்தில்,

- o கட்டி வைத்த மாளிகை கிறிஸ்துவின் வேத வாக்கு.
- o வாங்கி வைத்த நிலம் கிறிஸ்துவின் ஞான மார்க்கம்,
- o பூட்டி வைத்த சவரன் கிறிஸ்துவின் அருள்'
- o சேர்த்து வைத்தப் பணம் கிறிஸ்துவின் பாடுகள் அவர் சிந்திய இரத்தம்.

மற்றவை எல்லாம் கிறிஸ்தவனுக்குத் தூசு. நிச்சயமாக மற்றவைகள் விண்ணிலே பரந்து போகும் தூசேதான்.

(பிலிப்பியர் 3 : 8)

கிறிஸ்து நமக்காகப் பிறந்தார். நமக்காகப் பாடுபட்டார். நமக்காக இறந்தார். நம் பாவங்களை இரட்சிப்பதற்காக

மீண்டும் உயிர் பெற்றார். அவர் உயிர்த்தெழுந்த போது உண்டான ஒளி சாதாரண ஒளியல்ல அது ஞான ஒளி. வானத்திலே செந்நிறத் தழும்பாய் செக்கச் செவேலென கோடி கோடி குவியல நிறைந்த சிவந்த மாணிக்கக் கற்க ளினின்று கிளம்பி வீசி செகத்தையே பிரகாசிக்கச் செய்யும் பேரொளி.

பாவத்தை அழித்து, புண்ணியப் பேரின்ப வீட்டிற்கு வெளிச்சம் அளிக்கும சுடர் ஒளி.

இருள் சூழ்ந்த இதயத்தில் கருணைச் சுவாலையை வீச வைக்கும தியாக ஒளி. அதுவே அமர ஒளி அதுவே கிறிஸ்து வின் ஞான ஒளி.

கிறிஸ்துவின் ஞான ஒளி உலகத்தின் எட்டு திக்கும் வீசுவதாக'

சமாதானத்தின நிழலிலே உலகம் என்றென்றும் இளைப பாறக் கிறிஸ்துவின் ஞான ஒளி படர்வதாக!

மாநில மக்களெலலாம மன நிம்மதியோடு வாழ்ந்து வணங்க கிறிஸ்துவின் ஞான ஒளி வழி காட்டுவதாக!

மனித குலமே மாசிலலாத நேசன் கிறிஸ்துப் பெருமானை வாழ்த்து!

உலகப பெரு மக்களே உலகம் உய்ய பாடுபட்ட புனிதன் ஏசுநாதனை வணங்கு!

கிறிஸ்துவ சமுதாயமே! நமக்கு வழிகாட்டியாகிய ஏசு நாதனுக்கு தலைவணங்கித் துதி செய்; அதுவே உனது கடமை; அதுவே உனக்கு மகிமை!

உலக மக்களுக்கும் இந் நூலை படிக்கும் மக்கள் சமுதாயத் திறகும், நீண்ட ஆயுளும, நலியா உடலும், குறையாச் செல்வ மும் பெருகி வாழக் கிறிஸ்துவின் ஞான ஒளி அருள் புரிவதாக அதுவே என் ஆசை! அதுவே என் பிரார்த்தனை'

(நலம்)

# இந்நூல் எழுதுங்கால் என் அறிவுக்கு ஆக்கம் அளித்த ஆதார நூல்களும் இதழ்களும்

பழைய ஏற்பாடு

புதிய ஏறபாடு

பரதேசியின் மோட்சப் பிரயாணம — ரெவ. எஸ். பால்

திரு அருட்பா — இராமலிங்க அடிகள்

காநதி அடிகளின் பொன்மொழிகள

நம் பரலோகத தந்தை — மறைதிரு ஆர். அருளப்பா, D.D.

அருங்கிளிக கனனி நாத்திகம (கவிதை)

— பாஸ்டர் ஒய். எம். சாலமோன்

பராபரன மாலே (கவிதை) — வேதநாயக சாஸ்திரி

திருக்குறள

அனபின ஆடசி — மறைதிரு ஆர். அருளப்பா

The Bible Remembrance

நவ பிரசஙகம — இ. ஜே. மாரல் (பாண்டி)

வேதாகம சரிததிரம — ரெவ. எல மத்தியாஸ் S C.

மாஜி மேற்றுணியார் சென்னை

கிறிஸதுவைபபறறி எனன நினேக்கிறீாகள — மறைதிரு ஆர். அருளபபா D D

He is altogether Lovely Poster Y.M. Solomon

ஜெபமாலே (கவிதை) — வேதநாயக சாஸ்திரி

கிறிஸதுவின அருள வேட்டல் (கவிதை) — திரு வி. க.

இரடசணய யாததிரிகம (கவிதை) — எச். ஏ. கிருஷ்ண பிள்ளை

மகாகவி பாரதியார் (கவிதை)

வளளலாா கணட ஒருமைபபாடு ம. பொ. சி.

ஏசு கிறிஸது யாா ? — மறைதிரு ஆர். அருளப்பா D.D.

God Speak to Modernman Arthur E-Lickly Washington D C.

கடைசி ஞாய தீர்பபு (கவிதை) — வேதநாயக சாஸ்திரி

விவேகானந்தர் சிகாகோ பிரசங்கங்கள்

சாவ சமய சமரசக் கீாத்தனே (கவிதை)

— மாயூரம் வேதநாயகம் பிள்ளை

| | |
|---|---|
| கிறிஸ்துநாதா அனுசாரம | —தாமஸ் அ. கெம்பிஸ் |
| Story of the Bible World | —Nelson Beecher Keyes Newyork |
| அனபில ஆறறல | —மறைதிரு ஆர். அருளப்பா D.D. |
| பால சரித்திரம (கவிதை) | —வேதநாயக சாஸ்திரி |
| பரம பொருள அலலது வாழ்க்கை நெறி | —திரு வி. க. |
| கிறிஸ்துவம | —சர்வதேச சய பிரசுரம் |
| சீருப புராணம | —உமறுப்புலவர் |
| உலகின ஒளி | —மறைதிரு. ஆர் அருளபபா D.D |
| இராமகிருஷ்ண உபநிஷதம | —இராஜாஜி |
| Modern Religion Movement in India | —J N. Farquhar |
| தறகால இந்தியா | —சுவாமி விவேகானந்தா |
| பட்டினத்தார் பாடலகள செய்கோ ல | —ம. பொ. சி |
| பெத்லகேம குறவஞசி (கவிதை) | —வேதநாயக சாஸ்திரி |
| சத்திய சோதனை | —காந்தி அடிகள் |
| தாயுமானவர் பாடல்கள் | • |
| தேமபாவணி (மூனறு காண்டங்கள்) | —வீரமாமுனிவர் |
| வளளலாரும பாரதியும | —ம பொ.சி. |
| Sin and The Salvation | —Thert Rev Bishop Lesslie New Bigin |
| சங்கொலி | —(கவிதை) நாமக்கல் கவிஞர் |
| இன்பசாகரம (கவிதை) | —அடைகலம் சுவாமியார் |
| ரகுபதி ராகவ (காந்தியடிகள்) | —இராஜாஜி |
| குணங்குடிமஸ்தான் பாடல | |
| தமிழ தூது | —தனிநாயக அடிகள் |
| Glory be to Jesus of Nazareth | — Sadu Sunder Sing |
| ஔவை குறள் | —ஔவையார் |
| மாணவருககு | —காந்தி அடிகள் |
| Missal For Young Catholics | —Geofrey Chapman London |

கிறித்துவமும தமிழும் —மயிலை திரு. ஸ்ரீனிவேங்கடசாமி
திருபபுகழ் —அருணகிரிநாதர்
சிதத்ா பாடலகள
சமரச சனமாாக்க போதமும் திறவும் —திரு. வி க.
தேமபாவணி (நாட்டு நகரப் படலம்)
—வித்வான் திரு. ந. சேதுரகுநாதன்
The Life of Blessed Mother —Rev. Daniel-A Ford S.J.
மனிதவாழககையும காந்தி அடிகளும —திரு வி. க.
ரிகவேதம
வளளுவர் வகுத்த வழி – ம பொ. சி.
இயேசுவின பேரில பதஙக —வேதநாயக சாஸ்திரி
நீதிநூல —மாயூரம் வேதநாயகம் பிள்ளை
சததியத்தின செயல —பிலிப்பு-தை-மில்லோ
சமரச தீபம் —திரு. வி. க.
தாவீதரசன் அம்மானை —சற்குணம் உவின்டிரேட் ஐயர்
திருக்காவலூா கலமபகம —வீரமாமுனிவர்
நறகருணை தியானமாலை —கால்ட்வெல் ஐயர்
வேத உதாரணத் திரட்டு —இரேணியஸ் ஐயர்
History of Christianity In Iindia —J. Hough
துஷணத்திக்காரம —(Robert de no Bile) தத்துவ போதகர்